

"நல்லாட்சி
நடத்துகிறார்
ஜெயலலிதா!"

குடும்பத்துடன் களிக்க...

# கல்கி

KALKI 5.2.2006 ரூ.8.00
96 பக்கங்கள்

# நத்திங் ஸ்பெஷல்!

CavinKare

# Tex-க்கு ஹலோ சொல்லுங்கள்
# ஆசிட்டிற்கு பை பை சொல்லுங்கள்!

வழங்குகிறோம் **Tex** உபயோகப்படுத்துவதற்கு மிகவும் எளிதாக சாஷே வடிவில் அறிமுகப் படுத்தப்படும் இந்தியாவின் முதல் டாய்லெட் க்ளீனர் இது. டெக்ஸ், நெடியை ஏற்படுத்தாமல் இருப்பதோடு ஆசிட்டைவிட அடர்த்தியாகவும் இருக்கிறது. எனவே, இது பவுலில் தங்கி, பின் சீராக பரவி விடாப் பிடியான கறைகளையும் நீக்குகிறது. உங்கள் டாய்லெட்டை பளபளக்கும் சுத்தத்துடன் வைத்திருக்கிறது!




விரையுங்கள்! டெக்ஸ்-ஐ வீட்டிற்கு எடுத்துச் செல்லுங்கள் ஆசிட்டிற்கு பைபை சொல்லுங்கள்.



ஆசிட்டிற்கு நோ சொல்லுங்கள்



கறைகளுக்கு நோ சொல்லுங்கள்



ஆசிட் புகைக்கு நோ சொல்லுங்கள்




# ஆசிடிற்கு பை பை

# சரவணா

பெங்களூர் காலேஜ்ல படிக்கிற சிம்பு, தன் நண்பனின் தங்கையான ஜோவை வெப் கேமரா வழியா பார்த்தவுடனே டாவடிக்க ஆரம்பிச்சுடறாரு. சிம்புவோட நல்ல நேரம், ஒரு கட்டத்துல ஜோ குடும்பத்தையே வில்லன் கோஷ்டி போட்டுத் தள்ளிடுது. தனி மரமா நிக்குற ஜோவை, தோப்பா இருக்குற தன் வீட்டுக்குப் பாதுகாப்பா கூட்டிட்டு வர்றாரு. இவங்களைக் குறிவைச்சு வில்லன் கோஷ்டி பின்தொடர...

ஸ்டாப்.. ஸ்டாப்.. என்ன 'கில்லி' கதையைத் திருப்பிச் சொல்றேன்னு பார்க்குறீங்களா? 'சரவணா'வும் அதே குட்டையில ஊறின மட்டைதாங்க!

ஏற்கெனவே பார்த்த கதையைக் கூட இரண்டரை மணி நேரம் உட்கார்ந்து பார்க்க முடியுதுன்னா, அது நிச்சயம் கே.எஸ். ரவிக்குமாரோட இயக்கத்தினால்தான். பழி தீர்ப்பதற்காகத் தன்னைத் தேடி அலையுற வில்லன் கோஷ்டியை சிம்பு சந்திக்கும் ஆரம்பக் காட்சிங்க வெகு ஜோர்.

தமிழ் சினிமா ஹீரோக்களோட பரம்பரைத் தொழிலான ரெளடியிசத்தைத்தான் படம் முழுக்கப் பண்றாரு சிம்பு. மூச்சுவிடாம வசனம் பேசறாரு. அங்கங்கே துறுதுறுப்பு. நடனத்தில் வழக்கம்போல் நளினம்.

முதல் பாதியில் சிரிக்கறதுக்கு காக கேட்கிறாங்க ஜோ. பின்னாடி பிக்கப்தான். சிம்பு நண்பனின் அண்ணனாக பிரகாஷ்ராஜ். ஃப்ளாஷ்பேக் விறுவிறுப்பா நகர உதவறாரு. உயர் படிப்பு படிச்சிருந்தாலும் தான் எப்படி அடிதடியில சிக்கினேன்னு சொல்லும்போது 'உச்' கொட்டத் தோணுது.

விவேக் காமெடி சுமார்தான். ஆனா சத்தமில்லாம கலக்கியிருக்கிறாரு நாகேஷ். அர்த்த ராத்திரியில ஃபுல் அடிச்சுட்டு பண்ற அலம்பல் ச்சோ ஸ்வீட்!

ஸ்ரீகாந்த் தேவா பாடல்கள், பின்னணி இசையில சிறு அதிர்வையும் ஏற்படுத்தலை. ஒரு பக்கம் சொட்டச் சொட்ட ஆக்ஷன், மறுபக்கம் ஃபேமிலி டிராமான்னு முயற்சித்திருக்காரு இயக்குனர். ஆனா ஃப்ளாஷ்பேக்கை நம்பியே கதை அமைஞ்சதால திரைக்கதை தடுமாறிடுது.

தமிழ் சினிமா, கதைத் தேர்வுலயும் மேக்கிங்லயும் புது ரூட்ல போக நினைக்கும்போது, கே.எஸ்.ரவிக்குமார் மாதிரியான இயக்குனர்கள் பின்னோக்கிச் செல்வது முறையோ? தகுமோ?

- **லஜ்ஜாவதி**



பா.ம.க எம்.எல்.ஏ ரவிராஜ் உட்கார்ந்து நோட் பேட்ல என்னமோ எழுதிக்கிட்டு இருந்தாரு.

"என்ன... பக்கத்து ரூம் எம்.எல்.ஏக்கு ஆட்டோ கிராபா?"ன்னு கேட்டா, "அதெல்லாம் ஒண்ணு மில்லீங்க. இன்னிக்கு சட்டமன்றத்துல என்ன

# ஆடின காலும் பாடின வாயும்...

அம்மா ஆட்சியோட க்ளைமேக்ஸ் கூட்டத் தொடருல்லப்பு இது... அதான் ஹாஸ்டல்ல நம்மூர் எம்.எல்.ஏ.க்கள்லாம் அழுது வழிய றாங்களா... இல்ல... ஜாலியாத்தான் இருக்காங்களான்னு தெரிஞ்சுக்கலாம்னு ஒரு விசிட் அடிச்சேன்.

ஒரு பக்கம் என்னடான்னா, ஏழெட்டு எம்.எல்.ஏங்க பொட்டி சட்டியோட பொறப்பட்டுக்கிட்டு இருந்தாங்க. 'என்னண்ணே... ஜோலி முடிஞ்சிருச்சா'ன்னு கொஞ்சம் நக்கலா கேட்டா, "ஆமாண்ணே... ரிட்டன் வர்றதுக்கு ஊர்ல போய் நம்ம முகத்த ஞாபகப்படுத்தணும்ல'ன்னுட்டு ரௌசு விட்டுச்சு ஒரு கரை வேஷ்டி.

திடீர்னு 'ஏ' பிளாக் பக்கம் ஒரே கூட்டம். என்ன ஏதுன்னு விசாரிச்சா, எல்லாம் கிராமத்து ஆளுங்க. "மச்சான்... இந்தத் தடவை எம்.எல்.ஏவை பார்த்துடாம வண்டியேறக் கூடாதுடா... ரெண்டுல ஒண்ணு பார்த்துடணும்... எல்லாரும் அவனவன் தலைல சத்தியம் அடிச்சுக்கங்கடா"ன்னு ஒரே சவுண்டு... உஷாரான செக்யூரிட்டி ஆளுங்க, கிராமத்து ராசாக்கள வெரட்டி வெரட்டி ஒரங்கட்ட, இதான் சமயம்னுட்டு நைஸா நான் ஹாஸ்டலுக்குள்ள குதிச்சுட்டேன்.

ஒரு ரூம்ல நம்ம பேசறதுன்னு சின்னதா ஒரு குறிப்பு எடுத்துட்டு இருக்கேன்"னு சிரிச்சாரு.

"இந்த அஞ்சு வருஷத்துல மறக்க முடியாத ஹாஸ்டல் அனுபவம் ஏதும் இருக்கா?"ன்னு ஒரு கொக்கியைப் போட்டேன்.

"ம்... ஒரு சூப்பர்மேட்டர் இருக்கு. ஒரு தடவை நான் இங்க தங்கியிருந்தப்போதான் சென்னைல பூகம்பம் வந்துச்சு. பயத்துல எல்லோரும் அடிச்சுப் பிடிச்சு கீழே இறங்கி ஓடினோம். அப்போ பார்த்தீங்கன்னா, சட்டமன்றத்துல எதிரும் புதிருமா நிக்கற எல்லா கட்சி எம்.எல்.ஏக்களும் இங்க ஒண்ணா சேர்ந்து ஓடினாங்க. அடேயப்பா... மறக்க முடியாத சிரிப்பான அனுபவம் அது"ன்னு திரும்ப குறிப்பு எடுக்க குனிஞ்சுட்டாரு ரவிராஜ்.

அப்படியே ஒவ்வொரு மாடியா ரவுண்ட்ஸ் போனா, ஒரு ரூம்ல பாட்டி, பேரன், பேத்திகளைக் கொஞ்சற சத்தம்.





ஒற்றன்

உள்ளே எட்டிப் பார்த்தா, நம்ம உப்பிலியாபுரம் சரோஜா எம்.எல்.ஏ. குடும்பம் சகிதமா உட்கார்ந்து சிரிச்சுப் பேசிக்கிட்டு இருந்தாங்க. அவிங்களுக்குத் தொந்தரவு கொடுக்க மனசில்லாம வெளில வந்தா, ஒரு கதர் எம்.எல்.ஏவை, கரை எம்.எல்.ஏ ஒருத்தரு ஓட்டிக்கிட்டு இருந்தாரு... என்னவா இருக்கும்னு லேசா காதைத் தீட்டிக்கிட்டேன்.

"என்ன மாப்ளே... வெயிட் அமௌண்ட்ல காரை வேற வாங்கிப்புட்ட... சீட்டு கிடைச்சுட்டா செலவுக்கு எங்க போவ? அம்மாகிட்டயே வந்து கேப்பியா"ன்னு நக்கல்விட, கதர்க்காரர் கண்டுக்காம நகர்ந்துட்டார்... எதிர்ல பார்த்தா, நம்ம மங்களூர் எம்.எல்.ஏ கணேசன்...

"இந்த ரூம் நமக்கு ராசியான ரூமு தம்பி... எம் பொண்ணுக்கு ரொம்ப நாளா காலேஜ் சீட்டு கிடைக்காம இழுத்துக்கிட்டே இருந்துச்சு. இங்க வந்து அப்ளிகேஷன் நிரப்பி போட்டுச்சா... உடனே சீட்டு கிடைச்சுடுச்சு... அதனால எந்த முக்கியமான



• கணேசன்



• ரவிராஜ்

விஷயமா இருந்தாலும் இந்த ரூம்ல வச்சித்தான் செய்யறது"ன்னு சொல்லிட்டு போன்ல பிஸியாயிட்டாரு. அவருக்கு டாட்டா சொல்லிட்டு ஹாஸ்டல் முழுக்க சுத்தினேன். பெரும்பாலான எம்.எல்.ஏங்க, என்கிட்ட விசாரிச்ச சங்கதி என்ன தெரியுமாப்பு?

"என்ன மாப்பு, நம்ம ரூம்ல இதுக்கு முன்னாடி தங்கியிருந்தவங்க அடுத்தடுத்து எலெக்ஷன்ல ஜெயிச்சவிங்கதானா... உனக்கு ஏதாச்சும் தெரியுமா..."



ஆஹா... ஆடின காலும் பாடின வாயும் சும்முனு இருக்காதுன்னு சும்மாவா சொன்னாய்ங்க!

படங்கள்: ராஜன்




**கல்கி**

**பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில்**
அச்சிட்டு வெளியிடுபவர் :
**கி. ராஜேந்திரன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
**சீதா ரவி**

ஆசிரியர் குழு :
**அனுராதா சேகர்**
**ஆர்.சி. ஜெயந்தன்**
**மு.மாறன்**

வடிவமைப்பு :
**எஸ். ஸ்டீஃபன்**
**பி.ஆர். ராஜன்**

தொலைபேசி :
2225 1522, 2225 0623,
2225 1324

தொலைநகல் :
044 - 22251021

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.440/-
ஆறு மாதம் : ரூ.220/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 65 யுஎஸ். டாலர்

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

ஒவ்வொரு இதழும் உங்கள் மேன்மைக்கு

# நிலா பிரச்சனை... கொதிக்கும்

'ஜாம்பவான்' படப்பிடிப்பில் தண்ணீர்த் தொட்டியில் நடிக்க வேண்டிய காட்சியொன்றில் நடிகை நிலாவுக்கு மினரல் வாட்டர் வழங்கப்படவில்லை. உடனடியாக அவர் படப்பிடிப்புத் தளத்தை விட்டு வெளியேற, சிக்கல்கள் உருவாயின. அதைத் தொடர்ந்து தற்போது தமிழ்த் திரைப்பட தயாரிப்பாளர் கவுன்சில், நிலா மற்ற படங்களில் நடிக்கத் தடை விதித்துள்ளது. இப்பிரச்சனை குறித்து நடிகைகளின் கருத்தைக் கேட்டறிந்தோம்.



• நிலா

**ப்ரியாமணி:**

சினிமா என்பது டீம் வொர்க். இதோ நான் நடித்துக் கொண்டிருக்கும் 'பருத்தி வீரன்' படப்பிடிப்பு ஊரைவிட்டுத் தள்ளி ஒரு காட்டில் நடந்து கொண்டிருக்கிறது. இங்கு எனக்கான சௌகரியங்கள் குறைவாக இருந்தாலும் சமாளித்துத்தானே ஆக வேண்டும். நான் முன்பு ஒரு படப்பிடிப்பில் நடித்துக் கொண்டிருந்தபோது தண்ணீர்த் தொட்டி ஒன்றில் இறங்க வேண்டியிருந்தது. ஆனால் தண்ணீர் முழுக்கப் பாசிகள். புகார் சொன்னபோது கையால் பாசிகளை நகர்த்திவிட்டு தொடர்ந்து நடிக்கச் சொன்னார்கள். நடித்து முடித்த பத்தாவது நாள் டைபாய்ட் காய்ச்சலில் படுத்தேன். பாரதிராஜா படப்பிடிப்பில் கூட அதிகாலை மூன்று மணிக்கு சில்லிடும் தண்ணீரில் என் பாதி உடல் மூழ்கும் காட்சியில் சுடுதண்ணீர் கேட்டும் மறுக்கப்பட்டது. மும்பை நடிகைகள் நம்மைப் போலில்லை. தைரியமாகக் கேட்டு விடுகிறார்கள்.



• ராணி!

**ரீமாசென்:**

எனக்கு இன்னும் தெளிவாக 'ஜாம்பவான்' படப்பிடிப்பில் என்ன நடந்ததென்று தெரியாது. எனக்கு யாரும் எவ்வித அசௌகரியத்தையும் இதுவரை ஏற்படுத்தியதில்லை. அப்படியே ஏற்பட்டாலும் படப்பிடிப்பை விட்டு வெளியேறுவது அநாகரிகம்.

**த்ரிஷா:**

மினரல் வாட்டர் பிரச்னையால் ஒரு படப்பிடிப்பே நின்று போயிருக்கிறது என்பதை நம்ப முடியவில்லை. தெலுங்கில் எங்களை ராணிபோல் நடத்துவார்கள். தமிழும் ஓ.கேதான்.

அதேசமயம் அது வேண்டும் இது வேண்டும் என்று நச்சரிக்கும் நடிகையும் நான் கிடையாது. ஷூட்டிங்கை விட்டு வெளியேறுவதை என்னால் நினைத்துக்கூட பார்க்க முடியவில்லை.



* அல்டாப்!



* டைபாய்டு!

**தேஜாஸ்ரீ:**

படப்பிடிப்புத் தளத்தில் சிரமங்கள் ஏற்படுவது இயல்பானதொன்று. அசுத்தமான நீரினால் தனக்கு ஏதேனும் தொற்று நோய் வந்துவிடக் கூடாதே என நிலா அச்சப்பட்டிருக்கலாம். அவர் கோரிக்கையிலுள்ள நியாயத்தையும் கவனிக்க வேண்டும். இதை உதாரணமாக வைத்து மும்பை நடிகைகளையெல்லாம் ஏதோ அல்டாப் பேர்வழிகள்போல் யாரும் சித்திரிக்கக் கூடாது. குஷ்பூ, சிம்ரன் எல்லாம் பிரச்னையின்றி நீடிக்கவில்லையா? நான் அந்த இடத்தில் இருந்திருந்தால் என் கைக் காசிலேயே மினரல் வாட்டர் வாங்கி என்னைப் பாதுகாத்திருக்கலாம். அதற்காக நிலாவுக்குத் தடைவிதிப்பதெல்லாம் சரி அல்ல. யாரும் யாரையும் தடுக்க முடியாது. தமிழ் சினிமா, நிலாவின் திறமையை இப்பிரச்னை மூலம் இழந்து விடக்கூடாது.

# நட்சத்திரங்கள்!

நிலா தொடர்பான பிரச்னை குறித்து தயாரிப்பாளர் சங்கத்தின் செயலாளரான ஏ.எல்.அழகப்பன் நம்மிடம் பேசினார்...

"அந்தப் பொண்ணு சினிமா பத்தி புரியாம பேசிட்டு இருக்கு. இப்பவும் கூட 'ஜாம்பவான்' தயாரிப்பாளர்கள் தன்கிட்டம் பகிரங்கமாக மன்னிப்பு கேட்கணும்னு மல்லுக்கு நிக்குது. அவனவன் கோடிக்கணக்குல பணம் போட்டுப் படம் எடுத்தா, தயாரிப்பாளர்கள் மேல குத்தம் சுமத்திட்டு கூலா தெலுங்குல நடிச்சுட்டு இருக்கு. தான் நடிக்கிற எல்லா படங்களிலும் ஏதாவதொரு பிரச்னை பண்றதே அவங்களுக்கு பொழப்பா போச்சு. சமரசம் பேசப்போனா 'தமிழ்நாடு மோசமான மாநிலம்'னு சொல்லுது. நிலாவை அறிமுகப்படுத்தின எஸ்.ஜே. சூர்யா தனக்கும் இப்பிரச்னைக்கும் சம்பந்தமில்லைன்னு சொல்லிட்டார். 'ஜாம்பவான்'ல உள்ள மீதிக் காட்சிகளை நிலா நடிச்சுக் கொடுக்காட்டி பின்விளைவுகளுக்குப் பெரிதும் வருத்தப்பட வேண்டியிருக்கும். வேறு படங்களிலும் நடிக்கவும் முடியாது" என்றார் சூடாக.

'ஜாம்பவான்' படப்பிடிப்பு ஐம்பது சதவீதம் முடிந்துள்ள நிலையில், இத்தனை களேபரங்களுக்கு மத்தியிலும் 'ஜாம்பவான்' தயாரிப்பாளர்கள் நிலா வருகைக்காக தொடர்ந்து தவம் கிடக்கிறார்கள். ஆனால் தமக்கு தொந்தரவு கொடுத்தவர்கள் மீது டெல்லி போலீஸில் புகார் அளிக்கப் போவதாக சவால் விட்டுச் சென்றுள்ளார் நிலா. பாவம் தமிழ் சினிமா!

- ச.ந.கண்ணன்



* அநாகரிகம்!



யும் திட்டம் தீட்டி பக்குவமாகச் செய்வதில் சரவணன் ஒரு வொய்ட் & வொய்ட் டெரரிஸ்ட்' என்றபோது அரங்கில் பலத்த சிரிப்பலை.

● ''காலேஜுக்கு கட் அடிச்சுட்டு, சத்யம் தியேட்டர்ல மேட்னியை முடிச்சுட்டு, அப்படியே தாத்தாவைப் பார்க்க வந்த காலேஜ் ஸ்டுடண்ட் மாதிரி இருக்கிறார் தயாநிதி'' என்று விவேக் ஐஸ் வைத்தபோது தயாநிதி குலுங்கிக் குலுங்கி சிரித்தார்.

# மெய்யான அப்பன்!



ஏவி.எம்முக்கே உரிய கம்பீரத்துடனும், அமைதியுடனும் நடந்திருக்கிறது ஏவி.எம். நினைவு அஞ்சல் தலை வெளியீட்டு விழா. கலைஞர் தலைமையில் தயாநிதிமாறன் வெளியிட, ஏவி.எம்.சரவணன் பெற்றுக்கொண்ட அந்த நிகழ்விலிருந்து சில சுவாரஸ்யங்கள்:

● கலைஞர் வந்தவுடன் திரையில் ஏவி.எம். பற்றிய செய்திப்படம் ஒளிபரப்பானது. ரேவதி சங்கரனின் செட்டிநாட்டு பாஷையில் ஒரு சின்ன ஃப்ளாஷ்பேக். 'பராசக்தி'யில் இருந்து சில காட்சிகள் ஒளிபரப்பானபோது, அரங்கில் பலத்த கைதட்டல். அடுத்த நிமிடம் ஜெயலலிதா வரும் இன்னொரு படக்காட்சி வந்தபோது அரங்கமே 'உஷ்'.

● 'வாழும் பெரியாரே' என்று கலைஞரை அழைத்துவிட்டுப் பேசிய சத்யராஜ், ''தன் பிள்ளைகளுக்கு இவ்வளவு பெரிய மகத்தான ஸ்தாபனத்தையும், பெருமைகளையும் விட்டுச் சென்ற ஏவி.எம்.தான் மெய்யான அப்பன்'' என்றபோது, சரவணன் கண்ணில் நீர் வராத குறை.

● 'நமஸ்தேஜி' என்று துவங்கி அரை நிமிடத்துக்கு இந்தியிலேயே பேசினார் பார்த்திபன். கலைஞரை வாழ்த்த தமிழில் வார்த்தைகள் தீர்ந்து விட்டனவாம்! 'எதை

● ''கடவுள் இல்லை என்று யாராவது சொன்னால் அவரை நான் ஸ்டுப்பிட் என்பேன்' என்று ஏவி.எம் தன்னுடைய நூலில் எழுதியிருந்ததைப் படித்த பிறகு, எப்படி தன்னந்தனியாக ஏவி.எம்மின் இடத்துக்கு வருவது என்று பயந்தேன். நல்லவேளை... 'கடவுள் இல்லை' என்று கூறும் சத்யராஜ் மேடையில் இருப்பார் என்று தைரியமாகப் புறப்பட்டுவிட்டேன்'' என்று கலைஞர் கலகலத்தபோது கூட்டம் ரசித்துச் சிரித்தது. ''ஆனபோதிலும் எதிர்காலத்தில் பல ஸ்டுப்பிட்டுகள் வருவார்கள்'' என்றபோது சத்யராஜிடம் ஸ்பெஷல் கைதட்டல்.

● 'சந்தர்ப்ப சூழ்நிலைக்காக கொள்கையை மாற்றிக்கொள்ளக் கூடாது' 'ஒரு டீம் ஸ்பிரிட்டோடு உழைத்தால் எதையும் சாதிக்கலாம்' போன்றவை கலைஞர் அடித்த பொலிட்டிகல் டைமிங் பஞ்சுகள். யாரை மனதில் நினைத்து என்றுதான் தெரியவில்லை!

**- முத்து**

படங்கள்: **புதூர் சரவணன்**




HO. 194/a, அண்ணாசாலை, ஆயிரம் விளக்கு, சென்னை - 600006.
போன்: 55345081; 082; 083; பேக்ஸ்: 28516799
B.O. 52, 3வது மாடி, ஸ்ரீ லக்ஷ்மி டவர்ஸ், ராஜா தெரு, கோவை - 641001.
போன்: 0422 - 3950482; 4356967; பேக்ஸ்: 2307961.
E - Mail: sritrave@satyam.net.in; web: www.sreetravels.net

**அனைத்து சுற்றுலாக்களுக்கும் அருமையான தங்கும் அறைகள் மற்றும் சைவ உணவுடன்**

**டில்லி – அமிர்தசரஸ் – சண்டிகர் – குலு – மணாலி – மணிக்கரன் – ஜீரோ பாயிண்ட் – சிம்லா – டில்லி**

ஏசி டீலக்ஸ் சுற்றுலா பயணத்தொகை: ரூ. 7,200/- + டிக்கெட்
தேதிகள்: ஏப்ரல் 21 முதல் அனைத்து வெள்ளிக்கிழமைகளில்
பயணம் முழுவதும் ஏசி அறைகள் மற்றும் ஏசி பஸ் வசதியுடன்

**மத்திய அரசு ஊழியர்களுக்கான LTC சுற்றுலா**
**Non A/C 2 X 2 அரசு சுற்றுலா கழக பேருந்துகளில்**
பயணத்தொகை: ரூ. 6,900/- + டிக்கெட்
தேதிகள்: ஏப்ரல் 18 முதல் அனைத்து ஞாயிற்றுக்கிழமைகளில்
டில்லியில் ஏசி அறைகள் மற்றும் ஏசி பஸ் வசதியுடன்

**Classic Tours 2X2 NON AC பஸ் மூலம்**
பயணத்தொகை: ரூ. 6,000/- + டிக்கெட்
தேதிகள்: ஏப்ரல் 16 முதல் அனைத்து செவ்வாய்க்கிழமைகளில்
டில்லியில் ஏசி அறைகள் மற்றும் ஏசி பஸ் வசதியுடன்,

**குளுகுளு காஷ்மீர் with**
**டில்லி - அமிர்தசரஸ் - ஜம்மு வைஷ்ணவி**
பயணத்தொகை: ரூ. 7,900/- + டிக்கெட்
தேதிகள்: 21.04; 01.05; 11.05; 21.05
டில்லியில் ஏசி அறைகள் மற்றும் ஏசி பஸ் வசதியுடன்

**கேரள சுற்றுலா**
நாட்கள்: 6 பயணத்தொகை: ரூ. 3,500/- + டிக்கெட்
தேதிகள்: ஏப்ரல் 23 முதல் அனைத்து வெள்ளிக்கிழமைகளில்

**கல்கத்தா - டார்ஜிலிங் - கேங்டாக் சுற்றுலா**
பயணத்தொகை: ரூ. 6,500/- + டிக்கெட்
தேதிகள்: ஏப்ரல் 21 முதல் அனைத்து வெள்ளிக்கிழமைகளில்
கல்கத்தாவில் ஏசி அறைகள் மற்றும் ஏசி பஸ் வசதியுடன்

**முக்திநாத் தரிசனம்**
ஹெலிகாப்டர் மூலம்
கோரக்பூர் - லும்பினி - போக்ரா - முக்திநாத் - காட்மாண்டு
பயணத்தொகை: ரூ. 16,000/- + டிக்கெட்
தேதிகள் 23.04.2006; 21.05.2006

**இலங்கை சுற்றுலா**
ரூ. 18,500/- நீங்கள் விரும்பும் தேதிகளில்
For 4 persons Minimum

**திருக்கைலாயம் - மானசரோவர் யாத்திரை**

ரயில் மூலம்: ரூ. 53,000/- கோரக்பூர் வரை ரயில் பயணம்
பயணத் தேதிகள்: 31.05; 30.06; 30.07; 27.08
விமானம் மூலம்: ரூ. 63,000/- டில்லி - காத்மாண்டு - டில்லி விமானப்பயணம்
பயணத் தேதிகள்: 03.06; 02.07; 01.08; 30.08
சென்னையில் இருந்து செல்லும் எமது பிரத்யேக சமையல்காரர்களால் தயாரிக்கப்படும் சைவ உணவுடன்.
17 யாத்திரைகளை வெற்றிகரமாக முடித்திருக்கிறோம்; திருப்பயணம் முழுவதும் வீடியோ எடுத்துத் தரப்படும்.

**அனைத்து சுற்றுலாக்களுக்கும் வங்கி ஊழியர்களுக்கான LTC வசதி உண்டு.**
10 வயதுக்குட்பட்ட **குழந்தைகளுக்கு பயணக்கட்டணம் 50% மட்டுமே**

பரபரப்பான அரசியல் சூழல்தான். ஆனாலும் எவ்வித பதற்றமுமின்றி நிதானமாக இயங்கிக் கொண்டிருக்கிறார் நல்லகண்ணு. தமிழக அரசு, விஜயகாந்த், கூட்டணி சலசலப்பு என்று எதைக் கேட்டாலும் 'சுரீர்' பதில்கள்தான்... அவருடனான சந்திப்பிலிருந்து...

# "வைகோ கடிதமெழுதியதில் எந்தத் தவறுமில்லை!"

**2001-ம் ஆண்டு நடந்த சட்டமன்ற தேர்தலில் ஜெயலலிதாவோடு கூட்டணி அமைத்து தேர்தலைச் சந்தித்தீர்கள். அவர் ஆட்சிக்கு வர உதவியாக இருந் தது குறித்து இப்போது என்ன சொல் கிறீர்கள்?**

"அப்போது எங்களுக்கு வேறு வாய்ப் பில்லை. தி.மு.க., பா.ஜ.கவோடு இருந்தது. அந்தச் சூழலில், ஜெயலலிதா, தன்னைத் திருத்திக் கொண்டு நல்லாட்சியைக் கொடுப்பார் என்று எதிர்பார்த்தோம். ஆனால் மே மாதம் ஆட்சிக்கு வந்தவர் ஆறு மாதத்தில் வேலை வாய்ப்பைத் தடை செய் யும் வகையில் சட்டத்தைக் கொண்டு வந் தார். சாலைப் பணியாளர்களை மீண்டும் பணியில் அமர்த்த வேண்டும் என்று பல முறை கேட்டுக்கொண்டும் செய்யவில்லை. இப்போது நீதிமன்றம் சொல்லியும் மறுக்கப் படுகிறது. கூட்டணி கட்சி என்ற முறையில் எங்களைக் கலந்தாலோசிக்காமல் 'எடுத் தேன், கவிழ்த்தேன்' என்று செயல்பட்டார். சிறிதும் ஜனநாயகத் தன்மை இல்லாத வகை யில் அவரது நடவடிக்கைகள் அமைந்தன. அந்த நிலையில் நாங்கள் சற்று விலகி வந் தோம். ஆனால் அரசு ஊழியர்களின் உரிமை களைப் பறித்து ஒன்றரை லட்சம் ஊழியர் களை டிஸ்மிஸ் செய்தது போன்ற சர்வாதி கார நடவடிக்கைகள், அவர் சற்றும் திருந்த வில்லை என்பதையே பளிச்சென்று காட்டின."

**2004 பாராளுமன்ற தேர்தல் தோல் விக்குப் பிறகு பல மக்கள் விரோத நடவடிக்கைகளை வாபஸ் பெற்றதன் மூலமும், பல சலுகைகளை வாரி வழங்கி யதன் மூலமும் இழந்த செல்வாக்கை மீண்டும் ஜெ. பெற்று வருகிறார் என்ற பேச்சு இருக்கிறதே!**

"நான்கு வருடமாக கொடுமையான மக்கள் விரோத ஆட்சியை நடத்திவிட்டு. இப்போது சலுகைகளை அறிவிப்பது எதற் காக என்று மக்களுக்குத் தெரியாதா?! அவர் கள் என்ன முட்டாள்களா? மக்கள் யோசிக் கிறார்கள். கேபிள் தொலைக்காட்சியைக் கையகப்படுத்துவது உட்பட அவரது சமீபத் திய அறிவிப்புகள் அரசியல் ஆதாயத் தையும், காழ்ப்புணர்ச்சியையும் வெளிப் படுத்துபவைதான். மக்கள் இதை உணர்ந் திருக்கிறார்கள். சட்டமன்றத்தில் எதிர்கட்சி யினரின் குரல் முடக்கப்படுகிறது. பறிக்கப் பட்ட பல உரிமைகள், இன்னமும் அரசு ஊழியர்களுக்கு மறுக்கப்பட்டு வருகின்றன. விவசாயிகள் நல வாரியம் என்று துவக்கப் பட்டது. அதில் தொழிலாளர்களின் ஏழு கோடி ரூபாய் டெபாஸிட் செய்யப்பட்டு முடக்கப்பட்டு விட்டது. இப்போது உழவர் பாதுகாப்பு திட்டம் என்ற பெயரில் விளம் பரப்படுத்தி ஊருக்கு நான்கு ஆளும் கட்சிக் காரர்களைப் பிடித்து உதவி செய்கிறார்கள். இதனால் விவசாயத் தொழிலாளர்கள் கடும் கோபத்தில் இருக்கிறார்கள். தமிழ்நாட்டில் வறட்சி என்று பேசியதற்காக என் மீது வழக்கு போட்டார் ஜெ. சகிப்புத்தன்மை கொஞ்சமும் இல்லாதவர். இப்போது பன்னி ரண்டு லட்சம் அரசு ஊழியர்களுக்கு ஏதோ பெரிதாகச் செய்து விட்டதாகச் சொல்கிறார் கள். ஆனால் அவர்களை முன்பு பதவி நீக்கம் செய்து, ஜெயிலில் போட்டுக் கொடு மைப்படுத்தியதை எல்லாம் அவ்வளவு சீக் கிரம் மறக்க முடியுமா? உண்மையில் இப் போது அரசு ஊழியர்கள் - ஆசிரியர்கள் ஏழு லட்சம் பேர்தான் இருப்பார்கள். டாக்

டர்கள், ஆசிரியர்கள் சுமார் மூன்று லட்சம் பேர் தொகுப்பூதியத்தில் இருக்கிறார்கள். அவர்களுக்கு எந்தச் சலுகைகளும் கிடையாது. இரண்டு லட்சம் பணியிடங்கள் காலியாக இருக்கின்றன. அந்தப் பணியிடங்களை நிரப்புவோம் என்ற அறிவிப்பு இப்போது வந்து என்ன பயன்? தேர்தல் விரைவில் வரும் நிலையில் ஜெயலலிதாவால் ஒரு காலியிடத்தைக் கூட நிரப்ப முடியாது. எல்லாம் ஏமாற்று வேலை. 'இந்தச் சலுகைகள் தேர்தலை மனத்தில் வைத்தே செய்யப்படுகின்றன' என்பதில் உழைக்கும் வர்க்கம் தெளிவாக இருக்கிறது. தப்பித் தவறி ஜெ.வுக்கு மீண்டும் ஆட்சிப் பொறுப்பு கிடைத்தால் 'வேதாளம் மீண்டும் முருங்கை மரம் தாவும்' என்பது அவர்களுக்கு நன்றாகவே தெரியும்."





**நீங்கள் இப்படிச் சொல்கிறீர்கள். ஆனால் சமீபத்தில் நடந்த கருத்துக் கணிப்புகளில் ஜெ.செல்வாக்கு பெற்று வருவது தெரிய வந்திருக்கிறதே?**

"நீங்கள் குறிப்பிடும் கருத்துக் கணிப்புகள் தெளிவற்றவை. அவற்றை அடையாளமாக எடுத்துக்கொள்ளக் கூடாது.

**உங்கள் கூட்டணி அப்படியே கட்டுக்கோப்பாக தேர்தலைச் சந்திக்குமா? சீட்டு பிரிப்பதில் நிச்சயம் பிரச்னை வரும் என்பதுதானே பரவலாகச் சொல்லப்படுகிற கருத்தாக இருக்கிறது?**

"எங்கள் கூட்டணியில் எந்தப் பிரச்னையும் வராது. ஜெயலலிதா ஆட்சியை அகற்ற வேண்டும் என்பதில் நாங்கள் அனைவரும் உறுதியாக இருக்கிறோம். இதற்காகத்தான் வைகோ உட்பட கூட்டணித் தலைவர்கள் கடந்த மாதம் 18-ம் தேதி முதல் ஜெ.வை விரட்டுவோம் என்ற பிரசாரத்தில் தீவிரமாக இறங்கியிருக்கிறோம். இதே கூட்டணி



சீட்டுக்களை சுமுகமாகப் பிரித்துக் கொண்டு பாராளுமன்ற தேர்தலைச் சந்தித்ததே! அதே இணக்கமான, சூழல் இப்போதும் தொடரும்.

**தேசிய பேரிடர் நிவாரண நிதி வழங்குவதில் சில விதிமுறைகளைத் தளர்த்தக் கோரியும், தமிழக அரசு கேட்ட தொகையை வெள்ள நிவாரண**

மாக வழங்கக் கோரியும் வைகோ, பிரதமருக்குத் தனியாகக் கடிதம் எழுதியிருப்பது தமிழக அரசின் செயல்பாடுகளுக்கு ஆதரவான ஒரு செயலாகக் கருதப்படுகிறதே!

"கடுமையான மழை மற்றும் வெள்ளத்துக்குப் பிறகு ஜனநாயக முற்போக்கு அணி மற்றும் நாங்கள் உட்பட நாற்பது பாராளுமன்ற உறுப்பினர்களும் பிரதமரைச் சந்தித்து உடனே தேவையான நிதியைத் தமிழகத்துக்குத் தர வேண்டும் என்று கேட்டுக் கொண்டோம். மத்திய அரசும் ஆயிரம் கோடி ரூபாய் கொடுத்திருக்கிறது. மாநில அரசு விதிமுறைகளையும், நடைமுறைகளையும் அனுசரித்து நிதியைப் பெற வேண்டும். மத்திய அரசும் கொடுக்க வேண்டும். இது சம்பந்தமாக ஒரு அரசியல் கட்சியின் பொதுச் செயலாளர் என்ற முறையில் வைகோ கடிதம் எழுதியதில் எந்தத் தவறும் இல்லை. 'மக்கள் பிரச்னை இது' என்ற அடிப்படையில்தான் இந்த விஷயத்தைப் பார்க்க வேண்டுமே தவிர ஜெ.வுக்கு ஆதரவாகச் செயல்படுகிறார் என்று திசை திருப்பக்கூடாது. பல பிரச்னைகளில், நாங்கள் மத்திய அரசுக்கும் மாநில அரசுக்கும் கடிதங்கள் எழுதிக் கொண்டுதான் இருக்கிறோம்."

**நடிகர் விஜயகாந்த் அரசியல் கட்சியைத் துவக்கியுள்ள நிலையில், வரும் தேர்தலில் தமிழகத்தில் மூன்றாவது அணி அமையும் போலிருக்கிறதே!**

"தமிழ்நாட்டில் இரண்டு அணிகள்தான். மற்றவை உதிரிகளே. மூன்றாவது அணிக்கு வாய்ப்பே இல்லை."

**வரும் தேர்தலில் ஜெயலலிதா அரசின் ஊழல்கள் முக்கியப் பிரச்னையாகப் பேசப்படுமா?**

"ஊழல் என்பதைவிட, அவரது மக்கள் விரோதப் போக்கும், சர்வாதிகார போக்கும் கடுமையான விமர்சனத்துக்கு உள்ளாகும். அதற்காக ஜெயலலிதா ஆட்சியில் ஊழலே இல்லை என்று சொல்ல மாட்டேன்."

**பன்னிரண்டு மத்திய அமைச்சர்களும் தமிழகத்துக்கு ஒன்றும் செய்யவில்லை என்று சொல்வது மட்டுமல்லாமல் மத்திய அரசை கடுமையாகவும் விமர்சித்து வருகிறார் ஜெ. இந்த நிலையில் மத்தியில் அமைச்சரவையில் உங்கள் கூட்டணி கட்சிகள் பங்கு வகிப்பது, தேர்தல் கண்ணோட்டத்தில் பார்க்கப் போனால் ஒரு சுமைதானே!**

"தமிழ் செம்மொழி, சேது சமுத்திர திட்டம், அகலப்பாதை திட்டங்கள், சாலை மேம்படுத்தல், தகவல் தொடர்பு துறையில் ஆக்கபூர்வமான சாதனைகள் என்று பல பணிகள் நடந்து கொண்டு தான் இருக்கின்றன. எனவே மத்திய அரசைக் குறை சொன்னால் தக்க பதிலடி கொடுக்கப்படும். ஆனால், மாநில அரசு பல துறையில் என்ன செய்தது என்ற கேள்வி எழும். ஏனென்றால் நடைபெறப்போவது மாநிலத் தேர்தல். இந்தத் தேர்தலில் ஜெயலலிதாவின் செயல்பாடுகள்தான் எடைபோட்டுப் பார்க்கப்படும். கல்வி, பஞ்சாயத்து, நிதி நிர்வாகம், போலீஸ் என்று பல துறைகளை எடுத்துக் கொண்டால் பல தவறுகளும் முறைகேடுகளும் நடந்து வருகின்றன. உதாரணமாக சென்னை மாநகராட்சியைச் சொல்லலாம். மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு மேயரை, 'இரண்டு பதவி வகிக்கக் கூடாது' என்று சட்டம் போட்டு அகற்றி விட்டார்கள். அதன் பிறகு துணை மேயரைப் போட்டார்கள். ஆனால் அவராலும் மக்கள் நலப் பணிகளைச் செய்ய முடியவில்லை. இப்போது அவரையும் காணோம். இந்தச் செயல்பாடுகளில் பாதிக்கப்பட்டிருப்பது மக்கள் நலன்தான். சென்னை மாநகரின் அறுபது லட்சம் மக்கள் பிரச்னைகளைக் கேட்க இப்போது நாதி இல்லை."

**- ப்ரியன்**



"ஒரு நல்ல நாளா பார்த்து அரங்கேற்றம் பண்ணிடுங்க."

"புரியலையே டாக்டர்!"

"எல்லா பல்லும் நல்லா ஆடுதுன்னு சொன்னீங்களே!"

**- ஆர். தங்கராஜ்**




# போட்டி முடிவு-2

'செல்போன் ஜோக்ஸ்'னதும் வந்து குவிஞ்ச எஸ்.எம்.எஸ். ஸாரி... ஜோக்குங்க ஏராளம்... தாராளம். அதுல 'லகலக' ரிங் டோன் மாதிரி சிரிக்க வைச்சு, சென்னை தூத்துக்குடி மெட்டல்ஸ் வழங்கும் ப்ரீத்தி மிக்ஸியை பரிசாகப் பெறுபவர் ப்ரணா.



"என்னது... அந்த செல்போன் கம்பெனியில யாருமே கொடுக்காத 'ஆஃபர்' கொடுக்கறாங்களா?"

"ஆமாம்... ஒரு தரம் ரீசார்ஜ் பண்ணினா போதும்.. இந்த ஜன்மம் மட்டுமில்லாம ஏழேழு ஜென்மத்துக்கும் 'இன்கமிங்' ஃப்ரீயாம்..."

- ப்ரணா, ஐதராபாத்

*பிரசுரத்துக்குத் தேர்வாகி சன்மானம் பெறும் ஜோக்ஸ்...*

"அந்த நடிகை கல்யாணத்தன்னிக்கே மூடு அவுட்டாமே... ஏன்?"

"மாப்பிள்ளை, லைஃப் லாங் வசதியுள்ள செல்போனை அபசகுனமா கொடுத்துத் தொலைச்சிட்டாராம்!"

- பி.ஜி.பி. இசக்கி

• • •

"உங்க படத்தை சின்ன பட்ஜெட்டில் எப்படி எடுத்து முடிச்சீங்க?"

"செல்போன் கேமரா மூலமாத் தான்.."

- ஆர்.விஸ்வநாதன்

"நமது உடலில் ஏராளமான 'செல்'கள் இருக்கின்றன!"

"'ரிலையன்ஸா'... 'நோக்கியா'வா சார்...!"

- கே.எம்.ரவிச்சந்திரன்

• • •

"இரவு பகல் பாராது உலகம் முழுவதும் உங்களுக்காக நான் பேச வேண்டியிருப்பதால், தொண்டர்கள் மாலை, பொன்னாடைகளுக்குப் பதிலாக செல்போன் ரீசார்ஜ் கார்டுகளைத் தரும்படி கேட்டுக் கொள்கிறேன்."

- நா.துளசிராமன்

• • •

"சார்! என்னோட செல்போன் தொலைஞ்சு போச்சு!"

"எப்பவும் எங்கே வச்சிருப்பீங்க!"

"காதுலதான்!"

- என்.உஷாதேவி

• • •

"ஹலோ சீதா... இங்க ரெண்டு மான் இருக்கு... நீ கேட்டது புள்ளி மானா... இல்ல ஒல்லி மானா?"

- ப்ரணா





# "என் அருமை யாருக்கும் புரியல!"

–சடகோபன் ரமேஷ்

இத்தனை வருடங்களாக தமிழக கிரிக்கெட் அணி வீரராக அடையாளம் காணப்பட்டவர் சடகோபன் ரமேஷ். ஆனால் சமீபத்தில் இவர் தமிழக அணியிலிருந்து கழற்றிவிடப்பட, இதுதான் சந்தர்ப்பம் என்று கேரள அணி, ரமேஷை கொத்திக் கொண்டது. இரண்டு செஞ்சுரிகள்; நானூறு ரன்கள் (ஆவரேஜ் - 80 ரன்கள்) என சமீபத்திய ரஞ்சி சீஸனில் வெளுத்து வாங்கியிருக்கிறார் ரமேஷ்.

"ஒரேயொரு சீசன்ல சரியா விளையாடலை. உடனே என்னை தமிழ்நாடு அணியிலிருந்து விலக்கிட்டாங்க. பத்து வருடங்கள், நூறு ஃபர்ஸ்ட் கிளாஸ் மேட்ச்சுகள்னு விடாம ஆடினவனுக்கு ஒரு சரிவு ஏற்படக் கூடாதா? மற்ற மாநிலத்துல இப்படியொரு பிளேயரை அவ்வளவு சுலபத்துல விட்டிருக்க மாட்டாங்க.

அந்தச் சமயம் பார்த்து கேரளாவிலிருந்து அழைப்பு வந்தது. எந்த இடத்துல நம்ம அருமை புரியுதோ அங்க இருக்கறதுதான் நமக்கும் மரியாதை இல்லையா? அணி மாறிட்டேன்.

இப்போ கேரளா டீம் முழுசா நம்மை நம்பி இருக்கும்போது பொறுப்பும் ஆர்வமும் அதிகமாகுது. இன்னைக்கு என் செஞ்சுரிகளையும் கேரள அணிக்கான என் பங்களிப்பையும் பி.சி.சி.ஐ. உத்துப் பார்த்திட்டிருக்குன்னு செய்தி காதுல விழும்போது வேகம் இன்னும் கூடுது.

கேரள அணியில ஆடறது ஒண்ணும் புதுசா தெரியலை. கேரள வீரர்கள் நிறைய பேர் இங்க நடக்குற லீக் மேட்சுகள்ல ஆடியிருக்காங்க. இரு அணிகளும் ஒண்ணா சௌத் ஸோனுக்காக ஆடியிருக்கோம். எனக்கு மலையாளம் புரியாட்டியும் அவங்களுக்குத் தமிழ் தெரியும்ங்கிறதால மொழிப் பிரச்னையும் பெருசா இல்லை." என்று புது உற்சாகத்துடன் பேசும் ரமேஷ், சென்னையிலுள்ள இந்தியா பிஸ்டன் நிறுவனத்தில் மார்க்கெட்டிங் மேனேஜராகப் பணி புரிகிறார்.

தமிழ்நாடு இம்முறை ரஞ்சி அரையிறுதிக்குச் செல்லும் தகுதியை இழந்ததைப் பற்றிக் கேட்டால் "நான் தமிழ்நாடு டீம்ல இருந்திருந்தா ஒரு வேளை நிலைமை மாறியிருக்கும்னு சொல்ல மாட்டேன். ஆனா நிச்சயம் என் அனுபவங்களும் ஆலோசனைகளும் கை கொடுத்திருக்கும். அடுத்த அஞ்சு வருஷத்துக்கு என்னால ரஞ்சி டிராபியில ஆட முடியும். அதுக்குள்ள இன்னொரு திருப்புமுனை ஏற்படாதான்னு காத்திட்டிருக்கேன்" என்றவர், இறுதியாக தமிழ்நாடு கிரிக்கெட் சங்கத்துக்கு ஒரு வேண்டுகோள் வைத்தார்.

"மற்ற மாநிலங்கள்ல என்ன நடைமுறைன்னா, எந்த வீரருக்கு இந்திய அணியில ஆட வலுவிருக்கோ, அவருக்கு நிறைய வாய்ப்புகள் ஏற்படுத்தித் தருவாங்க. ஸோன் செலக்டரும் குறிப்பிட்ட வீரர் இந்திய அணியில இடம் பெறுகிற வரைக்கும் ஓயமாட்டார். ஆனா இங்க அந்த மாதிரியான ஊக்கங்கள் கிடையாது. இந்நிலைமை கட்டாயம் மாறணும். ஒரு தமிழனை இன்னொரு தமிழன் ஏத்திவிடாட்டி, அப்புறம் வருங்கால இந்திய கிரிக்கெட்ல தமிழ்நாட்டோட சுவடுகளே அடியோட இல்லாம போயிடும்."

- ச.ந.கண்ணன்







## கூட்டணி அதர்மம்!

மிகவும் உத்தமர் போல்பேசி வந்த தேவேகௌடா தமது மகனைக் காட்டிலும் பெரிய பல்டி அடிக்கிறார்!

மதச்சார்பற்ற ஜனதாதளம் உடைந்து, மதச்சார்புள்ள பா.ஜ.கவுடன் கைகோக்கத் தயாராகிறது!

சோனியா காந்தியின் தலையீடும் இவ்விதழ் அச்சான பிறகு 27.1.06 அன்று நடைபெறும் சட்டசபை பலப்பரீட்சையும் என்ன முடிவுகளை இறுதியாக நிலைநிறுத்தும் என்று இத்தலையங்கம் எழுதப்படுகிறபோது தெரியவில்லை. ஆனால், கர்நாடக அரசியல் சூழல் மூன்றாந்தர நிலைக்கு இறங்கிவிட்டது மட்டும் மிகத் தெளிவாகத் தெரிகிறது.

எக்கட்சிக்கும் தனி மெஜாரிட்டி இல்லாத நிலையில், காங்கிரசுடன் கூட்டணி ஆட்சி அமைத்தது ஜனதா தளம் (எஸ்). இந்தக் கூட்டணி, அரசியல் கொள்கை ரீதியாக முரணற்ற கூட்டணிதான். ஆனால் காங்கிரஸ் தலைவர்கள் சும்மாயிராமல் தேவேகௌடா தரப்பைச் சீண்டியவண்ணம் இருந்தார்கள். முதல்வர் தரம்சிங் எவ்வளவு முயன்றும் கூட்டணி தர்மத்தைக் கட்டிக்காக்க இயலவில்லை. தேவே கௌடா கட்சியின் பிரிவினை அரசியல்வாதியான சித்தராமய்யாவின் ஆதரவு பெற்று, உள்ளாட்சித் தேர்தலில் இறங்கினார்கள். இத்தேர்தலில் ஓரிரண்டு தொகுதிகளை



# கல்கி




2006 பிப்ரவரி 5
பார்த்திப தை 23
மலர் : 64
இதழ் : 27


தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




வெல்வதற்காகச் செய்யப்பட்ட இந்த சில்மிஷம், தேவேகௌடா தரப்புக்கு ஆத்திரமூட்டியது.

குற்றச்சாட்டுகளைப் பரிமாறிக் கொண்டதில் வார்த்தைகள் தடித்துப்போய், தேவேகௌடா அவமானப்படுத்தப்பட்டார்.

கூட்டணியின் நலன் கருதியும் கர்நாடக மாநில மக்களின் நலன் கருதியும் இந்தக் கசப்புகளை ஒதுக்கி வைத்துவிட்டு காங்கிரஸ் - ஜனதா தளம் (எஸ்) தலைவர்கள் ஒத்துப்போயிருக்கலாம். ஆனால் முரண்பட்டார்கள். தேவேகௌடாவின் மகன் குமாரசாமி, மூர்க்கப் பிடிவாதமாகக் கட்சியை உடைத்து பா.ஜ.கவுடன் இணைந்து ஆட்சியை அமைக்க முற்பட, இதனால் தமது இதயமே நொறுங்கிவிட்டதுபோல் முதலில் பேசினார் தேவேகௌடா. காங்கிரஸ் தலைமை அசைந்து கொடுத்து, அவரை அழைத்து ஏதும் பேச முற்படாமல், ஹைதராபாத்தில் மாநாடு நடத்திக் கொண்டிருக்க, கௌடா பார்த்தார்... தமது மகனை வழிக்குக் கொண்டுவர முயற்சி செய்வதாகச் சொல்லி, சென்று பேசிவிட்டு, தாமே தோசையைத் திருப்பிப் போட்டு மகன் தரப்புக்கு மாறிவிட்டார்!

அதாவது, மதச்சார்பற்ற ஜனதா தளத்துக்கு, மதச்சார்புள்ள பா.ஜ.கவுடன் கூட்டணி அமைப்பது தவிர, வேறு வழியில்லை என்பது தேவேகௌடாவின் வாதமாகிவிட்டது!

இதே நாடகத்தின் இன்னொரு காட்சியாக, கர்நாடக பா.ஜ.க. எம்.எல்.ஏக்கள், தக்க பாதுகாப்பு ஏற்பாடுகளுடன் தமிழ்நாட்டுக்குச் சுற்றுலாப் பயணம் அனுப்பப்படுகின்றனர்! குமாரசாமி ஆதரவாளர்கள் கோவா ஹோட்டல் ஒன்றில் 'சிறை' வைக்கப்படுகின்றனர்! அதாவது, அவர்கள் கர்நாடகாவில் தொடர்ந்து இருந்து வந்தால், காங்கிரஸ் தலைமை வீசும் பணத்துக்கு விலைபோய், கட்சி மாறிவிடுவார்கள் என்கிற அச்சம் அக்கட்சிகளின் தலைமைக்கு!

ஆகக்கூடி, அந்தக் கட்சி எம்.எல்.ஏக்களின் தரம் எத்தகையது என்பது தெளிவாகிற தல்லவா? விலை பேசுவதும் விலை போவதும் அரசியல்வாதிகளின் 'தொழிலுரிமை'




என்பதாகவே நிலைமை மாறிவிட்டது. 'குதிரை வியாபாரம்' என்கிற கள்ளத்தனத்துக் கெல்லாம் இடமின்றி, பட்டவர்த்தனமாக பேரங்கள் பேசப்படுகின்றன; படிகின்றன!

அரசியல் கட்சிகளும் அதன் தலைவர்களும் இவ்வளவு கேவலமான சந்தர்ப்பவாதத்தில் ஈடுபட்டால், மக்கள் எதை நம்பி அவர்களுக்கு வோட்டுப் போட முடியும்?

கூட்டணிக் கட்சிகள் இந்திய அரசியலில் அதிகரித்து வருகின்ற நிலையில், இந்தப் போக்கு நிலவுவது மிகவும் கவலைக்கிடமானது. இன்று மத்தியில் மட்டுமின்றி, பல மாநிலங்களிலும் கூட்டணி அரசுதான்.

இந்நிலையில், அரசியல் ஆதாயங்களுக்காகவும் பணத்துக்காகவும் கூட்டணி தர்மத்தைப் புறக்கணிக்கும் போக்கு தொடருமேயானால், நாட்டில் குழப்பமும் அராஜகமும்தான் அதிகரிக்கும். அரசுகள் கவிழ்வதும் கலைவதும், மறுதேர்தல்கள் - அவற்றுக்கான செலவுச் சுமைகள் என்று அரசியல் சூழல் ரணகளமாவதும் நாட்டின் வளர்ச்சிக்குத் தடை. மக்களின் நம்பிக்கைக்குத் தடை.

கட்சித் தாவல் தடைச் சட்டம் என்பதாக ஒன்று ஏற்கெனவே இருக்கிறபோதிலும் இந்த அதர்மங்கள் நடக்கின்றன. சட்டத்தின் ஓட்டைகளில் தப்பி, அதர்ம வழியில் செல்வதை ஒரு கலையாகவே அரசியல்வாதிகள் கச்சிதப்படுத்தி வைத்திருக் கிறார்கள்.

இந்த நிலைமையை கட்சித் தலைவர்கள் தவிர, வேறு யாரும் சரிசெய்ய முடியாது. உட்கட்சி ஜனநாயகத்துக்கு மதிப்பளித்து, கட்சிக் கொள்கைகளில் தீவிரம் காட்டி, கூட்டணிகளை கொள்கை அடிப்படையில் அமைத்து, ஆரோக்கிய அரசியல் நடத்தினால், அவர்களும் பிழைப்பார்கள்; நாடும் செழிக்கும்.

இல்லையேல், அவர்கள் விரைவில் அழிவைத் தேடிக்கொண்டு, நாட்டையும் அழிவுப் பாதை நோக்கிச் செலுத்தியவர்களாகிவிடுவார்கள்! ○

கேரளா நமக்குத் தண்ணீர் தருகிறதோ இல்லையோ, தவறாமல் கதாநாயகிகளை வழங்கி வருகிறது. இந்த வரிசையில் லேட்டஸ்ட்டாக கோழிக்கோட்டிலிருந்து கோலிவுட்டை நோக்கிப் பறந்து வந்திருக்கிறார் நித்யதாஸ். 'மனதோடு மழைக்காலம்' படத்தில் ஷாமுக்கு ஜோடியாக அறிமுகம்.

"எனக்குத் தமிழ்ப் படங்கன்னா ரொம்ப இஷ்டம். மொழியும் நல்லா புரியும். அதோடு இங்க நடிக, நடிகையரை எப்படித் தலையில தூக்கி வைச்சுக் கொண்டாடுறாங்க! கும்பல் கும்பலா வந்து ஷூட்டிங்கை வேடிக்கை பார்க்கறாங்க. யம்மாடி... இந்தக் கொண்டாட்டத்துல நானும் இடம்பெறணும்னு தான் தமிழ் சினிமாவை நோக்கி ஓடோடி வந்தேன்" என்கிறார்.

தமிழர்களைப் போலவே கேரள மக்களுக்கும் இளையராஜா இசை என்றால் அப்படியொரு பிடிப்பு. "பூவே செம்பூவே... நான் இரவெல்லாம் கேட்டு மயங்குகிற பாடல்" என்று சிலிர்க்கிறார் நித்யா.

நடிகை நிலா மாதிரி இவருக்கு படப்பிடிப்பில் ஏதாவது சிக்கல் வந்தால் அவ்வளவுதான்... கேரளாவிலிருந்து போலீஸ் படை கிளம்பி வந்துவிடும். "ஆமாம்... என் அப்பா போலீஸில் எஸ்.ஐ. சினிமா வாசமே அவருக்குப் பிடிக்காது. ஆனா நான் ப்ளஸ் ஒன் படிக்கும்போது கிரகலட்சுமி பத்திரிகையில என் படம் அட்டையில் வந்தது. அதைப் பார்த்து நடிகர் திலீப் 'ஈ பறக்கும் தாலிகா'வில் நடிக்க வைத்தார். தொடர்ந்து நான் நடித்த எட்டு மலையாளப் படங்கள்ல ஐந்து ஹிட்"

சரி, சினிமா தவிர இவருக்கு வேறென்ன பிடிக்குமாம்?

"நத்திங் ஸ்பெஷல். ஆனால் கை ஜோசியம் ரொம்ப நல்லா தெரியும். நீங்க பார்க்குறீங்களா?" என்றார் தடாலடியாக. எதற்கு ரிஸ்க் என்று அவர் கையையே சோதிக்கச் சொன்னோம். "ஓம்... ஸாம்" என்று சுட்டு விரலால் தன் கையில் சர்க்கிள் போட்டவர், "இது சாதாரண கையில்லை. யோகக் கை. இன்னும் கொஞ்சம் நாள்தான். அப்புறம் பாருங்க. தமிழ் சினிமாவே இந்தப் பொண்ணு கைக்குள்ள இருக்கும். ஓம்... ஸாம்" என்று தன் இஷ்டத்துக்கு ஜோசியம் சொல்ல ஆரம்பிக்க...

"ஆஹா... இதுக்கு பேர் ஜோசியம் இல்லீங்கோ. சுய தம்பட்டம்" என்று சொல்லிவிட்டு அங்கிருந்து அப்பீட் ஆனோம்.

**- சநகன்**

அட்டை மற்றும் படம்:
**சந்தோஷ் ராஜ்**



# நத்திங் ஸ்பெஷல்!

# சிதம்பர ரகசியம்!

ஒண்டிப்புதூர் தேவமணி

மனத்தில் பதற்றமும் ஆவலும் நிறைந்தவனாய், கோப்புகளைப் புரட்டிக் கொண்டிருந்தான், சேகர். மேஜை மீது 'மேலாளர்' என்றிருந்த தங்க நிற பெயர்ப் பலகை பளிச்சென்றிருந்தது. அதை கடைசி முறையாகப் பார்ப்பது போல பார்த்தான்.

நேற்று தொழிற்சாலை ஊழியர்கள் எல்லாம் ஒன்று சேர்ந்து, இரண்டு வருடங்களாக ஊதிய உயர்வு கொடுக்காததால், வேலை நிறுத்தம் செய்யப் போவதாக அறிக்கை கொடுத்தனர். நியாயமான கோரிக்கைதான். ஆனால் இரண்டு ஆண்டுகளாக கோவையிலுள்ள நூற்பாலைகள் எல்லாம் நஷ்டம் கண்டு, படுபாதாளம் நோக்கிப் போய்விட்டன. அநேகமாக அவை மூடப்பட்டு, சொத்துவரி கட்ட வேண்டுமென்பதற்காக இடிக்கப்பட்டு, தொழிலாளர்கள் வாழ்வுபோல மண்மேடாகிப் போனது. இந்த பாலாஜி நூற்பாலையும், ஏதோ பழைய பெயரை விடக்கூடாது என்ற வைராக்கியத்தில் ஓடிக் கொண்டிருந்தது.

நரசிம்மலுதான் இதன் நிர்வாக இயக்குனர், முதலாளி. ஆலைத் தொழிலின் நெளிவு சுளிவு தெரிந்த பழுத்த அனுபவசாலி. தள்ளாத வயதிலும் சுறுசுறுப்பாக இயங்கிக் கொண்டிருந்தார். அவருடைய ஒரே மகன் சேகர். பி.காம் படித்ததும் தொழிலில் இழுத்து விட்டு விட்டார். சீக்கிரமே முழுப் பொறுப்பையும் அவன் கையில் ஒப்படைத்துவிட்டு ஓய்வு பெற்று



விட வேண்டுமென்று பார்க்கிறார். சேகர், இன்னும் அவர் எதிர்பார்த்த அளவுக்கு முன்னேற்றம் காட்டவில்லை.

சேகர், வேலை நிறுத்த அறிவிப்பு கொடுக்க வந்த தொழிற்சங்கத் தலைவரைத் தனியே அழைத்து, உட்கார வைத்துப் பேசினான்.

"பாருங்க தலைவரே, கோயமுத்தூரில் ஏறக்குறைய எல்லா மில்லுங்களையும் மூடிட்டாங்கங்கறது உங்களுக்கே நல்லா தெரியும். இதுவும் எப்பவோ மூடப்பட்டிருக்க வேண்டும். ஆனால், உங்களுக்கு எப்படி வேற வேலை தெரியாதோ, அதே போல எங்களுக்கும் வேற தொழில் தெரியாது. ஒரு வைராக்கியத்தோடுதான் இதை நடத்திட்டு வர்றோம். இன்னும் சொல்லப் போனால் இந்த வருஷம் ஐந்து கோடி நஷ்டம். பேலன்ஸ் ஷீட்டை உங்களுக்குக் காட்டறேன், பாருங்க. அப்புறம் என்ன செய்யலாம்னு, நீங்களே சொல்லுங்க."

சேகர் சொன்ன வார்த்தையில் உண்மையிருப்பதைப் புரிந்துகொண்ட தலைவர், சமாதானமடைந்து போய்விட்டார். வேலை நிறுத்தம் இல்லை.

இப்படியொரு சிக்கலைத் தீர்த்து விட்டதற்காக எம்.டி பாராட்டுவார் என்று எதிர் பார்த்துக் கொண்டிருந்தான் சேகர். ஆனால் நடந்ததோ வேறு.

"நீ செய்ததை எல்லாம் கேள்விப்பட்டேன். அது கொஞ்சம் கூட சரியில்லை" என்று அக்னி அஸ்திரத்தை ஏவினார் எம்.டி. சேகரின் முகம் வாடி விட்டது.

கொஞ்சம் கூட ஈவு இரக்கம் இல்லாமல், எவ்வளவு பெரிய தாக்குதல்! சேகர் வாயடைத்து நின்றான்.

"படைவீரன் தன் ஆயுதங்களைக் கீழே போட்டுவிட்டு, கைகளை மேலே தூக்கி சரணடைந்தது போல, நீ எல்லாவற்றையும் திறந்து காட்டிவிட்டாய். ஒரு வேளை இது தொழிலாளிக்கும் முதலாளிக்கும் இணக்கம் ஏற்படுத்துவதாக இருக்கலாம். ஆனால் ஆளுமை இல்லை. எப்போதும் இப்படி நடந்துகொள்ள முடியுமா என்பதை யோசித்துப் பார். இன்னும் நீ படிக்க வேண்டியது நிறைய இருக்கிறது." எம்.டியின் கடுகடுப்பான வார்த்தைகள் சேகருக்குள் விஷம் போல ஏறின.

இது நடந்து ஒரு வாரம் கழித்து, வாட்ச்மேன் மாணிக்கம், இரவுப் பணியில் இருக்கும்போதே இறந்து விட்டான்.

தொழிலாளர்கள், தலைவர் சகிதம் கூடிவிட்டார்கள். கூட்டத்தை விலக்கிக் கொண்டு உள்ளே நுழைந்த சேகர் நிலைமையை ஆராய்ந்தான். வாட்ச்மேன் பயங்கரமான குடிகாரன். ஏற்கெனவே கல்லீரல் வெந்து போயிருக்கிறது. அன்று அதிகமாகக் குடித்திருக்கிறான், இறந்துவிட்டான். உடலை பிரேதப் பரிசோதனைக்கு அனுப்புவதா, வேண்டாமா என்ற பிரச்னை எழுந்தது.

தொழிலாளர்கள் 'பரிசோதனைக்கு அனுப்ப வேண்டாம். இது இயற்கையான மரணம்' என்றார்கள். ஆனால் அதற்கு சரியான சட்டபூர்வமான ஆதாரம் எதுவும் இல்லை. நாளைக்கு வாட்ச்மேன் குடும்பத்தார் யாராவது 'சாவில் சந்தேகம்' என்று சொல்லி விட்டால் வீண் விவகாரம்தான். ஆகவே பிரேதப் பரிசோதனை செய்ய வேண்டுமென கண்டிப்பாகச் சொல்லிவிட்டான் சேகர். அப்படியே நடந்து குடும்பத்தார் வசம் உடல் ஒப்படைக்கப்பட்டது.

அடுத்த நாள் சேகரை எம்.டி. கூப்பிட்டார். 'இந்தமுறை தான்













- எம். அசோக்ராஜா

செய்தது மிகவும் சரி. இதை யாரும் மறுக்க முடியாது. கண்டிப்பாக அப்பா பாராட்டுவார்' என்று நெஞ்சை நிமிர்த்திக் கொண்டு போனான்.

"உனக்கு கொஞ்சம்கூட அறிவே இல்லை. எந்த இடத்தில் அதிகாரத்தைப் பயன்படுத்த வேண்டும், பயன்படுத்தக் கூடாது என்பது இன்னும் உனக்குத் தெரிய வில்லை" என்று எடுத்த எடுப்பிலேயே எகிறி விழுந்தார்.

"அவன் குடியினால் இறந்தான் என்பது எல்லாருக்கும் தெரியும். தொழிலாளர்கள் எல்லாரும் ஒத்துக் கொண்டார்கள். அதற்கு மேல் என்ன சாட்சி வேண்டியிருக்கிறது? ஏன் வீணாக அவன் உடலை அறுத்து சித்ரவதை செய்ய வேண்டும்?"

எம்.டியின் முகம் சிவந்து விட்டது.

சேகர் நொந்துபோய் திரும்பினான்.

அதன் பிறகுதான் சேகர் ஒரு முடிவுக்கு வந்தான். தனது மேனேஜர் பதவியை ராஜினாமா செய்துவிட நினைத் தான். எம்.டி. அறையில் வந்து உட்கார்ந் ததும், சேகர் தனது ராஜினாமா கடிதத்தை அவர் முன் நீட்டினான்.

சற்றே திடுக்கிட்டவராய், "வெரிகுட்... இதைத்தான் எதிர்பார்த்தேன்" கண்ணாடி யைக் கழற்றி மேஜை மீது வைத்துவிட்டு அவனை நேருக்கு நேர் பார்த்தார்.

அவனால் அதைத் தாங்கிக்கொள்ள முடியாமல் தலை கவிழ்ந்தான்.

"சேகர், உன் ராஜினாமாவை ஏற்றுக் கொள்கிறேன். இனி நீ என்ன செய்யப் போகிறாய்" என்றார்.

அவனுக்கு மனசுக்குள் கோபம் கொப்பளித்தது. 'என்ன செய்தாலும் குற்றம் கண்டுபிடித்துக் கொண்டேயிருக்கிறார். இவரைத் திருப்திப்படுத்தவே முடியாது. இனி என்ன செய்வது என்பது முக்கிய மல்ல. இவரிடமிருந்து தப்பித்தால் போதும். எங்காவது மூட்டை தூக்கியாவது பிழைத் துக் கொள்ளலாம்' இதையெல்லாம் அவரி டம் எப்படிச் சொல்வது? அமைதியாக இருந்தான்.

எம்.டி. ஒரு பெருமூச்சு விட்டபடி சகஜ நிலைக்குத் திரும்பி, இலேசாக சிரித்தார்.

"சேகர், நீ மனசு நொந்து போயிருப்பாய் என்பது எனக்குத் தெரியும். நான் வைக்கும் ஒவ்வொரு பரீட்சையிலும் நீ ஜெயித்து விடுகிறாய். ஆனால், அந்த வெற்றியில் உனக்கு நம்பிக்கை வரவில்லை.

அதாவது உன் மேலேயே உனக்கு நம்பிக்கை இல்லை. ஆகவேதான், நீ செய்தது தவறு என்று நான் கூறும்போதெல்லாம், நீ அதை ஏற்றுக்கொண்டு, வேறுவிதமாகச் சிந்திக்கிறாய். இன்றுதான் உன் மனம் திடப்பட்டிருக்கிறது. நீ செய்தது சரியென்று எண்ணுகிறாய். இதைத்தான் வெகு நாட்களாய் எதிர்பார்த்தேன். இனி நீதான் இந்த ஆலையின் எம்.டி. பொறுப்பை ஏற்றுக் கொள்'' என்று மகனின் கைகளைப் பரிவுடன் பிடித்துக் கொண்டார்.

சேகர் ஒரு நிமிடம் ஆடிப்போய் விட் டான். அப்பாவின் சிதம்பர ரகசியம் அறிந்த மகிழ்ச்சியில் மனத்தில் கெட்டிமேளம் கொட்டியது. ○










- தஞ்சை தாமு

**ச**ண்டைக் காட்சி படமாக்கும்போது சம்பந்தப்பட்டவர்களும் தொழில்நுட்பக் கலைஞர்களும் தவிர 'செட்'டுக்குள் யார் இருந்தாலும் எம்.ஜி.ஆர் விரும்ப மாட்டார். இதனால் நடிப்பில் முழுக் கவனம் செலுத்த முடியாது என்பது அவர் கருத்து.

அப்படித்தான் 'அடிமைப்பெண்' ஷூட்டிங் நடந்து கொண்டிருந்தது. எம்.ஜி.ஆர். சிங்கத்துடன் சண்டை போடும் காட்சி அன்று படமாக்கப்படவிருந்தது.

'இந்த சீன்லதான் வசனம் ஒண்ணுமே இல்லேல்ல?' என்று அவர் சொல்ல, வசனகர்த்தா கே.சொர்ணம் செட்டை விட்டு வெளியேறினார். சிங்கத்தை ட்ரெய்ன் அப் பண்றவர், அதனிடம் எப்படி சண்டை போடுறதுன்னு நாசூக்காக தலைவர்கிட்டே சொல்லிட்டு ஒதுங்கிக் கொண்டார்.

படப்பிடிப்பு ஆரம்பமாச்சு. எம்.ஜி.ஆர். சிங்கம் பக்கம் போய் உரத்த குரலில் 'ஊம்' என்றபடி அதன் பிடரியில் கை வைத்தார். எவ்வளவு பழக்கியிருந்தும் அந்தக் காட்டு விலங்கு உறுமலோடு முன் காலை உயர்த்தி வீசியது. அதன் கூர்மையான நகங்கள் தோளில்பட்டு ரத்தம் பொலபொலவென்று கொட்டியது. அதனால் எம்.ஜி.ஆர். கலங்காமல் நின்றாலும் பதறிப்போன உதவி இயக்குநர் ராமதாஸ், 'ஐயையோ, அண்ணனை சிங்கம் அடிச்சிடுச்சு' என்று கத்திவிட்டார். வெளியே இருந்தவங்க உள்ளே ஓடி வந்து விட்டார்கள். இதைப் பார்த்ததும் சிங்கத்தின் மீது கூட கோபப்படாத எம்.ஜி.ஆர்., பளாரென்று ராமதாஸ் கன்னத்தில் ஒரு அறை விட்டார். 'இதுக்குத்தான் ஒருத்தரையும் உள்ளே விடப்படாதுங்கிறது' என்றார்.



விஜயகாந்த் பேசுகிறேன்! 15

சிறிது நேரத்தில் படப்பிடிப்பு நடந்தது. மாலை ஸ்டுடியோவிலிருந்து புறப்படும் முன்பாக உதவி இயக்குநர் ராமதாஸைக் கூப்பிட்டு, 'என்னப்பா அடி பலமாகப் பட்டுட்டுதா?' என்று அன்புடன் கேட்டு தமது உதவியாளரை அழைத்து 'ராமதாஸுக்கு ஆயிரம் ரூபாய் கொடுத்துடு' என்று சொல்லிவிட்டுப் போனாராம் எம்.ஜி.ஆர்.

**இ**ந்தச் சம்பவத்தை இங்கே எதுக்காகச் சொல்றேன்னா ஏறக்குறைய நானும் அப்படித்தான். சண்டைக்காட்சி படமாக்கும்போது என் மனைவியே வந்தாலும் 'மேக்கப் ரூமில் போய் உட்கார். நான் ஃபைட் முடிச்சு வர்றேன்' என்று அனுப்பிடுவேன்.

இதுக்குக் காரணம் அவங்க நிற்பதால் நம்ம கவனம் சிதறும். இன்னொரு முக்கிய காரணம், அவங்க பயந்து நம்மையும் பயமுறுத்தி விடுவாங்க.

ரிஸ்க் எடுத்து பண்ற சமயத்துல ஏதாவது சின்ன அசம்பாவிதம் நடந்து விடும். இத பார்த்து நமக்கு வேண்டியவங்க சும்மா இருப்பாங்க..? உடனே 'ஐயையோ' னு கத்துவாங். 'இந்த மாதிரி எல்லாம் உயிரை பணயம் வச்சி பண்ணாதீங்க'னு அட்வைஸ் செய்வாங்க. அந்தக் காட்சிக்கான மூடே போய்விடும்.

இன்னைக்கு உலகம் பூரா ஆக்ஷன் ஹீரோக்களுக்குத்தான் பெரிய புகழ் இருக்கு. ஆக்ஷன் படங்கள்தான் மொழிகளுக்கு அப்பாற்பட்டு ஓடுது. என் படங்கள் தெலுங்கில் மொழி மாற்றமடைந்து பெரிய வெற்றியைப் பெறுகிறதுன்னா அதுக்கு ஆக்ஷன் முக்கியக் காரணம். தமிழ் இலக்கியத்துல கூட காதல், வீரம் ரெண்டையும் ரெண்டு



• மனைவி, மகன்களுடன்...

கண்களாகச் சொல்லியிருப்பாங்க.

நான் பெருமையா சொல்லலை, உலகின் ஆக்ஷன் ஹீரோக்களில் நீர், நிலம், ஆகாயம் மூணு இடத்துலயும் டூப் போடாமல் ஃபைட் செய்தவன் நானாகத்தான் இருக்கும்.

'உளவுத்துறை'க்காக லண்டனில் கடலுக்கு அடியில் இருநூறடி உள்ளே போய் ஃபைட் செய்தேன். இத பார்த்த அந்த ஊர் சினிமாக்காரங்க 'ரியல் ஹீரோ நீதான்யா'னு பாராட்டினாங்க.

'கேப்டன் பிரபாகர'னுக்காக ரயில் சண்டை எடுக்க ரொம்ப கஷ்டப் பட்டோம். ரயிலில் சண்டை போட்டதில் இடுப்பு, காலெல்லாம் ஒரே வலி. எப்ப ஆறு மணியாகும் ரூமுக்குப் போகலாம்னு சொல்ற அளவுக்குச் சிரமமாகிவிட்டது. 'செந்தூரப்பூவே' படத்துல கூட இதே மாதிரி ரயில் சண்டை செய்த போது இப்படி உடம்பு வலி வரல. ஏன்னா அது பிராட்கேஜ் வண்டி. ஆட்டம் அதிகமில்லே. ஆனா இது மீட்டர்கேஜ் என்பதால் ஆட்டம் ஜாஸ்தி. ஏகப்பட்ட வலி.

'கருப்பு நிலா' படத்துல க்ளைமாக்ஸ் ஃபைட் கோவாவில் கடலுக்கு மேல ஹெலிகாப்டரில் நடக்கிற மாதிரி. அதாவது நான் ஹெலிகாப்டரில் தொங்கிக் கொண்டு நடுக்கடலில் வில்லனோடு மோதும் காட்சியில் நடித்தேன். இதைப் பார்த்த என் மனைவி 'நான் அப்படி தொங்கியபடி நடிக்கக் கூடாது'ன்னு பேச ஆரம்பிச்சுட்டாங்க.

'நீ இங்கே இருந்தாலே ஃபைட் சீன் பண்ண முடியாது. எனக்கு ஒண்ணும் ஆகாது. நீ பயப்படாம ஹோட்டலில் போய் ரெஸ்ட் எடு... போ' என்று அனுப்பினேன். ஆனா எப்படியோ அந்தக் காட்சியில் நடுக் கடலுக்கு மேலே நான் தொங்குறதைப் பார்த்து என் மனைவி அழுதுட்டா.



உடனே இப்ராகிமுக்கு போன் பண்ணி, ''இவர் கடலுக்கு மேல தொங்கிட்டு ஃபைட் பண்றதைப் பார்க்க எனக்கு ரொம்பப் பயமாயிருக்கு. அந்த மாதிரி பயங்கர ஃபைட் சீன் எல்லாம் வேண்டாம்னு நீங்கதான் சொல்லணும்''னு சொன்னதும் அவன் உடனே ஃபைட் மாஸ்டரைக் கூப்பிட்டு, 'எடுத்த வரைக்கும் போதும். கேப்டனை ஹெலிகாப்டரை விட்டு இறங்கச் சொல்லு'ன்னு கத்தினான்.

அவ்வளவு செலவு செய்தும், ரிஸ்க் எடுத்தும் அந்த சண்டைக் காட்சி பெரிய அளவில் சக்ஸஸ் ஆகாம போகக் காரணம் அந்த ஹெலிகாப்டர் ஃபைட்டை முழுசா எடுக்காமல் போனதுதான்.

என் முதல் படத்துல இருந்து இன்று வரை சண்டைக் காட்சிகளில் நடிக்கும் போது நிறைய தடவை அடிபட்டிருக்கேன். என் கை, கால்களில் அடிபட்ட வடுக்கள் நிறைய இருக்கும்.

'தூரத்து இடி முழக்கம்' படத்தில் ஆறடி நீளமுள்ள துடுப்பைச் சுழற்றி அடித்ததால் வலதுகை தோள்பட்டை மூட்டு விலகிவிட்டது. அந்த வலியை இப்பவும் எப்போதாவது உணர்வேன்.

'பட்டணத்து ராஜாக்கள்' படத்தில் மலைப் பகுதியில் பாறையில் சறுக்கிக் கொண்டே ஃபைட் பண்ணும்போது முதுகில் கற்கள் குத்தி நிறைய அவஸ்தைப் பட்டேன்.

'சாட்சி'யில் 30 பீப்பாய்களை அடுக்கி அது மேல் சண்டைக் காட்சி எடுத்தார்கள். தவறி பீப்பாய்கள் என் மேல் விழுந்து வலது கண்ணோரம் குத்தி ரத்தம் வழிந்தது. நல்லவேளை கண் தப்பியது.

'வேங்கையின் மைந்தன்' படத்தில் சிங்கத்துடன் மோதும் காட்சியில் சிங்கம் முன்னங்காலால் தாக்கி விட்டது. அதைத் தடுக்கப் போய் மறுபடியும் தோள்பட்டை மூட்டு விலகி விட்டது.

'நல்லநாள்' படத்தில் புலியுடன் மோதும் காட்சியின்போது எதிர்பாராத விதமாக புலி காலால் எட்டி உதைக்க, முகத்தில் அடிபட்டு மயங்கி விழுந்துவிட்டேன்.

'வைதேகி காத்திருந்தாள்' படத்தில் நெருப்புக்குள் சண்டை போடும் போது முதுகில் தீ பட்டு தோல் உறிந்து விட்டது. அந்த வலி மூணு மாசம் வரை இருந்தது. இப்படி எத்தனையோ காயங்கள். இவற்றை எல்லாம் தாங்கித்தான் ஒரு ஆக்ஷன் ஹீரோ நிலைத்திருக்க முடியும். அதனால் தான் சொல்றேன் ஆக்ஷன் ஹீரோன்னா சும்மா இல்ல!

(சொல்றேன்)

**சினிமாவில் மட்டுமல்ல, நிஜத்திலும் கேப்டன் நியாயங்களுக்கு ஆதரவாகக் குரல் கொடுப்பவர். உறுப்பினர்கள் யாருக்கோ வர வேண்டிய சம்பள பாக்கிக்காக தனது பிஸியான வேலையிலும் போனில் சண்டை போடுவதைப் பார்த்து வியந்து இருக்கிறேன்.**

**மனத்தில் பட்டதை சட்டென்று கூறி விடுவார். 'கேப்டன்' என்ற அந்தப் பெயருக்கு மிகவும் பொருத்தமானவர். அவரிடம் எனக்குப் பிடித்தது அவரது 'ஆளுமைத்திறன்'.**

**- நடிகர் விக்ரம்**



## விஜயகாந்த் பற்றி வி.ஐ.பி!

**கலகல...**

**2006... ஏப்ரல் 2, ஞாயிறு அதிகாலை 04.30 மணி. சட்ட சபைத் தேர்தல் நெருங்கும் நேரம். கோயிஞ்சாமி குப்புறப்படுத்து தூங்கிக் கொண்டிருக்கிறார். டொக் டொக்... டொக் டொக்... அவர் கனவின் கதவுகளைத் திறந்து கொண்டு சிலர் 'பப்பரப்பாய்ங்!' என ஆஜராகிறார்கள்!**



# ஒரு தமிழனின் கனவு!

**கனவு - 1**

**இடம்:** கோயிஞ்சாமியின் வீட்டு வாசல்.

**கதாபாத்திரங்கள்:** ஜெ, சசிகலா, ஓ.பன்னீர்செல்வம், எஸ்.எஸ்.சந்திரன், விநாயகமூர்த்தி

*(ஜெயையும், சசியையும் பணிவாகப் பக்தியோடு பார்த்து)*

**பன்னீர்:** *('அந்நியன்' மெட்டில்)* அண்டம் காக்கும் அம்மா நீயே!

**சந்திரன்** : ரண்டக்க ரண்டக்க ரண்டக்க ரண்டக்க

**பன்னீர்** : என்றும் முதல்வர் நீயே நீயே!

**சந்திரன்** : ரண்டக்க ரண்டக்க ரண்டக்க ரண்டக்க

**பன்னீர்** : 234 தொகுதி தாயே!

**சந்திரன்:** எடுத்துக்க கருட்டிக்க மடிச்சுக்க முடிச்சுக்க

**பன்னீர்** : எதிரிக் கட்சி மாயே மாயே!

**சந்திரன்** : குண்டக்க மண்டக்க குண்டக்க மண்டக்க

**கோயிஞ்சாமி** *(இடைமறித்து)* : என்னய்யா வேணும்?

**ஜெ:** என் இதய தெய்வமே, என் ரத்தத்தின் ரத்தமே!

**கோயிஞ்சாமி:** நான் 'ஓ' பாஸிடிவ், நீங்க?

**பன்னீர்:** நான் ஓ.பன்னீர் *(என வீட்டினுள் உள்ள மற்றவர்களைக் காண ஓடுகிறார்)*

**விநாயகமூர்த்தி:** இங்கே 'பன்னீர்' ஓட யார் காரணம்..

தமிழ்நாட்டில் காவிரி ஓட யார் காரணம்..

*('சந்திரமுகி' மெட்டில் பாட ஆரம்பிக்கிறார்)*

ஆ... ஆ... அம்மாவோட ஆட்சி!

ஆ... ஆ... அன்பு ஆட்சிடா!

ஆ... ஆ... வாசனோட பேச்சு!

ஆ... ஆ...வெட்டிப் பேச்சுடா!

போடு ஓட்டை நீயும் போடு!

போட்டா நல்லா இருப்படா!

மாத்தி ஓட்டை நீயும் போட்டா!

மவனே விளங்க மாட்டடா!

அம்மாவை மட்டும் இங்க நம்பு!

இல்லாட்டி வரும் உனக்கு வம்பு!

*(உணர்ச்சிவசப்பட்டு சாமியாடுகிறார்)*

**ஜெ:** தமிழக மக்களே என் சொத்து. மகனே, நீ இரட்டை இலையைப்



பார்த்து குத்து!

**சசி:** (ஜெ.காதினுள்) அதெல்லாம் ஆடித்தள்ளுபடி கணக்கா சலுகைகள் வாரி வழங்கிட்டோம்ல, பயப்படாதக்கா, ஓட்டு எந்திரங்களைத்தான் நம்ப முடியாது. ஆனா இந்த ஓட்டுப் போடுற எந்திரங்களை தைரியமா நம்பலாம்.

**கோயிஞ்சாமி:** (மனதுக்குள்) அடப் பாவிகளா, தேர்தல் வந்தா இப்படி ஆளாளுக்கு காவடி தூக்கிட்டு வந்திடுவீங்களே...



**ஜெ:** நானே தமிழகத்தின் ஒரே ஒளி. எல்லோருக்கும் என்னைப் பார்த்து பிடிச்சிருக்க லிலி!

('ராம்' மெட்டில் பாட ஆரம்பிக்கிறார்.)

ஆராரிராரோ, நான் இங்கு பாட
ஓட்டுக்குத் துட்டு வாங்கு,
போட்டுட்டு போய்த் தூங்கு!
எந்தன் ஆட்சி சொர்க்கமே
கலைஞர் ஆட்சி துக்கமே
கூட்டணிதான் முறியுமே
அதை நான் அறிவேனே!
மூன்றெழுத்து மந்திரமே,
வோட்டு 'வாங்கும்' தந்திரமே!

(கோயிஞ்சாமி திடுக்கிட்டு எழுந்திரிக்கிறார். 'அடச்சே, கெட்ட கெட்ட கனவா வருது'. தண்ணீர் குடித்துவிட்டு இடம் மாறிப் படுக்கிறார்.)

## கனவு - 2

**இடம்:** கோயிஞ்சாமி வீட்டின் உள் அறை

**கதாபாத்திரங்கள்** : கலைஞர், ஸ்டாலின், வைகோ, ராமதாஸ், நெப்போலியன்

(தபதபவென உள்ளே நுழைகிறார்கள். நெப்போலியன் 'திருப்பாச்சி' மெட்டில் பாட ஆரம்பிக்கிறார்.)

**நெப்ஸ்:**
கும்பிடப் போன தெய்வம்
வீட்டுக்கு வந்ததய்யா!
வீட்டுக்கு வந்த தெய்வம்
ஆ... ஓட்டு கேக்குதய்யா!



ஆளை மாத்துடா
ஆட்சி மாத்துடா
அம்மாவைத்தான் அவசரமா ஆளை மாத்துடா! (ஆவேசமாகக் குலவை இடுகிறார்.)

**கோயிஞ்சாமி:** (பயந்தபடி) ஏதாவது கோயிலுக்குக் கூழ் ஊத்த வசூல் பண்ண வந்திருக்கீங்களா? இப்படி எல்லாரும் ஒண்ணா சேர்ந்து வந்திருக்கீங்களே, உண்மையிலேயே இன்னும் ஒண்ணாத்தான் இருக்கீங்களா! அய்யய்யோ, மண்டை குழம்புதே!

(வைகோ கலைஞரைப் பார்த்தபடி '7/G ரெயின்போ காலனி' மெட்டில் பாட ஆரம்பிக்கிறார்.)

**வைகோ:** நினைத்து நினைத்துப் பார்த்தேன்.
உந்தன் கையைக் கோத்தேன்
உன்னால்தானே நானே வாழ்கிறேன்...
ஓஓஓ...
உன்னில் இங்கு என்னைப் பார்க்கிறேன்.
ஓஓஓ...
தொகுதி பிரித்துக் கொடுக்கும் முன்னே
மேலும் பத்துத் தொகுதி கேட்டேன்...
உன்னால்தானே நானே வாழ்கிறேன்...
ஓஓஓ...

**கலைஞர்:** தம்பி உன் விஷமப் பாடலை நிறுத்து! என் உடன்பிறப்பே கோயிஞ்சாமி! நீ பேசா மடந்தையாக இருந்தது போதும். உன் ஞானக் கண்கள் திறக்கட்டும். சூரியன் இங்கே உதிக்கட்டும். (ராமதாஸைப் பார்த்து) எல்லோரும் பாடிட்டாங்க. நீங்க ஏன் இன்னும் பாடாம இருக்கீங்க... பாடுங்க தாஸ், பாடுங்க!

**ராமதாஸ்:** (கலைஞர் நிற்கும் திசைக்கு எதிர்த் திசையில் திரும்பி 'அஆ' மெட்டில் பாட ஆரம்பிக்கிறார்.)

"ஆறரைக் கோடி பேர்களில் ஒருவன்
அடியேன் தமிழன் நான் உங்கள் நண்பன்
'அ'ண்ணா நீங்கள், 'ரா'வன்னா நான்தான்!
நான் இல்லாமல் நீங்கள் இங்கு இல்லை.
நாம் இருவரும் இணையும் சமயம்
நம் கைகளிலே வரும் இமயம்
புதிதாய்க் கூட்டணி அமையும்
இது அன்பால் இணைந்த இதயம்
என் அன்பே... ஆருயிரே... என் அன்பே... ஆருயிர் நீயே!"

**கலைஞர்:** (மனதுக்குள்) ஆஹா... நம்மளை வைச்சுத்தான் பாடுறாரா... இல்ல மனசுல வேற என்ன வைச்சிட்டுப் பாடுறாருன்னு புரியமாட்டேங்குதே! எதுக்கும் நாமளும் ஒரு பாட்டைப் பாடி வைப்போம். ('ஜி' மெட்டில் பாடுகிறார்.)

"டிங்டாங் கோட்டை மணி
கோட்டை மணி
நான் கேட்டேன்.
சி.எம். சீட்டினில் நான்
அமர்வதற்கு வழி கேட்டேன்."

(கோயிஞ்சாமி கனவு கலைந்து மீண்டும் திடுக்கிட்டு விழிக்கிறார். 'அடப்பாவிகளா, விடாம தொரத்துறீங்களே... தூங்க விடுங்கப்பா!' கட்டிலுக்கு அடியில் புகுந்து தூங்க ஆரம்பிக்கிறார்.)

'**டொ**க் டொக்..' கதவு நிஜமாகவே தட்டப்படுகிறது. எரிச்சலோடு வந்து கதவைத் திறக்க, விஜயகாந்த் நிற்கிறார்.

**விஜயகாந்த்:** ('மன்மதன்' மெட்டில் பாட ஆரம்பிக்கிறார்.)

"காதல் வளர்த்தேன், காதல் வளர்த்தேன்!
சி.எம். சீட்டு மேல நானும் காதல் வளர்த்தேன்!
ரசிகனின் உள்ளே நான்
'கொடி' ஒண்ணுதான் நட்டு வளர்த்தேன்!
இன்று அது கோட்டை மேல்
பறக்க வுடத்தான் ஆச வளர்த்தேன்.
ஏ....புல்ல...புல்ல..."

கோயிஞ்சாமி மயக்கமாகிக் கீழே விழுகிறார்.

கற்பனை : **முகில்**

என்னிடம் ஒரு சிவப்புக்கல் மோதிரம் இருக்கிறது. கோபால்தாஸ் கடையில், நகைச்சீட்டு போட்டு என் அப்பா வாங்கித் தந்த மோதிரம் அது. நான், எனது முன்னாள் காதலி, என் மனைவி... ஆகிய மூவரும் அணிந்திருந்த மோதிரம் அது.

கடவுள் பொழுதுபோகாமல் ஆடியதொரு விளையாட்டில் சிக்கி, இப்போது அந்த மோதிரம் யாராலும் அணியப்படாமல், பீரோ லாக்கரில் பத்திரமாக உள்ளது. உங்களில் யாருக்கேனும் வேண்டுமா?

அந்த மோதிரத்தைப் பார்த்தவுடனேயே, யாருக்கும், சட்டென்று பிடித்துப் போய்விடும். எனது முன்னாள் காதலி நந்தினிக்கும், அந்த மோதிரம் மிகவும் பிடிக்கும். நந்தினி...

கல்லூரி படிப்பை முடிக்கும் வரை தமிழ்நாட்டைத் தாண்டியிராத எனக்கு, நான்கு வருடங்களுக்கு முன்பு, பெங்களூரில் மத்திய அரசு வேலை கிடைத்தது.

சிவாஜி நகரில் அறையெடுத்திருந்த அலுவலக பிரம்மச்சாரி நண்பர்களுடன் தங்கினேன். ஆரம்பத்தில் பெங்களூரைக் கண்டு மிரண்டாலும், பிறகு பழக்கமாகிப் போனது.

பைக்கில் பறக்கும் பெங்களூர் இளைஞர்கள், எல்லா நேரமும் பிடிவாதமாக ஜெர்க்கின் அணிந்திருந்தார்கள். இருட்டிய பிறகு, அவுட்டர் ரிங் ரோடு ப்ளாட்ஃபார்ம்களில் பைக்கை நிறுத்தி, இளம் பெண்களை அணைத்தபடி காதலித்தார்கள். அல்சூரில் நுழைந்தால் எம்.ஜி.ஆர். பாட்டெல்லாம் கேட்டது. ப்ரிகேட் ரோட் பஃப்களில், ஒரு மக் பீருக்கு இன்னொரு மக் பீர் இலவசமாகக் கொடுத்தார்கள்.

பெங்களூர் நகரின் ஆரம்பகட்ட சுவாரஸ்யங்கள் அலுத்துப் போன கணத்தில், நந்தினி அறிமுகமானாள். எங்கள் அலுவலக ஸ்டெனோ. இரண்டு தலைமுறைகளுக்கு முன்பே பெங்களூரில் செட்டிலாகிவிட்ட தமிழ்க் குடும்பப் பெண். மொழியைத் தாண்டி, இருவருக்கும் பல விஷயங்கள் ஒத்துப்போனது. நல்ல நண்பர்களானோம்.

இருவரும் தென்னை மரத்தில் ஓடும் ஒற்றை அணிலை ரசித்தோம்.

இருவரும் 'சலங்கை ஒலி' ஜெயப்ரதாவின் அழகை, 2002-லும் சிலாகித்துப்

# என் தோழி... என் காதலி... என் மனைவி!

பேசினோம்.

இருவரும் கல்யாண்ஜி கவிதைகளை ரசித்துப் படித்தோம்.

இருவரும் காதலித்தோம்.

கப்பன் பார்க். கூட்டமில்லாத மூலையிலமர்ந்து நாங்கள் பேசிய ஒரு ஜூலை மாதத்து மாலை...

"ஹனிமூனுக்கு எங்க போலாம் சுரேஷ்?" என்று கேட்ட நந்தினி, எனது கை கட்டை விரலை, அவளுடைய மென்மையான உதடுகளில் பற்றியபடி, எனது

நகத்தைக் கடிக்க ஆரம்பித்தாள்.

"ம்... ஊட்டி... இல்லன்னா கொடைக்கானல்."

"அங்க போய் என்ன பண்றது?"

"ம்... யூகலிப்டஸ் இலைய எல்லாம் பறிச்சு, தைலம் காய்ச்சலாம். கேள்வியப் பாரு."

"அய்யோ..." என்று என் சுட்டுவிரலை நறுக்கென்று கடித்த நந்தினி, "அங்கல்லாம் நான் போனதில்ல. அங்க என்ன பாக்கலாம்னு கேட்டேன்."

"ஏகப்பட்டது இருக்கு. நமக்கெதுக்கு அதெல்லாம். போறோம். ஒரு வாரம் ரூம் புக் பண்றோம். ரூம் கதவைச் சாத்தறோம். ஒரு வாரம் கழிச்சுத் திறக்கறோம். சூட்கேஸ எடுத்துகிட்டு, பெங்களூரப் பாக்க வந்துக்கிட்டேயிருக்கோம். எப்படி?"



"சீ... நீ ரொம்ப மோசம்ப்பா..." என்று வெட்கத்துடன் சிணுங்கிய நந்தினி, என் இடது தோள் மீது சாய்ந்து கொண்டு, "இந்த வாரம் ஊருக்குப் போறியா?" என்றாள்.

"ஆமாம். ஏன்?"

"இல்ல... தினம் இந்த மாதிரி கலகலப்பா பேசிட்டு மாசத்துக்கு மூணு நாள் ஊருக்குப் போயிடுற... எனக்கு எவ்வளவு கஷ்டமா இருக்கு தெரியுமா? மூணு நாளும் மனசு உன்னையேதான் சுத்தி, சுத்தி வரும். இந்தத் தடவை ஊருக்கு போறப்ப உன் ஞாபகமா ஏதாச்சும் கொடுத்துட்டுப் போயேன்."

"அப்படிப் போடு அருவாள. இதுக்குத்தானே ஒரு மணி நேரமா புல்லு குத்த, குத்த உக்காந்து பேசிக்கிட்டிருக்கேன்" என்று வேகமாக நிமிர்ந்து, உதட்டைக் குவித்தபடி நந்தினியை நெருங்கினேன்.

"அய்ய... ஆசையைப் பாரு. ஏதாச்சும் ஒரு பொருள் கொடுத்துட்டுப் போ."

"என்ன பொருள்?"

"உன் மோதிரத்தைத் தாயேன். நீ ஊர்ல இல்லாதப்ப அத போட்டுக்குறேன். நீயே பக்கத்துல இருக்குற மாதிரி ஒரு ஃபீலிங் கிடைக்கும்" என்ற நந்தினியை நான் நெகிழ்ந்துபோய் பார்த்தேன்.

**அ**ன்று முதல் நாங்கள் காதலித்த இரண்டு வருடமும், நான் எப்பொழுது ஊருக்குச் சென்றாலும், மோதிரத்தை நந்தினியின் விரலில் மாட்டிவிட்டுச்

ஜி.ஆர்.சுரேந்தர்நாத்

செல்வேன். நான் திரும்பி வந்தவுடன் என்னிடமே அதைத் தந்துவிடுவான்.

ஒரு சபிக்கப்பட்ட சனிக்கிழமை, சினிமா பார்த்துவிட்டு விடோ தியேட்டரிலிருந்து வெளிவந்த எங்களை, நந்தினியின் அண்ணன் பார்த்துவிட... எல்லாம் கலைந்து போனது.

ஜாதி, அந்தஸ்து விஷயத்தைக் காரணம் காட்டி நந்தினியின் வீட்டில் எங்கள் காதலைக் கடுமையாக எதிர்த்ததும், நந்தினி தடாலடியாக, "விதிப்படிதான்நடக்கும். என்னை மறந்துவிடு" என்று விலகிக் கொண்டதும், காதல் தோல்வியில் மனது ரணமாகி, ஆறு மாத காலம் வரை பொட்டுத் தூக்கம் வராமல், பெங்களூர் நகர வீதிகளில் பைத்தியக்காரன் போல இரவுகளில் திரிந்ததும், நான் தமிழ்நாட்டுக்கு மாற்றல் வாங்கிக்கொண்டு வந்ததும், நாங்கள் இருவரும் வேறு வேறு நபர்களைத் திருமணம் செய்து கொண்டதும், இந்த மோதிரத்துக்குச் சம்பந்தமில்லாத விஷயங்கள் என்பதால் விரிவாகக் கூறவில்லை.

எனக்கும், நித்யாவுக்கும் திருமணமான ஒரே வாரத்தில், ஒரு பழைய புத்தகத்திலிருந்த நந்தினியின் காதல் கடிதம் ஒன்று நித்யாவின் கண்களில் பட்டுவிட, என் காதல் கதையைச் சொல்ல வேண்டி வந்தது.

கண்கலங்க கேட்டுக்கொண்ட நித்யா, "இப்பவும் அவ நினைப்பு இருக்கா?" என்று கேட்டாள்.

"ம்ஹ்ம்...." என்று வேதனையுடன் சிரித்துக் கொண்டே, "ஒண்ணாங்கிளாஸ் படிக்கறப்ப பக்கத்துல உட்கார்ந்திருந்த முருகேசனையே இன்னும் மறக்கல. அவள நினைக்கிறதில்லன்னு சொன்னா அது பொய். ஆனால் உன் துணையோட, அந்த நினைவுகளோட பாதிப்பு இல்லாம, வாழ முடியும்னு நம்புறேன்" என்றேன்.

வாழ முடிந்தது. ஆரம்பத்தில் கஷ்டமாகத்தான் இருந்தது. வெயிலடிக்கிறது. வியர்க்கும் என்று வெளியே செல்லாமலா இருக்கிறோம்? வியர்வையைத் துடைத்துக் கொண்டு சென்று கொண்டுதானே இருக்கிறோம். கடவுளால் அவரவர்க்கு அளிக்கப்பட்டிருக்கும் வாழ்க்கையை இங்கு வாழ்ந்தே தீரவேண்டும். நானும் வாழ்ந்தேன்.

பிரசவத்துக்காக நித்யா தன் தாய் வீட்டுக்குக் கிளம்பியபொழுது, "அஞ்சு மாசம் உங்கள பிரிஞ்சு இருக்கணும்னு நினைக்கறப்ப, எவ்ளோ கஷ்டமா இருக்கு தெரியுமா?" என்றாள். "நான் மாசா, மாசம் வந்து பாக்குறண்டா செல்லம்."

"வந்து, ரெண்டுநாள் இருந்துட்டு வந்துடுவீங்க. மத்த நாளெல்லாம்..."

"அதுக்கென்னடா பண்றது? எனக்கு ஆபீஸ் இருக்குல்ல..."

"தெரியுது... ம்... உங்க நினைவா, உங்க சிவப்புக்கல் மோதிரத்தைத் தாங்க. அத போட்டுக்கிட்டிருந்தா நீங்க பக்கத்துல இருக்கிற மாதிரி இருக்கும்" என்று நித்யா கூற, நான் அதிர்ந்துபோனேன்.

கடவுளே... எல்லா பெண்களும் ஒரே மாதிரிதான் இருப்பார்களா?

நித்யாவிடம் ஒரு அவுட்லைனாக எனது காதலைப் பற்றிச் சொல்லியிருக்கிறேனே தவிர, மோதிர விஷயத்தையெல்லாம் கூறியதில்லை.

"ஏன் யோசிக்கிறீங்க? உங்க மோதிரம் தானே... இல்ல... உங்க எக்ஸ் காதலி கொடுத்ததா?

"சேச்சே... எங்கப்பா போட்டது" என்ற நான், அந்த மோதிரத்தைக் கழற்றி அவள் விரலில் மாட்டிவிட்டேன்.

பிறகு பையன் பிறந்து, நித்யா எங்கள் வீட்டுக்குத் திரும்பிய பிறகும், தொடர்ந்து அவளே அந்த மோதிரத்தை அணிந்து கொண்டிருந்தாள்.



"அந்த ஆளுக்கு, டீ.வி சீரியலுக்குக் கதை சொல்லவே தெரியலை!"

"என்ன சொல்றாரு?"

"கதாநாயகனுக்கு ஒரே ஒரு பொண்டாட்டிதானாம்!"

- மதுரை முருகேசன்

"என் குடும்பம் கோயில் மாதிரி!"

"கேட்கவே சந்தோஷமாயிருக்கு!"

"நீங்க வேற. எனக்கு தினமும் அர்ச்சனை நடக்கும்!"

- லீலாஜி



குழந்தையும் குடும்பமுமாக குளத்து நீர் போல் அமைதியாக இருந்த வாழ்க்கையில், திடீரென்று ஒரு கல் விழுந்து சலனத்தை ஏற்படுத்தியது.

பெங்களூரிலிருந்து குமாரின் திருமணப் பத்திரிகை வந்தது. குமார் என் பெங்களூர் அலுவலக நண்பன். ஒரே அறையில்தான் தங்கியிருந்தோம்.

"கல்யாணம் எந்த ஊர்ல?" என்றாள் என் மனைவி நித்யா.

"பெங்களூர்லதான்."

"நீங்க போறீங்களா?"

"நான் போகாம... ரொம்ப க்ளோஸ் ஃப்ரெண்ட். நம்ம கல்யாணத்துக்குக் கூட வந்துருக்கான்."

"அந்தப் பொண்ணு... நந்தினியும் கல்யாணத்துக்கு வருவாளா?"

"எல்லோரும் ஒரே ஆபீஸ்லதான் வேலை பார்த்தோம். கட்டாயம் அவளுக்கும் பத்திரிகை வச்சிருப்பான். வர சான்ஸ் இருக்கு. ஏன் கேக்குற?"

"நானும் வர்றேன்ங்க. எனக்கு நந்தினியைப் பார்க்கணும் போல இருக்கு."

"எதுக்குடா.. அவ்ளோ தூரம் குழந்தையைத் தூக்கிட்டு..."

"என் ஸ்தானத்துக்கு வர ஆசைப்பட்ட பொண்ண பாக்கணும்னு ஒரு க்யூரியாஸிட்டி.. ப்ளீஸ்ங்க. இப்ப விட்டா அப்புறம் பாக்க சான்ஸ் இல்ல. அப்படியே பெங்களூரையும் பாத்த மாதிரி இருக்கும்."

"சரி.. போகலாம்" என்றேன் தயக்கத்துடன்.

பெங்களூர், மல்லேஸ்வரத்தில் திருமணம்.

நான் மிகுந்த பரபரப்புடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்த அந்தச் சந்திப்பு திருமண மண்டபத்தின் மாடியிலிருந்த டைனிங் ஹாலில் நிகழ்ந்தது.

காலை டிபனுக்கு நாங்கள் சற்று தாமதமாகத்தான் சென்றோம். பெரும்பாலானோர் சாப்பிட்டு முடித்து, நான்கு பேர்தான் சாப்பிட்டுக் கொண்டிருந்தனர். அதில் நந்தினியும் இருந்தாள்.

நந்தினியைப் பார்த்தவுடன் மனசு படபடவென்று அடித்துக் கொண்டது. 'அந்தக் காலையிலும் எனக்கு வியர்த்தது.

என் முகமாற்றத்தையும், கண்கள் செல்லும் திசையையும் கவனித்த நித்யா, "அந்தப் பொண்ணுதானா?" என்றாள் வேகமாக. நான் தலையை அசைத்தேன்.

அதே சமயத்தில் நந்தினியும் எங்களைக் கவனித்துவிட, அந்தக் கணத்தை விவரிப்பதற்கு எனக்கு வார்த்தைகளே இல்லை.

"வாங்க... அறிமுகப்படுத்தி வைங்க" என்ற நித்யா, வேகமாக நந்தினியை நோக்கிச் சென்றாள். வேறு வழியின்றி பின் தொடர்ந்தேன்.

நாங்கள் அருகில் சென்றவுடன், வியப்பும், வேதனையுமாக நந்தினி எழுந்தாள். "வா... வாங்க சுரேஷ்" என்றாள் தடுமாற்றத்துடன். "இது...." என்று ஆரம்பித்த எனக்குத் துக்கம் தொண்டையை அடைத்தது. சமாளித்துக் கொண்டு, "இது... நந்தினி. இது நித்யா. என் ஒய்ஃப்" என்றேன்.

"உங்களப் பத்தி நிறைய சொல்லியிருக்காரு" என்றாள் நித்யா, நந்தினியிடம்.

நந்தினி கேள்விக்குறியுடன் என் முகத்தைப் பார்க்க, நித்யாவுக்கு எல்லாம் தெரியும் என்பதுபோல் கண்களை மூடி, தலையை ஆட்டினேன். இப்பொழுது நந்தினிக்கும் வியர்த்தது. கர்ச்சீப்பால் நெற்றியை ஒற்றிக் கொண்டாள்.

"உங்க ஹஸ்பண்ட் வரலையா?" என்றாள் நித்யா.

"இல்ல...." என்ற நந்தினி எனது குழந்தையை நோக்கி கைநீட்டியவாறு, "பையனா? பொண்ணா?" என்றாள்.

"பையன்..." என்று நான் கூறிக் கொண்டிருந்தபொழுதே, என் மகன் சட்டென்று

தாவி, நந்தினியின் கழுத்தைக் கட்டிக் கொள்ள... நான் நெகிழ்ந்துபோய் நின்றேன்.

மேற்கொண்டு ஒன்றும் பேசாமல் நாங்கள் நின்று கொண்டிருக்க... திடீரென்று அழ ஆரம்பித்தான் என் மகன்.

"பசி வந்திருக்கும். கிச்சன்ல பால் கேட்டு வாங்கிட்டு வர்றேன்" என்ற நித்யா, ஃபீடிங் பாட்டிலை எடுத்துக் கொண்டு, கிச்சனைத் தேடிச் சென்றாள்.

சில வினாடிகள் அமைதிக்குப் பிறகு, "திடீர்னு.. இப்படி ஒரு தர்மசங்கடமான சூழ்நிலை. ஸாரி... உனக்கு ரொம்ப கஷ்டமா இருந்திருக்கும்" என்றேன் நான்.

"நீ இந்தக் கல்யாணத்துக்கு வருவேன்னு தெரியும். எந்தச் சூழ்நிலையும் கலங்க கூடாதுன்னு மனசைக் கல்லாக்கிக்கிட்டுதான் வந்தேன். உன்ன பாத்தப்ப... ஏன்... உன் ஒய்ஃப பாத்தப்ப கூட சமாளிச்சுக்கிட்டேன். ஆனா உன் ஒய்ஃப் கைல அந்த மோதிரத்த பாத்தப்பதான் நொறுங்கிப் போய்ட்டேன். பழசெல்லாம்.." என்ற நந்தினி மேற்கொண்டு பேசாததை, அவள் கண்கள் பேசின.

சட்டென்று உடைந்துபோன நந்தினி, என் மகனை அணைத்தபடி கண்ணீர் வடிக்க... நான் ஒன்றும் கூற இயலாமல் வேதனையுடன் நின்றுகொண்டிருந்தேன்.

திடீரென்று பின்னால் கொலுசு சத்தம் கேட்க, "நந்தினி.. நித்யா வர்றா" என்று நான் கூற, நந்தினி வேகமாக கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

நித்யா அருகில் வந்தவுடன், நந்தினி நித்யாவிடம் குழந்தையைக் கொடுத்து விட்டு, "நான் கீழ இருக்கேன். நீங்க சாப்டுட்டு வாங்க" என்று கூறிவிட்டு திரும்பி நடந்தாள்.

நித்யா என் கண்களை உற்றுப் பார்த்த படி, "என்ன பேசிக்கிட்டிருந்தீங்க? நந்தினி ஏன் அழுதா?" என்றாள்.

சில நெருக்கடியான சந்தர்ப்பங்களில், சட்டென்று பொய் சொல்ல முடிவதில்லை. நான் மோதிர விஷயத்தைக் கூற, நித்யா சலனமின்றி கேட்டுக் கொண்டாள்.

**நா**ங்கள் ஊருக்குத் திரும்பியவுடன், நித்யா அந்த மோதிரத்தைக் கழற்றி என்னிடம் நீட்டியபடி, "இத உன்ன வச்சுருங்க" என்றாள்.

"ஏன் நித்யா?"

"ஏன்னா... இனிமே இதப் பாக்குறப்ப எல்லாம் உங்க பழைய..." என்று ஆரம்பித்த நித்யாவின் அகன்ற கண்கள் கலங்கிவிட்டன. ஒரு திரைபோல வேதனை அவள் கண்களில் பரவியிருந்ததை என்னால் உணர முடிந்தது.

நித்யா மேற்கொண்டு ஒன்றும் கூறவில்லை.

நான் மௌனமாக அந்த மோதிரத்தை என் விரலில் மாட்ட, "உங்க கைல இருந்தாலும் என் கண்ணுல படும்" என்றாள் நித்யா.

நான் ஒன்றும் பேசாமல், மோதிரத்தைக் கழற்றி, பீரோ லாக்கரில் வைத்தேன்.

என்னிடம் ஒரு சிவப்புக்கல் மோதிரம் இருக்கிறது. உங்களில் யாருக்கேனும் வேண்டுமா?



**வ**யது வித்தியாச விமர்சனங்களால் இனி 'ஜோ'வுடன் ஜோடி சேருவதில்லை என முடிவெடுத்திருக்கிறாராம் சிம்பு.

**எ**ப்படியும் தனக்கு ஜோடியாக சானியா மிர்ஸாவை நடிக்க வைத்துவிடும் முயற்சியில் இருக்கிறார் சிம்பு.

**பெ**ரும்பாலும் தமது படங்களுக்கு யுவன்சங்கர் ராஜா இசையமைப்பதையே விரும்புகிறார் சிம்பு.

## விடாது சானியா!

கு.ஞானசம்பந்தன்

# சிக்கிக்கிட்டான் சினிமாமணி!

கிராமத்து தியேட்டர்களில் படம் ஓடிக் கொண்டிருக்கும்போது மூன்று முறை படத்தை நிறுத்தி விளக்குகளைப் போடுவார்கள். மங்கலாக ஒரு விளக்கு மட்டும் எரிந்தால் 'பாகம் விடுகிறான்' என்று அர்த்தம். அதாவது அந்தக் கால தியேட்டர்களில் ஒரு ப்ரொஜக்டர் (சினிமா காட்டும் இயந்திரம்) மட்டும்தான் இருக்கும். நாலு ரீல் படம் ஓடிய பிறகு புது ரீல்களை மாட்டி, பிறகு படத்தை ஓட விடுவார்கள். அது ஒரு சின்ன இடைவேளை.

எல்லா விளக்குகளும் எரிந்தால் பெரிய இடைவேளை. 'காரக் கல்லை, நெய்க் கல்லை, முறுக்கு' என்ற சத்தத்தோடு பத்துக்கும் மேற்பட்ட சிறுவர்கள், உட்கார்ந்து இருக்கிற இடத்துக்கே வந்து விற்பனை செய்வார்கள். அந்தக் கல்லையும் முறுக்கும் உலகத்தின் எந்த மூலையிலும் கிடைக்காது.

இந்நேரத்தில் படத்தின் மீதிக் கதையை ஆளாளுக்குச் சொல்லத் தொடங்குவார்கள். அதிலும் கிராமத்து மக்கள் படம் பார்க்கும்போது ஒன்றிப் போய்விடுவார்கள். 'அலிபாபாவும் 40 திருடர்களும்' என்ற படம் வெற்றிகரமாக எல்லா ஊர்களிலும் ஓடி எங்கள் ஊருக்கும் வந்து பல நாட்கள் ஓடிக் கொண்டிருந்த நேரம். அப்படத்தின் கடைசிக் காட்சியில் வில்லன் பி.எஸ். வீரப்பா, கதாநாயகி பானுமதியை ஒரு குதிரையில் கடத்திக் கொண்டு போக, கதாநாயகன் எம்.ஜி.ஆர். அவர்கள், மாடியில் இருந்து குதிரையில் சரியாகக் குதித்து துரத்திக் கொண்டு போக, தியேட்டர் முழுவதும் பரபரப்பாகி விசில் பறக்க,

திடீரென்று வீரப்பாவின் குதிரை இடது பக்கம் திரும்பி ஓட, தியேட்டரில் படம் பார்த்துக் கொண்டிருந்த பல பெண்கள் ஆவேசமாக 'இங்கிட்டு', 'இங்கிட்டு' 'இந்தப் பக்கம்' என்று சத்தமிட்டு எம்.ஜி.ஆர். குதிரைக்கு வழிகாட்டி மகிழ்ந்தார்கள்.

இரவு 10 மணிக்குப் படம்விட்டு வீட்டுக்கு நாங்கள் வந்தபோது ஆஸ்திரேலியா அரியநாயகமும் என் அப்பாவும் நின்றபடி பேசிக் கொண்டிருந்தார்கள். நாங்கள் ஒன்றும் ஆச்சரியப்படவில்லை.

'தம்பி, நீயும் இதெல்லாம் தெரிந்து கொள்ள வேண்டும். தமிழரின் பழம் பெருமையை உலகம்

சினிமாவுக்குப் போகலாம் வாங்க! 4

மறந்து விட்டது' என்று கூறிய அரியநாய கத்தின் கண்கள் கலங்கியிருந்தன.

எனக்கும் அழுகையே வந்துவிட்டது. மத்தியானம் சாப்பிட்டதுதான். சினிமா தியேட்டர் முறுக்கு வயிற்றுக்குள் தன் வேலையைக் காட்டத் தொடங்கியிருந்தது.

'நாளைக்கு வருகிறேன்' அவர் விடை பெற்றபோது வீடே அவரை நன்றியோடு பார்த்தது. அம்மா சாப்பாடுபோட, நாங்கள் சுற்றி உட்கார்ந்து சாப்பிட்டுக் கொண்டே படத்தின் கதையைப் பேசத் தொடங்கி னோம். பிறகு பேசிக்கொண்டே படுத்து, பேசிக் கொண்டே தூங்கி, கனவிலும் பேசிக் கொண்டே இருந்தோம்.

இப்போதும் இந்தப் பேச்சுக்களை நான் நினைத்துப் பார்ப்பதுண்டு. தற் காலத்தில் சினிமா பார்க்கும் யாரும், யாரோடும் பேசாமல் போகிறார்கள். ஆனால் ஆங்கிலப் படம் பார்க்கும் நண் பர்கள், அந்தப் படத்தை அலசி ஆராயா மல் போக மாட்டார்கள்.

பிற்காலத்தில் நான் மதுரைக்குப் படிக்க வந்தபோது இங்கிலீஷ் படம் பார்க்க நண்பர்களோடு போவதுண்டு. வீட்டுக்குத் தெரியாமல்தான் போக வேண்டும். இடை வேளையில் கட்டாயம் அப்பாவுக்குத் தெரிந்த ஒருவர் என்னைப் பார்த்து மர்ம மாய்ச் சிரித்துவிட்டு, எனக்கு முன்பாக வீட்டுக்குப் போய் என் அப்பாவிடம் என்னைப் 'புகழ்ந்து' சொல்லிவிட்டுத்தான் போயிருப்பார். படத்தின் க்ளைமாக்ஸை மிஞ்சிவிடும் வீட்டு க்ளைமாக்ஸ்.

மதுரையில் இப்போது ஆங்கிலப் படம் மட்டுமே போடுகின்ற (எப்போதாவது தமிழ்) தியேட்டர்களில் குறிப்பிடத்தகுந்தவை ரீகல், மாப்பிள்ளை விநாயகர், மாணிக்க விநாயகர் காம்ப்ளக்ஸ் தியேட்டர்கள். குடும் பத்தாருடன் சென்று பார்க்கத்தக்க நல்ல படங்கள் இந்த விநாயகர் காம்ப்ளக்ஸ் தியேட்டர்களில் தான் வரும். 25 வருடங் களாக வெற்றிகரமாக இயங்கிவரும் இந்த தியேட்டர்களில் ஆங்கிலப் படம் பார்த்த அக்கால ரசிகர்கள் படம் பார்த்துவிட்டு கதையை அலசி ஆராய்ந்து கொண்டு செல்லும் பாங்கே தனிதான். ஒரு புகழ்மிக்க ஆங்கிலப் படத்தை வியப்போடு பார்த்துக் கொண்டிருந்தோம். வழக்கப்படி இடை வேளையில் 'ஸ்டோரி டிஸ்கஷன்'.

'கடைசியில அவன் செத்திருவான் பாரு'- ஒருவன்.

'சாகமாட்டான் எந்திருச்சு பழையபடி வந்திருவான்' - மற்றவர்கள்.

எந்திருச்சு வந்தவன் தியேட்டர் காரனாத்தான் இருப்பான்.

ஒருவர் வியப்போடு என்னிடம் வந்து 'இங்கிலீஸ் படம்னா இங்கிலீஸ் படம்தாங்க' என்றார்.

'எப்படிச் சொல்றீங்க' என்றேன் நானும் வியப்போடு.

'படத்தில் வந்த அஞ்சு வயசுப் பையன் கூட எப்படி இங்கிலீஸ் பேசுறான் பாருங்க' என்று கூறி மகிழ்ந்தார். எனக்கும் அக் காலத்தில் வியப்பாகத்தான் இருந்தது அச்செய்தி.

'இந்த 'ஸ்டாரிங்'ன்னு ஒரு நடிகன் எல்லாப் படத்திலேயும் வர்றான்யா... பெரிய ஆளா இருப்பான் போல' என்று ஒருவர் சொல்ல,

'அதிலும் எடுத்தவுடனே அவன் பேரு தான் முதல்ல போடுறான் பாரு'.

வெகு நாட்கள் கழித்துத்தான் அந்த உண்மைக்கு விடை தெரிந்தது. 'STARING' என்றால் 'நடித்த' என்று பொருள். என் பள்ளிக்கூடத் தோழன் ஒருவன் எல்லாச் சினிமா நோட்டீஸ்களையும் எழுத்துக் கூட்டிப் படித்து மகிழ்வான். பெட்டி நிறைய சினிமா நோட்டீஸ்களைப் பொக்கிஷமாக



"சம்பளக் கவரை அம்மாகிட்ட குடுப்பியா... இல்ல சம்சாரம்கிட்ட குடுப்பியா?"

"கடன்காரன்கிட்ட!"

- அம்பை தேவா



• 'அலிபாபாவும் 40 திருடர்களும்' படத்தில்...

வைத்திருப்பான். அதுல ஒண்ணோடு ஒரு நாள் என்கிட்டே வந்து, 'பார்த்தாயா இதுல யார் யார் நடிக்க இருக்காங்கன்னு?'' என்றான்

'ஆமா பார்த்தேன்' என்றேன் நான்.

'இந்த 'மற்றும் பலர்'ன்னு ஒருத்தன் எல்லாப் படத்திலேயும் வர்றான். அவன் யாருன்னே தெரியலை' என்றான். அந்த வயதில் எனக்கும் அந்தக் குழப்பம் இருந்தது.

அந்தக் குழப்பத்தைத் தீர்த்து வைத்தவன் என் இனிய நண்பன் 'சினிமாமணிதான்'. அவன் பெயர் திருவேங்கடசுப்பிரமணி. நாளாக நாளாக அப்பெயர் சுருங்கிச் சுருங்கி மணியானது. பிறகு அவன் சினிமா ஞானத்தைப் பார்த்து உலகத்தார் அவனுக்கு வழங்கிய பட்டம்தான் 'சினிமாமணி'.

அவனிடம் ஒருநாள் மெதுவாகக் கேட்டேன். இந்த 'மற்றும் பலர்' யார்?

அவன் பயங்கரமாய்ச் சிரித்துவிட்டு, 'அடே மடையா, இங்க பார், இந்தப் படத்தில் வர்ற அத்தனை பேர் பேரையும் இந்தச் சின்ன நோட்டீஸ்ல போட முடியுமா? சிவாஜி, ஜெமினி, சாவித்திரி, தங்கவேலு, இவங்களோட நடிச்ச அத்தனை பேரையும் 'மற்றும் பலர்'ன்னு போடுவாங்க. என்கிட்ட கேட்ட மாதிரி இனி யார்கிட்டயும் கேக்காதே'' என்றான் தோழமையோடு.

அன்று முதல் அவனே எனது சினிமா குரு ஆனான். வீட்டுக்குச் சொல்லாமல் 'செகண்ட் ஷோ' பார்ப்பது, சுற்றுப்பட்டி 18 கிராமங்களிலும் நல்ல படங்கள் (இல்லாவிட்டாலும் பரவாயில்லை) பார்க்க இரவோடு இரவாக வாடகை சைக்கிள் எடுத்து மூன்று பேராக 'டிரிபில்ஸ்' போவது, முடிந்தால் மதுரைக்கே ஓடி ரயிலில் ரிலீஸ் படம் பார்த்து வருவது, பிற்காலத்தில் சென்னைக்கே ஓடி திரைப்படங்களில் நடிப்பது என்று இருபதாண்டுகாலத் திட்டம் வைத்திருந்தவன் சினிமா மணி.

ஒருநாள் என் தந்தையாரிடம் வசமாக மாட்டிக் கொண்டான்.

'இங்க வாடா, நீதான் இந்தத் தெருவுல இருக்குற அப்பாவிப் பையன்களை எல்லாம் கெடுத்து சினிமாவுக்குக் கூட்டிட்டுப் போறவனா? யாரு மகன்டா நீ?' என்று அவர் கோபத்தில் கர்ஜனை செய்ய, சினிமா மணி எங்களைப் பார்க்க... நாங்கள் பயத்தோடு அவனைப் பார்க்க....

*(ரீல் சுற்றும்...)*

படம் : **புதூர் சரவணன்**

# "சூரிய சந்திரர்கள்"

## பேராசிரியர் வீழிநாதன்

"சூரியனை நோக்கிப் போகிறபோது நமது நிழல் நம் பின்னாலேயே வரும். ஆனால் திரும்பிப் பார்த்து நிழலைத் தொடர ஆரம்பித்தோமானால் அது நம்மை விட்டு விலகிப் போய்க் கொண்டேயிருக்கும். அதை அடையவே முடியாது.

சாஸ்திரம், சம்பிரதாயத்துக்கு உட்பட்டு, சூரியனாகிற நமது இலட்சியம் நோக்கி தைரியத்தோடும் நியமத்தோடும் நாம் போக வேண்டும். இதைப் பண்ணினோமானால், சூரியனை நோக்கிப் போகிறபோது நிழல் எப்படி நாமறியாமலே பின்தொடர்கிறதோ, அப்படி பணம், பதவி, புகழ் ஆகிய மூன்றும் நாம் 'வேண்டாம் வேண்டாம்' என்று சொன்னாலும் நம்மைத் துரத்திக் கொண்டு வரும்.

அதை விட்டுவிட்டு, நிழலைப் பிடிக்கத் திரும்புகிற மாதிரி நாம் இந்த மூன்றில் ஏதாவது ஒன்றைப் பிடிக்க வேண்டும் என்று பிரயத்தனப்பட்டால், நிழல் நம்மை விட்டுப் போகிற மாதிரி பணமும் புகழும் பதவியும் விலகிப் போய்க்கொண்டே இருக்கும்! இலட்சியத்தை அடைகிற மார்க்கத்திலிருந்து நாம் திரும்பினோம் என்பதுதான் மிச்சமாகும்!"

காஞ்சி மஹா பெரியவர் கூறிய அழகான உவமை இது.



இந்த விளக்கத்துக்கு வாழும் உதாரணமாக இருந்தவர் எம்.எஸ்.

ஈசுவர அனுக்ரஹத்தினால் அவருக்கு மிக இனிய குரல் வளம் வாய்த்தது. அந்தக் குரல் வளத்தை, சங்கீதம் என்கிற தேவதைக்கு அர்ப்பணம் பண்ண வேண்டும் என்பதுதான் அவருடைய இலட்சியம். வாழ்நாள் முழுதும் இந்த இலட்சியத்தை நோக்கி அவர் சென்றார். அதை அடையவும் செய்தார்.

தந்தை ஹிமவான், மகள் பார்வதியைப் படிக்க வைத்தார். 'படிக்க வைத்தார்' என்று சொல்வது ஒரு பேச்சுக்குத்தான். ஏனென்றால் வித்யாஸ்வரூபிணியான பார்வதியை, வித்யைகள் தாமாக வந்து அடைந்தன.

சரத்ருதுவில் ஹம்ச பக்ஷிகள் எப்படி கங்கையை நோக்கிப் போகுமோ, மூலிகைச் செடிகள் இரவு நேரங்களில் எப்படி தாமாகவே ம்ருதுவான ஒளியை வெளிப்படுத்துமோ, அப்படி கல்வியானது பார்வதியை வந்தடைந்தது என்கிறார் காளிதாசர். அதே மாதிரிதான் சங்கீத தேவதை எம்.எஸ். அம்மாவை சௌலப்யத்துடன் நெருங்கி ஆட்கொண்டு, ஜாஜ்வல்யமாகப் பிரகாசிக்கச் செய்தாள்.

அந்த சங்கீத செல்வத்தை அவர் எப்படிக் கையாண்டார் என்பதே முக்கியம்.

இசை என்பது சர்வதேச மொழி. "இசையின் மூலமாக ஆத்ம சாதனைத்துக்கு வழி பிறக்கிறது'' என்று யாக்ஞவல்க்ய ஸ்ம்ருதி சொல்கிறது. 'வீணை நாதத்தின் நுட்பம் அறிந்தோர், சுருதி - தாளம் நன்கு அறிந்தோர் அதிக பிரயத்தனம் இல்லாமலேயே மோக்ஷ மார்க்கத்தில் பிரவேசிக்கிறார்கள்' என்று சொல்லப்பட்டிருக்கிறது.

எம்.எஸ். அம்மாவின் கீதங்களினாலே

எங்கள் எம்.எஸ்.

அவருக்கும் ஆத்மானுபவம் ஏற்பட்டது. அதைக் கேட்ட சகல லோகத்துக்கும் ஆத்மானுபவம் ஏற்பட்டது.

இந்த ஒரு உபகாரத்துக்காகவே உலகம் முழுவதும் அவருக்குக் கடமைப்பட்டிருக்கிறது.

மஹா பெரியவர் எம்.எஸ்ஸுக்குப் பெரிய அனுக்கிரஹம் பண்ணியிருப்பதாகச் சொல்வதுண்டு. அது தப்பு.

ஏனென்றால், பெரியவர்களின் அனுக்கிரஹம் என்பது சந்திர ஒளி மாதிரி - எல்லோருக்குமானது. நேர்மையினாலேயும் பக்தியினாலேயும் அவ்வருளுக்கு நாம் பாத்திரமாகலாம். அவ்விதம் பெரி



# உள்ளவரை..."

யவர்களின் அனுக்ரஹத்திற்குப் பாத்திரமானார்கள் எம்.எஸ்.

ப்ரஹ்லாதன் பற்றிச் சொல்வதுண்டு. பகவான் அவர் முன் தோன்றி, "என்ன வரம் வேண்டும் கேள்?" என்றார். ப்ரஹ்லாதன், "எனக்கு எந்த வரமும் வேண்டாம். உங்களை தரிசித்ததே போதும். அதற்கு மேலான வரம் ஏது?" என்றார்.

ஆனால் பகவான், "என்னை உபாஸித்ததினால் உனக்குக் கிடைத்த பலன் என் தரிசனம். என்னை தரிசனம் செய்ததற்கு பலன் உண்டு. ஆகவே, என்ன விருப்பமோ அதை வரமாகக் கேள்" என்றார். அப்போது ப்ரஹ்லாதன் "எந்தவிதமான விருப்பமும் என் மனத்தில் தோன்றாமல் இருக்க வேண்டும் என்ற என் விருப்பத்தை வரமாக அருள வேண்டும்" என்றார்!

எம்.எஸ். அம்மாவின் பக்தியும் மஹா பெரியவர்களிடத்தில் அப்படித்தான். மஹாபெரியவர்களை யாராலும் கட்டுப்படுத்த முடியாது. (அஜித) ஆனால் பக்தர்களுக்குக் கட்டுப்படுவார். (பக்த ஜித) அந்த பக்திக்குக் கட்டுப்பட்டுத்தான் அவர் எம்.எஸ். அம்மா ஐ.நா.சபையில் பாடுவதற்கு 'மைத்ரீம் பஜத' பாடலை இயற்றித் தந்தார்.

அந்தப் பாடலில் கடைசி இரண்டு வரிகள் என்ன சொல்கின்றன...?

தாம்யத தத்த தயத்வம் ஜனதா:
ச்ரேயோ பூயாத் ஸகல ஜனனாம்.

இதற்கு என்ன அர்த்தம்...? 'புலனடக்கம், ஈகை, தயை ஆகிய குணங்கள் பூவுலக மக்களிடையே பரவட்டும்; பூமியில் உள்ள சகல ஜனங்களும் ச்ரேயஸுடன் (சுபிட்ச

முடன்) விளங்கட்டும்' என்று அர்த்தம்.

இந்தப் பிரார்த்தனையை எத்தனை தடவை உள்ளமுருகிப் பாடியிருப்பார் எம்.எஸ். அம்மா! இன்று அணு ஆயுதமும் பயங்கரவாதமும் வலிமை பொருந்திய தேசங்களின் அராஜகமும் ஓங்குகிறபோதும் கூட உலகில் மனிதம் வாழ்கிறது என்றால், அதற்கு இதுபோன்ற பிரார்த்தனைகள் அன்றி வேறு என்ன காரணமாக இருக்க முடியும்?

மஹாபாரதத்தில் பீஷ்மர், துரோணர், கிருபாசார்யார், சல்யர் - இந்த நான்கு பேரும் பீஷ்ம பர்வத்தில் சொல்கிறார்கள்:

"மனிதன் செல்வத்துக்கு அடிமைப் பட்டவன். செல்வம் ஒரு போதும் மனிதனுக்கு அடிமைப்படாது. - இது சத்தியம். நான் செல்வத்தினால் திருதிராஷ்டிர புதல்வர்களால் கட்டுப்படுத்தப்பட்டு விட்டேன்" என்கிறார்கள்.

இந்த உலக நியதியை முறியடித்தவர் எம்.எஸ். செல்வத்துக்கு இம்மியும் கட்டுப் படாமல் அதனைத் தனக்குச் சேவகம் செய்ய வைத்தார்!

செல்வம் சம்பாதித்து, அதிலே கொஞ்சம் தனக்கென வைத்துக்கொண்டு தர்ம காரியம் செய்கிறவர்கள் நிறைய பேர். ஆனால், தர்மம் பண்ணுவதற்காகவே சம்பாதித்தார் எம்.எஸ். அம்மா. அத்தனையையும் தர்மத் துக்கே கொடுத்தார்.

இவ்வளவு தர்மம் செய்துவிட்டு அதைச் 'செய்தேன்' என்று சொல்லிக் கொண்டால் அது அழிந்துபோய்விடும் என்பது வேத வாக்கு.

எம்.எஸ். அம்மா ஒரு போதும் தமது தர்ம காரியங்கள் பற்றிப் பேசியதில்லை; தப்பித் தவறிகூட பேசியதில்லை. அவ்வளவு ஏன்... 'தர்மம் பண்ணினேன்' என்று அவர் நினைத்ததுகூட இல்லை. அந்த எண்ணமே இல்லாமல் வாழ்ந்தார்.

சதாசிவம் எம்.எஸ். தம்பதியோடு பழகிய ஆண்டுகளில் இந்த உயர் குணத் துக்கான உதாரண சம்பவங்கள் பலவற்றை நேரில் கண்டிருக்கிறேன்.

ஒரு முறை காஞ்சிபுரம் போய் வந்த கையோடு எம்.எஸ். அம்மா "இருபது ரூபாய் செலவாகியிருக்கு... மீதி இதில் இருக்கு" என்று கூறி பணம் எடுத்துப் போன பையைத் திருப்பிக் கொடுத்தார். அதை வாங்கிப் பார்த்தவர், "அம்மா இருபது ரூபாயல்ல... இருநூறு ரூபாய் செலவாகி யிருக்கு. நீங்கள் இரண்டு ரூபாய் என்று நினைத்துக் கொண்டு விநியோகித்தது ஒவ்வொன்றும் இருபது ரூபாய் நோட்டு" என்று விளக்கினார்.

"அப்படியா? இருபது ரூபாய் நோட்டு கூட இருக்கா?" என்று கேட்டார் எம்.எஸ். அம்மா!

பக்கத்திலேயே இருந்த சதாசிவம் சொன்னார்: "பேஷா போச்சு!"

"தாமரை நன்றாக வளர வேண்டு மானால் தண்ணீர் தெளிவாக, பரிசுத்தமாக இருக்க வேண்டும்; தண்ணீர் தெளிவாக இருக்க வேண்டுமானால், தாமரை அதிலே வளர வேண்டும்" என்கிறது யோக வாசிஷ் டம் (ஸ்ரீ ராமருக்கு வசிஷ்டர் செய்த உப தேசம் யோக வாசிஷ்டம்).

சதாசிவமும் எம்.எஸ்ஸும் இந்தத் தாம ரையும் தண்ணீரும் போல் திகழ்ந்தார்கள்.

'காளிதாஸ் ஸம்மான்' என்று மத்திய பிரதேச அரசு வழங்கிய விருதுடன் ஒரு லட்ச ரூபாய் ரொக்கமும் அளிக்கப்பட்டது. அதைப் பெற்று வந்த அன்றே சதாசிவம் எனக்கு போன் செய்து அவருக்கே உரிய முறையில் அழைத்தார்:

"வீழி! கார்த்தால இங்கே காபி சாப்பிட வந்துடேன்..."

போனேன். ஒரு லட்ச ரூபாய் பணத்தை அப்படியே மஹாபெரிய வர்களிடம் தரவேண்டும் என்று சொன்னார்.

பெரியவர் காதில் விஷயத்தைப்



• எம்.எஸ்ஸுடன்

போட்டபோது.

"பணத்தை வைச்சுண்டு என்ன பண்ணறது? எட்வர்ட் அரசன் முத்திரை போட்ட பவுனாக வாங்கிக் கொடுத்துவிடச் சொல்லு" என்று ஆணை பிறந்தது.

அதற்கு இணங்கி அன்றைய விலையில் ஒரு லட்ச ரூபாய் மதிப்புக்குப் பவுன் காசுகள் வாங்கிச் சமர்ப்பிக்கப்பட்டது. (அந்தக் காணிக்கையை பெரியவர் உரிய தர்ம காரியங்களுக்கு உபயோகப்படுத்திக் கொண்டார்.)

எம்.எஸ்.-சதாசிவத்தின் காணிக்கையைப் பெற்றுக் கொண்டவர், ஒரு தட்டு நிறைய குங்கும பிரசாதத்தைப் போட்டுக் கொடுத்தார். குங்குமத்துக்கு அடியில் ஓர் அழகான பவுன் காசு மாலை.

அவர்கள் சென்ற பின்பு பெரியவர் சொன்னார்கள், "அவர்களிடம் பவுன் பெற்றுக் கொண்டேன்; அவர்களிடமே திருப்பிக் கொடுத்துள்ளேன். நான் கொடுத்ததினால் 'இனிமே இதை இன்னொருத்தருக்கு தானமாகக் கொடு' என்று சதாசிவம் எம்.எஸ்ஸிடம் சொல்ல முடியாது இல்லையா!"

மஹா பெரியவர் வழிகாட்டி, தேர்வு செய்து தந்த பல சுலோகங்களையும், கீதங்களையும் எம்.எஸ். அம்மா பாடி ஒலிப்பதிவு செய்து அளித்துள்ளார். மௌனராக மாலிகை இவர் உத்தரவின் பேரில்தான் பாடப்பட்டது. பாலாஜி பஞ்சரத்ன தொகுப்பில் சுலோகங்களும் அவர் தேர்வு பண்ணிக் கொடுத்தவைதான். உச்சரிப்பு திருத்தமாக உள்ளதா என்று சரிபார்ப்பதும் உதவுவதும் எனக்குத் தரப்பட்ட பணி. இதை ஒரு மிகப் பெரிய கௌரவமாக நான் கருதிச் செய்து வந்தேன்.

எத்தனை முறை திருத்தம் சொன்னாலும் மனத்திலே சோர்வு இல்லாமல் திருத்திக் கொள்வார் அம்மா. ஸ்ரீரங்க கத்யம் மிகக் கடினமான உச்சரிப்பு கொண்டது. அதைத் துல்லியமாகப் பதம் பிரித்துப் பாட அம்மாவால்தான் முடிந்தது. அதிலே தோஷம் கண்டுபிடிக்க வேண்டும் என்று தேடினாலும் முடியாது! அப்படி ஒரு அப்பழுக்கில்லாத சுத்தம். மௌனராக மாலிகையின் வார்த்தைகள் அர்த்தங்களைப் பொதித்து பொதித்து அடக்கிய அமைப்பில் இருக்கும். 'கௌரிமனோஹரி தம்பர சத்தம்' என்று வந்தால் 'கௌரிமனோஹரி' என்பது ராகத்தைக் குறிக்கும். "ஹரிதம்பர" சத்தம் என்பது பரமேச்வரனைக் குறிக்கும். (திக்கெல்லாம் தனது ஆடையாகக் கொண்டவன் என்று பொருள்). இந்த இடத்தில் ஒரு கணத்துக்கும் குறைவாக இடைவெளி கொடுத்து இரண்டு அர்த்தங்களும் விளங்கும்படி பாடவேண்டும் என ஆணையிட்ட மஹா பெரியவர்களிடம் 'இது எப்படி சாத்தியம்?' என்று கேட்டேன்... அதற்கு அவர் சொன்னார்:

"நீயா பாடப் போறே...? அவா பாடிடுவா... நீ ஏன் கவலைப்படறே?"

அதே மாதிரி, பெரியவர்களின் ஆசி அனுக்கிரஹத்தால் உரிய முறையில் துல்லியமாக அந்த இடத்தில் எம்.எஸ். அம்மா பாடியிருப்பது, கவனித்துக் கேட்டால் புலனாகும்.

இந்த ஒலிப்பதிவு முடிந்து காஸெட் வெளியாகிற தருணத்தில் மஹா பெரியவர் எம்.எஸ்ஸிடம் என்ன சொன்னார் தெரியுமோ...?

"சூரிய - சந்திரர்கள் உள்ளவரை உன் கியாதி (புகழ்) இருக்கும்" என்றார்.

இதைவிட பெரிய அனுக்கிரஹம் என்ன வேண்டும்?

(நிறைந்தது)



• மகா பெரியவருக்கு பாத பூஜை செய்யும் சதாசிவம் - எம். எஸ். தம்பதி

'ஆதி' முடித்த திருப்தியில், அடுத்த படத்துக்கான திட்டமிடலில் இருக்கிறார் விஜய். சூப்பர் ஸ்டாருக்குப் பிறகு ஏராளமான ரசிகர்களைப் பெற்றுவிட்டதாலோ என்னவோ, இப்போதெல்லாம் அவரது ஒவ்வொரு அடியிலும் ஏக நிதானம், அமைதியாக, அதே நேரம் ஆழமாகவும் நம்மிடம் பேசினார்....

**ஒரு படத்தை முடித்து, அடுத்த படம் தொடங்கும்போது உங்களுக்கு டானிக் மாதிரி உற்சாகம் தருவது யார்?**

"என்னோட ரசிகர்கள். அவங்க முகத்துலே நான் பார்க்கிற சந்தோஷம். அப்புறம் என் படத்தை வாங்கின விநியோகஸ்தர்கள், தியேட்டர்காரங்க, படத்தோட தயாரிப்பாளர் இவங்களோட சந்தோஷம். ஆதி ரிலீஸுக்குப் பிறகு, இந்த நாலு தரப்புமே ஹேப்பியா இருக்காங்க. போன் பண்ணி வெற்றியைப் பகிர்ந்துக்கறாங்க. அப்பாதான் தயாரிப்பாளர். அவரும் ரொம்ப சந்தோஷமா இருக்கார். இதைவிட பெரிய டானிக் என்ன வேணும் சொல்லுங்க?"

**உங்களுக்குச் சிறுவர்களும் அதிக அளவில் ரசிகர்களாக இருக்கிறார்கள். ஆனால் உங்களது சமீபத்திய படங்களில் வன்முறைக் காட்சிகள் எல்லை மீறிப் போய்க் கொண்டிருக்கிறதே?**

" 'ஆதி'ல மட்டும்தான் வயலென்ஸ் கொஞ்சம் அதிகம். ஆனால் 'சிவகாசி', 'திருப்பாச்சி'யிலே எல்லாம் வன்முறைன்னா ஒத்துக்க மாட்டேன். ஆதியைப் பொறுத்தவரைக்கும் இன்டர்வெல் சீன்லே அந்தத்



# "நல்லாட்சி நடத்துகிறார் ஜெயலலிதா!"

தலை துண்டா போனாத்தான் இந்தக் கதைக்கே ஒரு அழுத்தம் கிடைக்கும். அது இல்லேன்னா நிச்சயம் மைனஸ்தான். கதைக்குத் தேவைப்படுற காட்சி. அதையே கோரமா இல்லாம, முகம் சுளிக்கிற அளவுக்குப் போயிடாமத்தான் படம் பண்ணியிருக்கோம்.''

**அடிதடி மசாலாவை விட்டுவிட்டு ஏன்**







படுத்தணும். சிரிக்க வைக்கணும்னு ஆசைப்படுறேன். அவங்களும் அதையேதான் ஃபீல் பண்றாங்க. கொஞ்ச பேரை மட்டும் திருப்திபடுத்துற நடிகனா இருக்கணும்னு நினைச்சா இந்தத் துறைக்கு வந்திருக்க வேண்டிய அவசியமே இல்லே. எல்லா தரப்பு ரசிகர்களுக்கும் படம் பண்ணணும். இதுதான் அவங்க எதிர்பார்ப்பு. இதை மத்தவங்க சொல்லி நான் செய்யலே. நேரடியா தியேட்டர்களுக்குப் போய் ரசிகர்களோடு படம் பார்க்கிறேன். எங்கெங்கே ரசிக்கிறாங்க, எங்கெங்கே நெளியறாங்க எல்லாத்தையும் தெரிஞ்சுக்கிறேன். ஒவ்வொரு படத்துலேயும் சில தவறுகள் நம்மையும் அறியாமல் வந்துடும். அதையெல்லாம் அடுத்த படத்துலே செய்யக்கூடாதுன்னு பாடம் கத்துக்கிட்டே டிராவல் பண்றேன்.

**'ஆதி'யில் உங்கள் தோற்றத்தைக் கொஞ்சம் மாற்றியிருந்தீர்கள். அடுத்தடுத்த படங்களிலும் அதிரடியாக கெட்-அப் சேஞ்சில் இறங்குவீர்களா?**

''வாய்ப்பே இல்லை. என் முகத்துல பெரிய மாற்றத்தை எதிர்பார்க்கலே. மாற்றத்தை ஏத்துக்க மாட்டாங்கன்னு இல்லே.

# -விஜய் Exclusive பேட்டி

**வெளியே வரமாட்டேன் என்கிறீர்கள்?**

''பிடிவாதம் எதுவுமில்லை. ஆனா லட்சுமணக் கோடுன்னு சொல்வாங்கல்ல... அது மாதிரி ரசிகர்கள் எனக்குன்னு பாசமா ஒரு கோடு போட்டுக் குடுத்து, அதுக்குள்ளே நீ வூடு கட்டி வெளையாடுன்னு சொல்றாங்க. நான் நல்ல எண்டெர்டெயினரா இருக்கணும். ரசிகர்களை சந்தோஷப் எனக்கே அதுக்குள்ள போக முடியலே. என்னாலே அதை கற்பனை பண்ணியே பார்க்க முடியலே. சில முகங்களுக்கு கெட்-அப் சேஞ்ச் அவ்வளவா பொருந்தாது. என்னோட முகத்துக்கும் அது சரிப்பட்டு வராது. மீறி பண்ணினால் ஏதோ தேவையில்லாமல் பண்ணிட்டார்னு ஆயிடும்.''

**விஜய்-த்ரிஷா ஜோடிக்கு மட்டும்**




• அரசு விழா!

**ரசிகர்களிடத்தில் அப்படி என்ன ஒரு ஈர்ப்பு?**

"அதுக்குக் காரணம் கில்லி, திருப்பாச்சி படங்களோட வெற்றிதான். ஆதிக்கு யாரை ஹீரோயினா போடலாம்னு பேச்சு வந்தது. அப்போ விநியோகஸ்தர்கள், என் நண்பர்கள், கல்லூரி மாணவர்கள் எல்லார்கிட்டேயும் பொதுவாகக் கருத்து கேட்டேன். எல்லோரும் சொன்னது த்ரிஷாவைத்தான். என் மனைவிகிட்டே கேட்டேன். அவங்களும் ஸ்கிரீன்லே உங்க ஃபேர் நல்லாயிருக்குன்னு சொன்னாங்க. அதே மாதிரி த்ரிஷாவும் எவ்வளவு ஸ்கோப் இருக்கோ அதுக்குள்ளேயே நல்லா பெர்ஃபாம் பண்ணணும்னு நினைக்கிறாங்க. இது ரசிகர்களுக்கும் ரொம்பப் பிடிக்குது."

**இப்போதெல்லாம் ஊர் ஊராகப் போய் ரசிகர்களைச் சந்திக்கிறீர்கள்! ஏதாவது திட்டம் வைத்திருக்கிறீர்களா?**

"ரசிகர்கள் என்னைத் தேடி இங்கேயும் வராங்க. அவங்களைத் தேடி நானும் போறேன். சிவகாசி படம் ரிலீஸ் ஆனப்போ, சிவகாசிக்குப் போய் ரசிகர்களை சந்திச்சேன். இப்போ சென்னைக்குப் பக்கத்துலே நேமம்கிற கிராமத்துலே போய் அந்த ஊர் மக்களோடு பொங்கல் கொண்டாடிட்டு வந்தேன். என்னை ரசிக்கிற ரசிகனை, நாமளும் நேர்லே போய் பார்த்து, அவங்க சந்தோஷப்படுறதை ரசிக்கணும்னு நினைக்கிறேன். இது ஜஸ்ட் ஒரு ஹெல்தி இண்டராக்ஷன். வேற எந்த நோக்கமும் இல்லே."

**சமீப காலமாய் அரசியல் விழாக்களில் அடிக்கடி தென்பட ஆரம்பித்து விட்டீர்களே... என்ன விஷயம்?**

"அய்யய்யோ! அது அரசியல் விழா இல்லீங்க, அரசு விழா. பொங்கல் பண்டிகையை ஒட்டி மத்திய அரசு ஒரு சிறப்புத் தபால் தலை வெளியிடுறாங்க. பிரதமர் வெளியிட, அதை நான் ரிசீவ் பண்ணணும்னு தமிழ்நாட்டிலேருந்து என்னை இன்வைட் பண்ணினாங்க. இதை என் வாழ்நாள்லே எனக்குக் கிடைச்ச மிகப் பெரிய கௌரவமா நான் நினைக்கிறேன். தமிழ் நாட்டிலே வாழுற அத்தனை பேருக்கும் இந்தக் கௌரவத்துலே பங்கு இருக்கு. தயவு பண்ணி இதுலே அரசியலைக் கலந்துடாதீங்க."

**மத்திய அமைச்சர் தயாநிதி மாறனோடு நீங்கள் கலந்துரையாடிய நிகழ்ச்சி சன் டி.வியில் வந்த பிறகு, விஜய் தி.மு.கவில் சேரப் போகிறார் என்று பேச்சு வருகிறதே?**

"இது என்ன வம்பா போச்சு! இப்போ மட்டுமில்லீங்க.. இன்னும் இருபது வருஷம் கழிச்சுக் கேட்டாக் கூட விஜய் பொதுவான ஆள்தான். நான் பேப்பர் படிச்சு என்ன நடக்குதுன்னு தெரிஞ்சுக்கிற ஆள். நான் போயி அரசியல்லே இறங்கினா எப்படி இருக்கும்னு நினைச்சுப் பாருங்க. இன்னிக்கு இல்லீங்க... இன்னும் இருபது வருஷம் கழிச்சுக் கேட்டாலும் அரசியல் நமக்கு ஆகாதுன்னுதான் சொல்வேன். நடிப்பு, சினிமான்னு சொல்லுங்க, நாள் கணக்குலே உட்கார்ந்து பேசுவோம். விருப்பமில்லாத விஷயத்தைப் பத்தி எதுக்குப் பேசி நேரத்தை வீணாக்கணும்!"

**அப்படியானால் தயாநிதி மாறனுடனான சந்திப்பு தற்செயலாக நடந்ததா?**

"அதுதான் உண்மை. தபால்தலை வெளியிடுற நிகழ்ச்சி ஈவ்னிங் நடந்தது. நான் காலையிலேயே டெல்லி போயிட்டேன். அந்த இடைப்பட்ட நேரத்துலே என்ன பண்றதுன்னு பார்த்தப்போ அமைச்சர் தயாநிதி மாறனைச் சந்திக்கிற வாய்ப்பு கிடைச்சது. சினிமாவுல நான் ஒரு யங் ஸ்டார். அரசியல்லே அவர் ஒரு எனர்ஜெடிக் யங் ஸ்டார். அந்த டி.வி நிகழ்ச்சி, திட்டமிடல் இல்லாமல் திடீர்னு

நடந்தது. அதுல கட்சியைப் பத்தி அவரும் ஒரு வார்த்தை கூட பேசல... நானும் பேச வேண்டிய அவசியமில்ல. இதுல எங்க வந்துச்சு அரசியல்? இதுவரைக்கும் என் ரசிகர்களுக்குக் கூட அரசியல் பத்தி நான் எதுவும் சொன்னதில்லை. அது அவங்க பர்சனல் விஷயம்."

**ஜெயலலிதா, கலைஞர் பற்றி உங்க பொதுவான கருத்து என்ன?**

"ரெண்டு பேருமே திடீர்னு தலைவரா வந்துடல. படிப்படியா போராடித்தான் வந்திருக்காங்க. அதனால ரெண்டு பேரையுமே எனக்குப் பிடிக்கும். ரெண்டு பேராலயும் நாட்டு மக்களுக்கு நல்லது நடந்திருக்கு. கலைஞர், ஜெயலலிதா மேடம் இரண்டு பேரையுமே நேர்ல சந்திச்சி ருக்கேன். இரண்டு பேருமே எங்கிட்ட அன்பும் பாசமும் காட்டுறாங்க. இப்போ ஜெயலலிதா மேடம் ஆட்சி நல்லாவே நடந்திட்டு இருக்கு. இதுக்கு முன்னாடி கலைஞர் ஆட்சியும் சிறப்பாவே நடந்தி ருக்கு. ஆளுங்கட்சி, எதிர்க்கட்சி எந்த நிலை யில இருந்தாலும் இவங்க தலைமையை மதிச்சு ஏன் ஓட்டுப் போடுறாங்க? மக்கள் இவங்கமேல வெச்சிருக்கிற நம்பிக்கை தானே! அந்த நம்பிக்கையைக் காப்பாத்தறது னாலதான் அவங்க தலைவர்களா இருக் காங்க. நாம தூரமா இருந்து அவங்களைப் பார்த்துக்கிட்டு இருக்கோம்."

**அடுத்த சூப்பர் ஸ்டார் நீங்கள்தான் என்று பேசப்படுவது பற்றி?**

"படிப்படியா என்னை ஏத்துக்கிட்டு, இன்னைக்கு என்னை ஒரு நல்ல இடத்துல தமிழ் ரசிகர்கள் வெச்சிருக்காங்கன்னு எல் லோரும் சொல்லும்போது அதை ரியலைஸ் பண்றேன். சினிமான்னு இல்லை, எந்தத் துறையா இருந்தாலும் நான் நம்பர் டூவா இருக்கணும், நம்பர் த்ரீயா இருக்கணும்னு யாரும் ஆசைப்பட மாட்டாங்க. முதலிடத் துக்கு வரணும்கிறதுதான் என்னோட குறிக்கோள். அதுக்காக போராடிக்கிட்டி ருக்கேன். அதுக்காக எவ்வளவு வேணும் னாலும் உழைக்கலாம். ஏன்னா... தமிழ் மக்களோட அன்பு மாதிரி கலப்படம் இல்லாத விஷயம் வேற எதுவும் இல்லே."

**- ஆர்.சி. ஜெயந்தன்**

படங்கள்: **ஸ்ரீஹரி**

ஜென்னி வின்கோ செய்த ஒரே தவறு, தனது வீட்டு ஜன்னல் கதவைத் திறந்து வைத்ததுதான். எப்பொழுதும் மூடித்தான் வைத்திருப்பாள். கடைசியாக இந்த ஜன்னலை எப்பொழுது திறந்தாள் என்று அவளுக்கே தெரியாது. ஆனால் அன்றைக்கு புழுக்கம் தாங்க முடியவில்லை. அறை முழுவதும் ஒரே வெப்பம். துணிந்து கதவைத் திறந்தாள் ஜென்னி.

ஆஹா, அருமையான காற்று. சிறிது நேரம் கண்களை மூடி குளிர்ந்த காற்றை அனுபவித்தாள். வயதாகிவிட்டது. இன்னும் ஒரு ஆண்டு கடந்தால் 80. தூங்கலாமா? படிக்கலாமா? நேரம் ஆகிவிட்டது. பேசாமல் தூங்கலாம். விளக்கை அணைத்துவிட்டு படுக்கைக்குத் திரும்பினாள் ஜென்னி. ஒரு விநாடி ஜன்னலைத் திரும்பிப் பார்த்தாள். சார்த்தி விடலாமா? அல்லது திறந்தேயிருக்கட்டுமா? இருக்கட்டுமே. யார் வந்து இந்தப் பாட்டியை என்ன செய்துவிடப் போகிறார்கள்? திருடிக் கொண்டு போகவும் பெரிதாக எதுவும் கிடையாது. கம்பிகள் பொருத்தப்படாத அந்த ஜன்னலின் வழியாக ஆகாயத்தைப் பார்த்தபடி



* ரிச்சர்ட்

உறங்கிப் போனாள் அந்தப் பாட்டி.

தெரு முனையிலிருந்து வெளிப்பட்ட அந்த உருவம், சப்தம் எழுப்பாமல் அந்த வீட்டை நெருங்கியது. ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்தது. வாயைப் பிளந்தபடி தூங்கிக் கொண்டிருந்த அந்தப் பாட்டியைத் தவிர வேறு யாரும் இருப்பது போல் தெரியவில்லை. ஒரு விநாடியும் தாமதிக்காமல் உள்ளே குதித்தது. (யாராவது அந்த உருவத்தைப் பார்த்திருந்தால் ஆடையணிந்த எலும்புக் கூடு என்றே நினைத்திருப்பார்கள். அத்தனை ஒல்லி).

மறுநாள் காலை தனது அம்மாவைத் தேடிக் கொண்டு வீட்டுக்குள் நுழைந்த அவரது மகன் (அவன் வசிப்பது முதல் மாடியில்), விக்கித்து நின்றான். திறந்த வாய் திறந்தபடியே இறந்து போயிருந்தாள் ஜென்னி வின்கோ. மகனை விட அதிக அதிர்ச்சியடைந்தது காவல்துறைதான். ஏனென்றால் 79 வயதான அந்த மூதாட்டி கொலை செய்யப்படுவதற்கு முன்னால் பாலியல் பலாத்காரத்துக்கு உட்படுத்தப்பட்டிருந்தாள். அறை முழுவதும் சிவப்பு நிற கைரேகைகள்.

ஜூன் 28, 1984-ல் நடைபெற்ற இந்தக் கொடூர சம்பவம் ஒரு தொடக்கம் மட்டுமே என்பதை லாஸ் ஏன்ஜெல்ஸ் புரிந்துகொண்டது. வின்சென்ட் (கொல்லப்படுவதற்கு முன்பு அவரது கண்கள் தோண்டி எடுக்கப்பட்டிருந்தன)

# இரவு

டாய்லே ஒகாசாகி (துப்பாக்கி வெடித்து மரணம்) சாப்பில் டோய் (துப்பாக்கி), பேட்டி ஹிக்கின்ஸ்... மர்மமான முறையில் கொலையானவர்களின் எண்ணிக்கை நீண்டுகொண்டே சென்றது.

ஜூன் 1984 முதல் ஆகஸ்ட் 1985 வரையில் 12 கொலைகள், கொலையுண்ட அனைவரிடமிருந்தும் பொருள்கள் சூறையாடப்பட்டிருந்தன. பெண்களாக இருக்கும் பட்சத்தில் பாலியல் பலாத்காரம். எவ்வளவு வயதானவர்களாக இருந்தாலும் சரி.

கொலையாளியைப் பற்றி காவல் துறைக்குக் கிடைத்த உருப்படியான துப்புகள் மூன்று. ஒன்று, கைரேகை. இரண்டு கொலையாளியைப் பற்றிய சில வருணனைகள். "ஒல்லியா இருந்தான் சார். எலும்புக் கூடு மாதிரி. அப்புறம் உயரமா இருந்தான். கொஞ்சம்

உலகை உலுக்கிய குற்றங்கள்! 3



கறுப்பு" மூன்றாவது. குற்றவாளி ஒரு சாதாரண திருடனோ கொலைகாரனோ அல்ல. மிகக் கொடூர மிருகம்.

தமக்குக் கிடைத்த அடையாளங்களை வைத்து ஒரு படத்தை வரைந்து அதை அனைத்துப் பகுதிகளுக்கும் அனுப்பி வைத்தது லாஸ் ஏன்ஜெல்ஸ் காவல்துறை. 'படத்தில் காணப்படுவதைப் போன்ற தோற்றம் கொண்ட குற்றவாளி மிகவும் ஆபத்தானவன். அவனைப் பற்றிய விவரங்கள் தெரிய வந்தால் உடனடியாக எங்களைத் தொடர்பு கொள்ளுங்கள். உங்களது இருப்பிடத்துக்கு அருகே சந்தேகத்துக்கு இடமளிக்கும் வகையில் யாராவது

பிசாசு!

நடமாடினால் தெரியப்படுத்தவும்."

முதல் முறையாக லாஸ் ஏன்ஜெல்ஸ் இரவிலும் விழிக்கத் தொடங்கியது. அனைத்துக் கதவுகளும் (குறிப்பாக ஜன்னல்கள்) அழுத்தமாக மூடப்பட்டன. தெருவில் நடமாட்டம் குறையத் தொடங்கியது. யாரை, எப்பொழுது, எதற்காகக் கொல்வார்கள் என்பதே தெரியாத நிலை. மக்கள் அந்தக் கொலையாளிக்கு 'இரவுப் பிசாசு' எனும் பட்டத்தைச் சூட்டினார்கள்.

சில வீடுகளில் முன்னெச்சரிக்கையாக அட்டையில் மனித உருவத்தை வரைந்து வெட்டி வீட்டு வாசலில் நிற்க வைத்தார்கள். தொலைவிலிருந்து பார்க்கும்பொழுது யாரோ நின்று கொண்டிருப்பது போல் தெரியும். இப்படி வைத்தால் அந்தப் பிசாசு தமது வீட்டை நெருங்காது என்று அவர்கள் நினைத்தனர்.

ஜூன் 1, 1965ல் ரிச்சர்ட், 83 வயதான மாபெல் பெல் என்பவரைச் சுத்தியலால் சிறிது சிறிதாக அடித்துச் சாகடித்தான். ஜூலை 6, ஜோய்ஸ் நெல்சன் எனும் மூதாட்டி அவளது வீட்டில் பிணமாகக் கண்டெடுக்கப்பட்டாள். 66 வயதான மாக்ஸன் மற்றும் அவரது மனைவி லேலா இருவரும் சன் வேலியில் சுட்டுக் கொல்லப்பட்டனர்.

இரவுப் பிசாசு ஒரு வேளை சைக்கோவாக இருக்குமோ என்ற சந்தேகம் முதல் முறையாகக் காவல் துறையினருக்குத் தோன்றியது. 200 துப்பறியும் நிபுணர்கள் இரவுப் பிசாசை தேடும் பணியில் அமர்த்தப்பட்டனர்.

ரிச்சர்ட் ராமிரேஜ் சிரித்துக்கொண்டான். இரவுப் பிசாசு எனும் பெயர் அவனுக்குச் சிரிப்பை வரவழைத்தது. ஒரு வகையில் அவனுக்கு மகிழ்ச்சியாகவும் இருந்தது. 'ஆயிரக்கணக்கான மக்கள் எப்பொழுதும் என்னையே நினைத்துக் கொண்டிருப்பார்கள். அவர்களது கனவில் தினமும் நான்தான் தோன்றிக் கொண்டிருக்கிறேன். ஆனால் இதில் வேடிக்கை என்னவென்றால் என் முகம், பெயர் எதுவுமே யாருக்கும் தெரியாது.'

ஒட்டுமொத்த லாஸ் ஏன்ஜெல்ஸும் ரிச்சர்ட்டை வலை வீசித் தேடிக்கொண்டிருந்த அதே சமயம் ரிச்சர்ட் மற்றொரு பக்கம் தனது வலையைத் தொடர்ந்து வீசிக் கொண்டிருந்தான் குரூரப் புன்னகையோடு...

(திகில் பரவும்)

-மருதன்

# கந்தப்ப பிள்ளை சொன்ன கதைகள் - 15

கந்தப்ப பிள்ளையின் கதை முடிந்தது. எழும்பூர் ரெயில் நிலையமும் வந்து சேர்ந்தது.

நாங்கள் பிரிந்து போக நேர்ந்தபோது, "கந்தப்ப பிள்ளை! இப்போது நீலமணி எங்கே இருக்கிறாள்? என்ன செய்து கொண்டிருக்கிறாள்?" என்று கேட்டேன்.

"சில வருஷ காலம் பிரம்மஹத்தி பிடித்தவள்போல் இருந்தாள். பிற்பாடு சங்கீதத்தில் கவனம் செலுத்தினாள். நல்ல திறமை பெற்றுவிட்டாள். ஆனால் வெளியில் வந்து பாடுவதில்லை. எப்படி வருவாள்? ரேடியோ என்பதாக ஒன்றைக் கண்டுபிடித்தார்களே, அந்தப் புண்ணியவான்கள் நன்றாயிருக்க வேணும். சில சமயம் நல்ல சங்கீதத்துக்கும் ரேடியோவில் இடம் கொடுக்கிறார்கள். மூன்று மாதத்துக்கு ஒரு தடவை போய் ரேடியாவில் கச்சேரி செய்து விட்டு வருகிறாள். சங்கீதம் ஒன்றுதான் இப்போது அவளுக்கு ஜீவாதாரமாயிருந்து வருகிறது" என்றார் கந்தப்ப பிள்ளை.

"சங்கீதத்துடன் தங்களுடைய அன்பும் ஆதரவும் சேர்ந்திருக்கின்றன அல்லவா?" என்றேன் நான்.

"அடுத்த வாரத்தில் கூட நீலமணியின் ரேடியோ கச்சேரி இருக்கிறது; முடிந்தால் கேளுங்கள்!" என்றார் கந்தப்ப பிள்ளை.

"அவசியம் கேட்கிறேன்; ஆனால் நீலமணிக்கு என்னதான் நேர்ந்தது? அந்த முக்கியமான விஷயத்தை நீங்கள் சொல்லவில்லையே!" என்று கேட்டேன் நான்.

"தெரியவில்லையா, ஐயா! வேறு யாருடனும் அவள் நாடக மேடையில் ஏறி நடிக்கக் கூடாது என்பதற்காக அந்தச் சண்டாளப் பாவி அக்கினித் திராவகத்தை அவள் முகத்தில் ஊற்றிக் குரூபியாகச் செய்துவிட்டான். அவன் எப்பேர்ப்பட்ட ராட்சஸனாயிருக்க வேண்டும்? இவ்வுலகில் மனித உருக் கொண்ட ராட்சஸர்களும் இருக்கிறார்கள்!" என்றார் கந்தப்ப பிள்ளை.

நான் ஊகித்ததைதான் அவர் சொன்னார் என்றாலும் என் உள்ளத்தில் அப்போது சொல்ல முடியாத அருவருப்பும் பயங்கரமும் தோன்றின.





"ஆனால் இந்தச் செய்தி ஊரில் ஒருவருக்கும் தெரியாது. பட்டாசுப் பெட்டிகள் வெடித்த விபத்தினால் நீலமணிக்கு இப்படி நேர்ந்தது என்றே நம்பினார்கள். டாக்டர் ராமசர்மாவுக்கு மட்டும் தெரியும். என்னுடைய வேண்டுகோளின் பேரில் அவர் யாரிடமும் சொல்லவில்லை. இன்றைக்குத்தான் முதன் முதலாகத் தங்களிடம் சொன்னேன்!" என்றார் கந்தப்ப பிள்ளை.

"அந்த ராட்சஸன் - நமச்சிவாயம் பிற்பாடு என்ன ஆனான்?" என்று கேட்டேன்.

"யார் கண்டார்கள்?" நான் திரும்பிப் போய் இடிந்து விழுந்து கொண்டிருந்த வீட்டில் தேடிப் பார்த்தபோது அவனைக் காணவில்லை. அவன் என்ன ஆனான் என்று விசாரிக்கவும் இல்லை. பல மாதங்கள் கழித்து நீலமணி என்னிடம் அவனைப் பற்றிக் கேட்டதற்கு 'அவன் க்ஷயரோகத்தினால் செத்துப் போனான்' என்று சொல்லிவிட்டேன்.

"ஒரு வேளை உண்மையிலேயே செத்துத்தான் போய்விட்டானோ, என்னமோ?"

"அவ்வளவு பொல்லாதவர்களுக்கு இந்த உலகில் சாவு வருகிறதில்லை ஐயா! எங்கேயோ உயிரோடுதான் இருக்கிறானாம். வேறு நாடக கம்பெனியில் அன்றாடச் சம்பளத்திற்கு நடிக்கப்போய் வருகிறானாம். கதாநாயகனாகத் தோன்றி ஆர்ப்பாட்டம் செய்த காலம் போய் விட்டது. இப்போது திரை தூக்கக் கூப்பிட்டாலும் போகிறானாம். பெயரைக்கூட மாற்றி வைத்துக் கொண்டிருப்பதாகக் கேள்வி. அத்தகைய கொடூரமான காரியம் செய்தவனுக்குத் தன் பெயரைச் சொல்லவே வெட்கமாகத்தானே இருக்கும்?'' என்றார் கந்தப்ப பிள்ளை.

கல்கத்தாவில் தமிழர்கள் சேர்ந்து நடத்தும் விழாவுக்காக கந்தப்ப பிள்ளை அன்றிரவு கல்கத்தா மெயிலில் போகிறார் என்று தெரிந்து கொண்டு அவரிடம் விடை பெற்றுக் கொண்டேன்.

**நா**லு நாளைக்கெல்லாம் திரும்பவும் கந்தப்ப பிள்ளையைப் பார்க்க நேரிடுமென்று நான் எதிர்பார்க்கவில்லை. திடுதிப்பென்று அவர் என் வீடு தேடி வந்து சேர்ந்தார்.

"இது என்ன? கல்கத்தாவில் இருப்பீர்கள் என்றல்லவா நினைத்தேன்?" என்று கேட்டேன்.

"வழியில் விஜயவாடா அமளியில் சிக்கிக் கொண்டேன். ரெயில் மேலே போகவில்லை. திரும்பி வந்துவிட்டேன்" என்றார்.

"அடிதடி காயம் ஏதாவது உண்டோ?"

"எனக்கு ஒன்றுமில்லை. அந்தத் தடிப்பயல் நமச்சிவாயத்துக்கு நல்ல அடி. முன்னொரு நாள் அவன் நீலமணிக்குச் செய்த கொடுமைக்கு விஜயவாடா ஆந்திரர்கள் பழி வாங்கிவிட்டார்கள். செம்மையாக வெளுத்து விட்டார்கள்!'' என்று எக்களிப்புடன் சொல்லிப் பிறகு விவரங்களையும் கூறினார்.

கந்தப்ப பிள்ளையின்



# அமரர் கல்கி



நாதஸ்வரக் கோஷ்டி பிரயாணம் செய்த அதே ரயிலில், கல்கத்தாவில் நடந்த அதே விழாவுக்காகத் தமிழ்நாட்டிலிருந்து ஒரு நாடகக் கோஷ்டியும் சென்றார்களாம்.

பொட்டி ஸ்ரீராமுலுவின் மரணத்தையடுத்து ஆந்திர நாட்டில் ரெயில் நிறுத்தும் படலமும் கலவரப்படலமும் நடந்தனவல்லவா? இவர்கள் சென்ற ரெயில் விஜயவாடா சேர்ந்தபோது, அங்கே ரெயில்வே நிலையத்தில் அமளிதுமளி சிகரத்தை அடைந்திருந்ததாம். ரெயிலில் ஒவ்வொரு பெட்டிக்குள்ளும் ஆந்திர சகோதரர்கள் ஏறி, "ஆந்திர ராஜ்யமுகாவல!" என்று கத்தினார்கள். யாராவது தமிழர்கள் வண்டியிலிருப்பதைப் பார்த்தால் "அரவவாடு சாவல" என்று சேர்த்துக் கொண்டார்கள்.

நமச்சிவாயம் முன்னமே முரடன் என்று தெரிந்த விஷயம். அவனுடைய முரட்டுக் குணம் இருபத்தைந்து ஆண்டுகளுக்குப் பிறகும் மாறவில்லை. அவனுடைய வண்டியில் ஏறிய ஆந்திரர்கள், "ஆந்திர ராஜ்யமு காவல!" என்று கத்திய போது, "என்னிடம் ஆந்திர ராஜ்யமு லேது, சோதரலாரா, லேதவே லேது! இல்லவே இல்லை! வேண்டுமானால் என் பெட்டியை நீயே சோதித்துப் பார்த்துக் கவல!" என்று நமச்சிவாயம் தெலுங்கும் தமிழும் கலந்து கேலியாகச் சொன்னானாம். அவன் தமிழன், கேலி செய்கிறான் என்று அறிந்து ஆந்திரர்கள், "அரவவாடு சாவல!" என்று கத்தினார்கள். உடனே நமச்சிவாயத்துக்குக் கோபம் வந்தது. "உனக்கு ஆநதிர ராஜ்யமு காவல என்றால், அதற்கு அரவவாடு எதற்காகச் சாக வேண்டும்? நீ சாவல! உங்கப்பன் சாவல! உங்க பாட்டன் சாவல!" என்று இரைந்தானாம். உடனே அவர்கள் வண்டியில் புகுந்து அவனை வெளியில் பிளாட்பாரத்தில் இழுத்துப் போட்டு அடிஅடி என்று அடித்துவிட்டார்களாம். முகம், உடம்பு எல்லாம் இரத்த விளாறாகி விட்டதாம். நாடகக் கோஷ்டியைச் சேர்ந்த மற்றவர்கள் விஜயவாடாவிலிருந்து மறுநாள் புறப்பட்ட வேறு ரெயிலில் ஏறிப் போய்விட்டார்கள். தவுல் கந்தப்ப பிள்ளையோடு போன நாதஸ்வர வித்துவான் மிரண்டு போய் ஊருக்குத் திரும்பிவிட்டார். கந்தப்ப பிள்ளையும், படுகாயம் பட்டுக் கிடந்த நமச்சிவாயத்தை எடுத்துப்போட்டுக் கொண்டு சென்னைக்கு வந்து சேர்ந்தார்.

சில பேருக்கு உயிர் ரொம்பக் கெட்டி ஐயா! நமச்சிவாயம் டி.பி. வியாதியில் சாகாமல் பிழைத்து விட்டான். ஆஸ்பத்திரியிலேதான் இருக்கிறான். அவனுடைய குணம் மட்டும் இன்னும் மாறியதாகத் தெரியவில்லை. கேளுங்கள், இந்த வேடிக்கையை! நேற்றிரவு ரேடியோவில் நீலமணியின் கச்சேரி கேட்டீர்களா?" என்றார் கந்தப்ப பிள்ளை.

"ஆமாம், கேட்டேன்! மிக்க நன்றாயிருந்தது! உயர்ந்த சங்கீதம்!" என்றேன்.

"கேட்டதற்கு ஏதேனும் அடையாளம் சொல்லுங்கள், பார்க்கலாம்!" என்றார் கந்தப்ப பிள்ளை.

"கடைசியில் ராகமாலிகையாக அந்தப் பழைய பாடலை பாடினாள். மத்தியமாவதியில் முடித்தாள். 'நமச்சிவாயம்' என்ற பெயரைச் சொல்ல எப்படித்தான் அவளுக்கு மனம் வந்ததோ என்று நான்



ஆச்சரியப்பட்டேன்'' என்றேன்.

"சில பேருடைய தலையெழுத்து அது! இந்தப் போக்கிரி அதைக் கேட்டு என்ன சொன்னான் தெரியுமா? ஆமாம்; ஆஸ்பத்திரியில் ரேடியோ இருக்கிறது. நீலமணியின் கச்சேரியின் போது திறந்து வைத்திருந்தார்கள். ராகமாலிகை முடிந்ததும் நமச்சிவாயம் என்னிடம் 'மாமா! அவளை மன்னித்துவிட்டேன் என்று சொல்லுங்கள்!' என்றான். அது போதாது என்று 'மாமா! எப்படியாவது அவளை நான் ஒரு தடவை பார்க்க வேண்டும், மாமா! நேரிலேயே அவளை நான் மன்னித்துவிட்டதாகச் சொல்ல வேண்டும்' என்றான். எப்படியிருக்கிறது கதை? இவன் அவளை மன்னிப்பதாம்! எப்படிப்பட்ட கிராதக உள்ளம் படைத்தவனாயிருக்க வேண்டும்? உலகில் எந்தக் கெட்ட குணத்துக்கும் மன்னிப்பு உண்டு, ஐயா! அகங்காரம் என்ற பேய்க் குணத்துக்கு மட்டும் மன்னிப்பே கிடையாது!'' என்றார் கந்தப்ப பிள்ளை.

"உண்மைதான்; நீங்கள் இப்போது என்ன செய்யப் போகிறீர்கள்?'' என்று கேட்டேன்.

"நான் எதற்காகக் குறுக்கே நிற்பது என்று யோசிக்கிறேன். நீலமணியிடம் போய்ச் சொல்லி விடுகிறேன்! அப்புறம் அவள் இஷ்டம்! இன்னும் அவள் சிறு குழந்தையா? யோசித்து விருப்பம்போல் முடிவு செய்யட்டும்! மேலும், இந்த துஷ்டன் பிழைப்பதே துர்லபம் என்கிறீர்கள். சாகப் போகிறவனிடம் நமக்கு என்னத்திற்காக வன்மம்?'' என்றார் கந்தப்ப



பிள்ளை.

"அதுதான் சரி. உங்கள் முடிவை மெச்சுகிறேன். நீலமணியிடம் பேசும் போது, அன்றைக்கு என்ன நடந்தது என்பதை மறுபடியும் விளக்கமாகக் கேட்டுவிடுங்கள்!" என்றேன்.

"என்றைக்கு நடந்ததைக் குறிப்பிடு கிறீர்கள்?"

"தீபாவளிக்கு முதல் நாள், கும்ப கோணத்தில் உள்ள உங்கள் வீட்டில் வெடி வெடித்த அன்று, நீங்கள் நீல மணியை வண்டியில் தூக்கிப் போட்டுக் கொண்டு டாக்டரிடம் ஓடிய அன்று தான்."

சில தினங்களுக்கு முன்னால் ஸ்ரீ கந்தப்ப பிள்ளையைக் கடைசியாகச் சந்தித்தேன். அவர் சிறிது முக மலர்ச்சி யுடனே காணப்பட்டார்.

"ஐயா சொல்லியனுப்பியது மிகவும் நல்லதாய் போயிற்று!" என்று சந்தோஷ மாகக் கூறினார்.

"எதைப் பற்றிச் சொல்லுகிறீர்கள்?" என்று கேட்டேன்.

"நீலமணியிடம் நன்றாய் விசாரிக்க வேண்டுமென்று சொன்னீர்களே, அதைப் பற்றித்தான்! விசாரித்துத் தெரிந்து கொண்டது நான் முன்னம் எண்ணியதற்குக் கொஞ்சம் மாறாக இருந்தது. கொஞ்சம் என்ன? ரொம்பவும் மாறுதலாக இருந்தது. அன்றைக்கு நமச்சிவாயம் நீலமணியை விட்டு விட்டு எங்கேயாவது கண்காணா இடத்திற்குப் போய் விடுகிறேன் என்று வற்புறுத்திச் சொன்னானாம். சொன்னதோடல்லாமல், வீட்டு வேலைக்காரப் பையனை வண்டி கொண்டுவரச் சொல்லி அதில் பெட்டி-படுக்கை முதலிய சாமான்களையும் ஏற்றி அனுப்பி விட்டானாம். அவனுடைய கைப்பெட்டியை மட்டும் நீலமணி பிடுங்கி வைத்துக்கொண்டு கொடுக்க மாட்டேன் என்றும், போகக்கூடாது என்றும் பிடிவாதம் பிடித்தாளாம். அவன் மீறிப் போவதாயிருந்தால், அவன் கண் முன்னாலேயே உயிரைவிட்டு விடுவதாகக் கூறினாளாம். அந்த முட்டாள் எதற்காக அக்கினித் திராவகம் வாங்கி வைத்திருந்தானோ கடவுளுக்குத் தான் தெரியும். தன் உயிரைத் தான் வாங்கிக் கொள்வதற்கோ, அல்லது நீல மணியைச் சும்மாவாவது பயமுறுத்து வதற்கோ தெரியாது. அதை நீலமணி கையில் எடுத்துக்கொண்டு நமச்சிவாயம் ஓர் அடி எடுத்து வைத்தாலும் அக்கினி திராவகத்தைச் சாப்பிட்டு உயிரை விட்டு விடுவேன் என்று கூறினாளாம். நமச்சி வாயம் அதை அவள் கையிலிருந்து வாங்குவதற்காக என்னவெல்லாமோ சாமர்த்தியமெல்லாம் செய்து பார்த்தான். விளையாட்டுத் துப்பாக்கியை எடுத்து அவளைச் சுட்டு விடுவதாகப் பயமுறுத்தி னான். 'நல்லதாய்ப் போயிற்று; உங்கள் கையாலேயே கொன்று விடுங்கள்!' என்றாள் அவள். 'உன்னைக் கொன்று என்ன பயன்? உன்னைக் கல்யாணம் செய்துகொண்ட என்னைச் சுட்டுக் கொள்கிறேன்' என்று சொல்லித் தன் பேரிலேயே துப்பாக்கியைத் திருப்பிச் சுட்டுக் கொண்டான். அந்தப் பேதைப் பெண் உண்மை என்று நம்பி அக்கினித் திராவகப் புட்டியை வாயண்டை கொண்டு போய் விட்டாள். நமச்சிவாயம் சட்டென்று அவள் கையிலிருந்த திரா வகப் புட்டியைத் தட்டிவிட்டான். புட்டி தூர விழுந்தது என்றாலும் அதிலிருந்த சில துளிகள் அவள் முகத்தில் சிந்தி விட்டன. அவள் நினைவிழந்து விட் டாள். பிறகு நடந்தது ஒன்றும் அவளுக்

குத் தெரியாது. இவையுங்கூட வெகு நாளைக்குப் பிறகுதான் ஒவ்வொன்றாக அவள் நினைவுக்கு வந்தன. நமச்சிவாயம் செத்து விட்டான் என்று சொன்னதை அவள் நம்பிவிட்டாள். பட்டாசுக் கட்டுப் பெட்டிகள் வெடித்து வீடு எரிந்ததில் அவன் இறந்ததாக நான் சொன்னது கொஞ்சம் அவளுக்கு ஆறுதலாய் இருந்தது. இல்லாவிடில் அவளே இவனைக் கொன்று விட்டதாக எண்ணி மறுபடியும் பிராணத்தியாகம் செய்ய முயன்றிருப்பாள். இப்போது நமச்சிவாயம் உயிரோடிருப்பதைப் பற்றி நான் சொன்னதும் உடனே புறப்பட்டு என்னோடு வந்துவிட்டாள். இருபத்தைந்து ஆண்டுகளுக்குப் பிறகு இருவரையும் சேர்த்துவிட்டு வந்தேன். 'பிரிந்தவர் கூடினால் பேசவும் வேண்டுமோ?' என்று கம்பர் சொன்ன பிரகாரம் அவர்கள் இருவரும் ஆனந்தக் கடலில் மூழ்கித் திளைத்திருப்பதைப் பார்த்துவிட்டு வந்தேன்!" என்று சொன்னார் கந்தப்பப் பிள்ளை.

''அப்படியானால் நமச்சிவாயம் இந்தக் கண்டத்துக்கும் பிழைத்துக் கொள்வான் என்று சொல்லுங்கள்!'' என்றேன்.

"சிலருடைய உயிர்தான் ரொம்பக் கெட்டி என்று சொன்னேனே, ஐயா! நமச்சிவாயமும் நீலமணியும் இன்னும் பல்லாண்டு ஆனந்த வாழ்க்கை நடத்தப் போகிறார்கள்.''

''ததாஸ்து! ரொம்ப ரொம்பச் சந்தோஷம்! கந்தப்ப பிள்ளை! இன்னும் ஒரு விஷயம் தாங்கள் சொல்லாமல் பாக்கி வைத்திருக்கிறீர்கள். அந்த வெடிகுண்டு வழக்கைப் பற்றிச் சொல்லுங்களேன்'' அதன் உண்மை என்ன?''

''அப்படி இப்படி என்று அடிமடியில் கையைப் போடப் பார்க்கிறீர்களே?'' என்றார் கந்தப்ப பிள்ளை.

"சொல்லலாம் என்றால், சொல்லுங்கள். இல்லாவிட்டால் ஒன்றும் சொல்ல வேண்டாம்!'' என்றேன்.

"இனிமேல் சொல்வதற்கு என்ன? தாராளமாகச் சொல்லலாம். நான் வெடிகுண்டு தயாரிப்பதில் ஈடுபட்டது உண்மைதான். வெள்ளைக்காரன்மேல் போடுவதற்காகவும் அல்ல; பிரிட்டிஷ் கவர்ன்மெண்டைத் துரத்துவதற்காகவும் அல்ல. அரசியலில் நான் காந்தி மகானுடைய கட்சியைச் சேர்ந்தவன். என் மகள் மீது அக்கினித் திராவகத்தை ஊற்றிய பஞ்சமா பாதகன் மேல் வெடிகுண்டைப் போட்டு அவனைக் கொன்று விடுவதென்று முடிவு கட்டிக் கொண்டேன். இதற்காகவே வேறு அரசியல் நோக்கத்துடன் வெடிகுண்டு தயாரிக்க முன்வந்த பிள்ளைகளுக்கு இடவசதி முதலியவை தந்து உதவினேன். தெய்வாதீனத்தைப் பாருங்கள்! தயாரான வெடிகுண்டுகள் இரண்டும் தாமே வெடித்துக்கொண்டு இரகசியத்தை வெளிப்படுத்திவிட்டன. என்னையும் பெரும்பாவம் செய்யாமல் காப்பாற்றின. நான் உத்தேசித்திருந்தபடி செய்திருந்து, பிறகு நீலமணி உண்மையை அறிந்து கொண்டிருந்தால் என் மனம் என்ன பாடுபட்டிருக்கும்? கடவுள் தடுத்தாட்கொண்டார்! முருகனின் கருணையே கருணை!'' என்று கூறிய கந்தப்ப பிள்ளை, கண்களைப் பாதி மூடிய வண்ணம் மேல் நோக்கிப் பார்த்துக் கொண்டு பின்வரும் பாடலைப் பாடினார் :

*வருவாய் மயில்மீ தினிலே!*
*வடிவே லுடனே வருவாய்!*
*தருவாய் நலமும் தகவும் புகழும்*
*தவமும் திறமும் தனமும் கனமும்*
*முருகா! முருகா! முருகா!*

(நிறைந்தது)



# தொகுதி விசிட் – 2

சேப்பாக்கம் - கடந்த பத்து ஆண்டுகளாக கலைஞரின் மடியில் தவழும் செல்லத் தொகுதி. தமிழ்நாட்டின் மிகக் குறைந்த அளவிலான வாக்காளர்களைக் கொண்ட இந்தக் குட்டித் தொகுதியில் தேர்தல் குறித்த மக்களின் பல்ஸ் பிடித்துப் பார்க்க தீர் மானித்து நாம் சென்ற நேரம், தி.மு.க.வும், அ.தி.மு.கவும் கவுன்ட்டர் மீட்டிங் போட்டு கலக்கிக்கொண்டு இருந்தனர். அப்பொழுதே தெரிந்துவிட்டது... தேர்தல் தீபாவளிக்கு சேப்பாக்கம் தயாராகிவிட்டது என்பது!

## ஆட்டோகிராஃப்

கடந்த 2001-ம் ஆண்டு தேர்தலில் கலைஞர் 4834 வாக்குகள் வித்தியாசத்தில் வெற்றி பெற்றிருந்தார்.

மொத்த வாக்காளர்கள் : 1,28,404

பதிவான வாக்குகள் : 57,477

கலைஞர் பெற்ற வாக்குகள்: 29,836.

அவரை எதிர்த்துப் போட்டியிட்ட காங்கிரஸ் வேட்பாளர் தாமோதரன் 25,002 வாக்குகளைப் பெற்றிருந்தார். மேலும் எட்டு வேட்பாளர்கள் களத்தில் இருந்தனர்.

## ஏரியா எப்படி?

இந்தத் தொகுதிக்குள் மாநகராட்சி வார்டுகள் 79 முதல் 86 வரை அடங்குகின்றன. தற்போதைய வாக்காளர்களின் எண்ணிக்கை கிட்டத்தட்ட ஒன்றரை லட்சத்தைத் தொடுகிறது. மொத்தமுள்ள எட்டு வார்டுகளில் ஐந்து வார்டுகள் தி.மு.க. வசமும், மீதமுள்ளவை அ.தி.மு.க வசமும் உள்ளன. இஸ்லாமியர்கள் கணிசமான அளவில் உள்ள இத்தொகுதியில் நாயுடு, முதலியார், தாழ்த்தப்பட்டவர்கள் என்று பல தரப்பினரும் வசிக்கின்றனர்.

1977-ல் தொகுதி உருவாக்கப்பட்டதில் இருந்து இத்தொகுதி தி.மு.க.வின் இரும்புக் கோட்டையாகவே இருக்கிறது. அதே சமயம் அ.தி.மு.கவும் தனக்குரிய செல்வாக்கினை 1977, 1980, 1984 தேர்தல்களில் ஓரளவுக்கு வெளிப்படுத்தியுள்ளது. காங்கிரசுக்கும் கொஞ்சம் செல்வாக்கு உண்டு.

## என்ன செய்தார் கலைஞர்?

சட்டமன்ற உறுப்பினர் என்கிற முறையில் கலைஞர் இந்தத் தொகுதிக்கு செய்துள்ள பணிகளை ஆண்டு வாரியாகவும், வட்ட வாரியாகவும் பட்டியல் போட்டு வைத்திருக்கிறார் தி.மு.க.வின் பகுதிச் செயலாளர் சுரேஷ்குமார்.

'நாவலர் நெடுஞ்செழியன் நகரில் ரூபாய் 15 லட்சம் செலவில் மழைநீர்க் கால்வாய் அமைத்தது, சத்தியவாணிமுத்து நகரில் சுமார் 25 லட்சம் செலவில் மாநகராட்சி நடுநிலைப்பள்ளிக்கு வகுப்பறைகள் கட்டிக் கொடுத்தது, வீரபத்திரன் தெருவில் 15 லட்சம் செலவில் சமுதாயக் கூடம் அமைத்தது, ஜானிபாஷா தெருவில் 10 லட்சம் செலவில் உடற்பயிற்சிக்கூடம் அமைத்தது, சிந்தாதிரிப்பேட்டை, எல்லீஸ் புரம், கொய்யாத்தோப்பு உள்ளிட்ட பகுதிகளில் 1153 குடியிருப்புகளுக்காக ரூபாய் 20 லட்சம் ஒதுக்கீடு செய்தது' ஆகியவை கலைஞர் செய்து முடித்த திட்டங்களுள் குறிப்பிடத்தக்கவை என்கிறார்.

## ஒண்ணுமே செய்யல!

"இந்தத் தொகுதிக்கு வோட்டு கேட்டு வர்றப்போவே அவரு ஒரு வாக்குறுதியையும் பெருசா தந்துடல... அதனாலதான் ஜெயிச்ச பின்னாலயும் ஒண்ணும் செய்யாம விட்டுட்டாருன்னு நினைக்கறேன். ஒரு முன்னாள் முதல்வர்ங்கற முறையில் சிந்தாதிரிப்பேட்டை தண்ணிக் கஷ்டத்தை சரி






பண்றதுக்கு ஒரு துரும்பைக் கூட கருணாநிதி நகர்த்தல... குறை கேட்கறதுக்கு தொகுதிப் பக்கமும் வர்ற தில்ல... சட்டசபைக்கும் போறதில்ல... கருணாநிதி யோட தொகுதின்னு அடையாளம் சொல்லிக்கற மாதிரி பெருசா ஒரு திட்டத்தைக்கூடக் கொண்டு வரல..." என்று 'இல்லை' பட்டியல் போடுகிறார் அதிமுக பகுதிச் செயலாளர் பாண்டியன்.


• பாலகங்கா


• மு.க.தமிழரசு

### மல்லுக்கட்ட ரெடி!

இரண்டு கழகங்களும் நேருக்கு நேர் மோத உள்ளது கிட்டத்தட்ட உறுதியாகிவிட்ட நிலையில், கலைஞர் தொகுதியில் வென்று, வெற்றிக் கனியை தங்கள் தலைவியிடம் தருவதுதான் அவருக்கு நாம் செய்யும் கடமை என்று ரத்தத்தின் ரத்தங்கள் கங்கணம் கட்டிக் கொண்டு களத்தில் இறங்க, ஊரைக் காவல் காத்துக் கொண்டிருக்கும்போது 'தலையாரி' வீடு களவு போய்விடக் கூடாது என்பதில் எச்சரிக்கையுடன் இருக்கும் உடன்பிறப்புகள், பதிலுக்கு முஷ்டியை உயர்த்த, களை கட்டி வருகிறது 'சேப்பாக்கம்' தேர்தல் 'பிட்ச்'.

### யாருக்கு வோட்டு?

**சுரேஷ்குமார்:**

எங்க தொகுதி மக்கள் ரொம்பவும் புத்திசாலிகள்... படித்தவர்கள்... கலைஞர் சட்டசபைக்கு ஏன் போறதில்லைன்னு அவங்களுக்கு தெளிவாத் தெரியும்... சட்டசபைக்குப் போகலன்றது ஒரு பிரச்னையே இல்ல. அவரு சட்டசபைக்குப் போனாலும், போகலைன்னாலும் தொகுதிக்கு ஆக வேண்டிய பணிகள் தங்கு தடையில்லாமல் நடந்துட்டுதான் இருக்கு... தலைவர் அதிக வாக்குகள் வித்தியாசத்துல ஜெயிக்கப் போறதோட, எதிர்த்து நிக்கற எல்லா வேட்பாளர்களையும் டெபாசிட் இழக்க வைப்பார். இது உறுதி!

**விஜயலட்சுமி:**

நாங்க முன்னால எம்.ஜி.ஆருக்குத்தான் வோட்டுப் போடுவோம். இப்போ அம்மாவுக்குப் போடுறோம்... ஏன்னா என்னைய மாதிரி அம்மாவும் ஒரு பொம்பள... அது மட்டுமில்லாம ரொம்ப தைரியமா எல்லாத்தையும் செய்யறாங்க... பொம்பளைங்களுக்காக மகளிர் சுய உதவிக் குழுக்களை ஏற்படுத்தியிருக்காங்க... அதனால அம்மா சொல்றவருக்குத்தான் நான் வோட்டுப் போடுவேன்...."

# செல்லுபடியாகுமா சேப்பாக்கம்?



• சுரேஷ்குமார்



• பாண்டியன்



• அக்தர் உசேன்

**ஆனந்த்:**

தொகுதிக்கும் வராம, சட்டசபைக்கும் போகாம, ரோட்டுல மறியல்னா மட்டும் சேர் போட்டு உட்கார்ற கருணாநிதிக்கு எதுக்கு வோட்டுப் போடணும்? எனக்கென்னமோ தோத்துப் போறதுக்காகவே இந்தத் தொகுதியை மூணாவது தடவையா தேர்ந்தெடுக்கப் போறார்னு நினைக்கறேன்.

**அக்தர் உசேன்:**

இந்தத் தொகுதியில் வெற்றியை நிர்ணயிக்கற வோட்டு இஸ்லாமியர்களோடது தான். இந்தத் தடவை அது முழுக்க முழுக்க கலைஞருக்குத்தான். ஏன்னா இந்தத் தடவை பி.ஜே.பி., தி.மு.க. கூட இல்லை... அதுமட்டுமில்லாம சோனியா காந்தி கலைஞர்கூட கூட்டணியில இருக்காங்க... ஆக, தி.மு.க., காங்கிரஸ் கூட்டணி இந்த சேப்பாக்கத்துல வெற்றிக் கொடியைப் பறக்க விடறதை யாராலயும் தடுக்க முடியாது.

**பாண்டியன்:**

அஞ்சு வருஷம் முதலமைச்சரா இருந்துட்டு தேர்தல்ல நின்னதுக்கே வோட்டு வித்தியாசம் நாலாயிரத்து சில்லறை... இப்போ எதிர்கட்சில வேற இருந்திருக்காரு. அவருக்கு அதிகமாக வோட்டு விழுந்த 79வது வட்டத்தைத் தவிர, மத்த எதையுமே அவரு கண்டுக்கல... அதனால மிகப்பெரிய வாக்குகள் வித்தியாசத்துல அ.தி.மு.க.தான் ஜெயிக்கும்.

**சூரியா:**

இத்தனை வருஷம் சூரியனுக்குத்தான் வோட்டுப் போட்டேன். இந்த வருஷம் ரெட்டை இலைக்குப் போடணும்னு எங்க வீட்ல சொல்லியிருக்காங்க...

• ஆனந்த்



• விஜயலட்சுமி



• சூரியா



**அருணாச்சலம்:**

நிச்சயமா இந்தத் தேர்தல்ல 75% வோட்டுகள் பதிவாகும். எங்க தலைவர் கலைஞர் கிட்டத்தட்ட முப்பதாயிரம் வாக்குகள் வித்தியாசத்துல அமோகமா ஜெயிச்சு, சி.எம். சீட்ல உட்காரப் போறாரு பாருங்க. அப்போ, தெரியும். நான் ஒரு தீர்க்கதரிசின்றது.

## ஜெயிக்கற குதிரை!

தி.மு.க. என்கிற சிங்கத்தை அதன் குகைக்குள் சந்திப்பது அ.தி.மு.கவுக்கு மிகக் கடுமையான சவால்தான். மீர்சாகிப்பேட்டை, ஐஸ் ஹவுஸ், பள்ளிவாசல், காய்கறி மார்க்கெட் என்று பல பகுதிகளில் காதைத் தீட்டியபடி மக்களிடம் பேச்சுக் கொடுத்துப் பார்த்ததில் தொகுதி முழுக்க தி.மு.க. வாசம் அடிக்கிறதோ இல்லையோ, கலைஞர் வாசம் அடிக்கிறது. இதுவே தி.மு.கவின் வெற்றியை அறுபது சதவிகிதம் உறுதி செய்து விட்டது. இதைத் தடுத்து நிறுத்த அ.தி.மு.க கடுமையாகப் பிரயத்தனப்பட வேண்டியிருக்கும்.

## டெயில்பீஸ்

ஒரு வேளை தனது உடல்நிலையைக் காரணம் காட்டி கலைஞர் தேர்தலில் போட்டியிடா விட்டாலோ அல்லது வேறொரு தொகுதிக்குச் சென்று விட்டாலோ இந்தத் தொகுதியில் மு.க.தமிழரசு போட்டியிடுவார் என்கிறார்கள் சில உடன்பிறப்புகள். அதே போல அ.தி.மு.க. தரப்பில் குடிசை மாற்று வாரியத் தலைவரும், மத்திய சென்னை மாவட்டச் செயலாளருமான பாலகங்கா நிற்பதும் கிட்டத்தட்ட உறுதியாகிவிட்டது.

**- இரா. முத்துக்குமார்**

படங்கள்: **ராஜன்**

# மாதவன்

சரிதா மாதவனால் அன்று தன் கண்களையே நம்ப முடியவில்லை. விட்டால், "அடப்பாவி மனுஷா, வீட்ல ஒரு நாளாச்சும் என்னை உட்கார வச்சு இப்படியெல்லாம் சமைச்சுப் போட்டிருப்பியா" என மாதவனின் குமட்டிலேயே ஒரு குத்து விட்டிருப்பார்.

சென்னை டைடல் பார்க்குக்கு அருகே உள்ள அஸெண்டாஸ் பார்க்கில் சமீபத்தில் தொடங்கப்பட்ட 'ப்ளானட் எம்' ரெஸ்டாரண்ட்டின் மிகப் பிரமாண்டமான 24 மணி நேர ஃபுட் கோர்ட். இதன் தொடக்க விழாவுக்கு வி.ஐ.பி. விருந்தினராக வந்த மாதவன் செய்த கலாட்டாக்களைப் பார்த்துத்தான் சரிதா மூக்கின் மேல் விரல் வைத்து அதிசயித்துக் கொண்டிருந்தார்.

விழாவின் ஆரம்பத்தில் மேடி, செஃப் மாதிரி வேடமணிந்து வந்தபோதுகூட யாரும் அதை சீரியஸாக எடுத்துக் கொள்ளவில்லை. "எங்கப்பா தோசை

சிந்தூரி கர்நாடக சங்கீதத்தை நாரதகான சபாவிலோ அல்லது மியூசிக் அகாடமியிலோ பாடியிருந்தால் யாருக்கும் எந்தவொரு சிக்கலும் ஏற்பட்டிருக்காது. அதை விட்டுவிட்டு 'கிருஷ்ணா பேகனே...' என்று துபாய் ஷேக்குகளுக்கு மத்தியில் பாடினால்...

சென்னையில் பிறந்து பள்ளிப் படிப்பு முடியும் முன்பே சிந்தூரிக்கு துபாய் பறக்க வேண்டியதாகிவிட்டது. கையோடு அது வரைக்கும் கற்று வந்த கர்நாடக சங்கீதத்தையும் அரபு தேசத்துக்குக் கொண்டு செல்ல... அதன்பின் நடந்த கதையை அவரே சொல்கிறார் கேளுங்கள்...

"மூணு வயசுல கர்நாடக இசை கத்துக்க ஆரம்பிச்சு, எட்டு வயசுல மேடைக் கச்சேரி பண்ண ஆரம்பிச்சுட்டேன். குடும்பச் சூழல் காரணமா பதினோரு வயசுல துபாய் போனாலும் என் ஆர்வம் மட்டும் குறையல. ஒரு நல்ல குருவுக்காக கொளுத்துற துபாய் வெயில்ல தேடி அலைஞ்சோம். கடைசியா ஸ்ரீ டி.ஜே. பாலகிருஷ்ணா கிடைச்சார்.

துபாய்ல ஹிந்தி - உருது கஜல்ஸ் மற்றும் அரேபியப் பாடல்கள்தான். முதல் முறையா ஒரு யூத் ஃபெஸ்டிவல்ல நான் கலந்துக்கிட்டேன். அரங்கம் முழுக்க ஆயிரக்கணக்குல கூட்டம். போட்டியாளர்கள் எல்லாம்

# துபாய் டு சென்னை!

கஜல், அரேபியப் பாடல்கள்ல வெளுத்து வாங்கினாங்க. நான் நடுக்கத்தோட மேடையேறி, மெல்ல, 'கிருஷ்ணா பேகனே...'ன்னு ஸ்ருதியை ஆரம்பிச்சேன். ஆடியன்ஸுக்

படம் : புதூர் சரவணன்

# சுட்ட தோசை!





# இளம் கல்கி

மாவு... எங்கே" என்று கையில் தோசைக் கரண்டியோடு அடுப்பருகே நின்ற போதுதான் அனைவரது விழிகளும் விரிந்தன. ஒன்... டூ... த்ரீ... என்று தோசைக் கல்லில் அழகாக மாவு ஊற்ற, எல்லோர் பார்வையும் திரும்பியது மாதவன் மீது அல்ல, சரிதா மீது. "வாட் ஈஸ் திஸ் மேடம்" என்று விழிகளாலேயே கேள்வி எழுப்பினர். நல்லவேளை தோசை கருகவில்லை. கல்லிலும் ஒட்டிக்கொள்ளவில்லை. மிருதுவாக, முறுகலாக, அழகாக மேடி போல் பொன்னிறத்தில் மின்னியது. அதோடு மனிதர் சும்மா இருந்தாரா? அடுத்த சில நிமிடங்களில் கமகமக்கும் காபியையும் போட்டு முடிக்க, அந்த இடத்தில் மாதவனின் நளபாகத் திறமையைக் கண்டு வியக்காதவர் இல்லை.

தொடர்ந்து மாதவன் போட்ட காபி, தோசை இரண்டும் ஏலத்தில் விடப்பட்டன! தலா இருபத்தைந்தாயிரம் என ஒரே நிமிடத்தில் ஐம்பதாயிரம் வசூலானது.

'வாட்ட்ட்...' என்று அலறும் முன் ஒரு விஷயம்... ஏலத்தில் வசூலிக்கப்பட்ட தொகை அனைத்தும் பான்யன் சேவை அமைப்புக்கு வழங்கப்பட்டு விடுமாம்.

- சநகன்

படம் : ஓம்

குப் பெரிய ஆச்சர்யம். 'என்னடா இந்தப் பொண்ணு இங்க வந்து இதைப்போய் பாடுதே'ன்னு. பாட்டு புரியாட்டியும் மௌனமா ரசிக்க ஆரம்பிச்சாங்க. இட்டத்தட்ட 'சிந்து பைரவி' படத்தோட சிச்சு வேஷன்தான்னு வச்சுக்குங்களேன்.

கடைசியிலே முதல் பரிசு கிடைச்சது எனக்குத்தான். அப்புறம் நிறைய போட்டிகள்... பரிசுகள்... தொடர்ந்து 'சிசில்லா'ன்னு ஒரு ஆல்டம்கூட அங்க பண்ணினேன்" என்று சந்தோஷம் பொங்குகிற சிந்தூரி, சென்னை மியூசிக் அகாடமியின் தம்பிராஜன் நினைவு விருதினைக் கடந்த ஆண்டு பெற்றுள்ளார்.

"இப்போ படிப்புக்காக சென்னை வந்தாலும் இங்கேயும் முழு மூச்சா கச்சேரிகள் பண்ணிட்டுதான் இருக்கேன். துபாய் குழல்ல கஜல், அரேபியப் பாடல்களும் கத்துக்கிட்டு இப்போ எல்லாவிதமான பாடல்களும் பாடத் தயாராயிட்டேன். என் அடுத்த இலக்கு சினிமாதான்". என்றவரிடம், "ஆமா... துபாய்ல நீங்க எங்க இருந்தீங்க... துபாய் மெயின் ரோடா... இல்ல துபாய் குறுக்குச் சந்தா?" என்றால், "ஆஹா கிளம்பிட்டாங்கய்யா" என்று கலகலக்கிறார்.

- செந்தில்

"எனக்கு ப்ரெய்ன் ட்யூமர் இருக்கிறது என்று சில மாதங்களுக்கு முன்னால் சொன்னார்கள். ரொம்பப் பெரிய கட்டி எல்லாம் கிடையாதாம். 4 செ.மீட்டர்தான் இருக்குமாம். ஆனால் என்னைக் கொல்வதற்கு இதுவே போதும்.

'அகோஸ்டிக் நியூரோமோ' - என் மண்டையில் ஏற்பட்டிருப்பது இதுதானாம். உட்புற காதுக்கும் மூளைக்கும் இடையே இந்தக் கட்டி பூத்திருக்கிறதாம். இறக்கும் வரை என்னைப் பிடித்து அழுத்திக் கொண்டிருக்குமாம்.

நான் அழகாக இருப்பதாகத்தான் இத்தனை காலமும் நினைத்துக் கொண்டிருந்தேன். நான் நினைத்தது சரியாகக்கூட இருக்கலாம். ஆனால் இந்தக் கட்டி எல்லாவற்றையும் மாற்றிவிட்டது. முகத்தசைகள் மாறிவிட்டன. ம்ஹூம்... சத்தியமாக இனி மாடலிங் செய்ய முடியாது. முடியவே முடியாது...

எனக்குச் சிரிப்பது மிகவும் பிடிக்கும். எதற்கெடுத்தாலும் சிரிப்பேன். ஆனால் இனி சிரிப்பது இயலாது என்றே தோன்றுகிறது... அப்படியே சிரித்தாலும்...

எனக்கு அறுவை சிகிச்சை செய்யப் போகிறார்கள். முதலில் மயக்க

**செல்போன்களில் எஸ்.எம்.எஸ். வழியாக ஜோக்குகள்தான் வரும் என்றில்லை. மயிலிறகாய் நெஞ்சை வருடும் 'டச்சிங் டச்சிங்' எஸ்.எம்.எஸ்.களும் உண்டு. அவற்றில் சில...**

• நட்பு எப்பொழுது பிரிகிறது? நண்பர்கள் இருவருமே அடுத்தவர் பிஸியாக இருப்பார் என முதலில் நினைத்து சில நாட்கள் தொடர்பு கொள்ளாமலேயே இருப்பார்கள். காலம் செல்லச் செல்ல அடுத்தவர் பேசட்டும் என விட்டுவிடுவர். நாளடைவில் 'நாம் ஏன் பேச வேண்டும். அவன் / அவள் முதலில் பேசக்கூடாதா' என்று எண்ணத் தோன்றும். இங்கேதான் நட்பில் விரிசல் உண்டாகிறது. அப்புறம் ஒருவரையொருவர் மறந்தே போவார்கள். என்றாவது ஒரு நாள் சந்திக்க நேர்கையில் ஆளாளுக்கு திட்டிக் கொள்வர்... இதுவா தூய நட்பு?

• ஒரு காகம் மரத்தின் மேல் அமர்ந்து, நாள் முழுவதும் பொழுதை போக்கிக் கொண்டிருந்ததாம். இதைப் பார்த்த ஒரு முயலுக்கு தானும் இதேபோல் காலம் கழிக்க ஆசைப்பட்டு சுகமாக புல்

# மயிலிறகு எஸ்.எம்.எஸ்.!



மருந்து. பிறகு எனது தலையைக் கிறிப் பிளந்து உள்ளிருக்கும் கட்டியை அகற்றப் போகிறார்கள். ஒரு வேளை கட்டி வெற்றி கரமாக அகற்றப்பட்டுவிட்டால்கூட எனது முகத்தை யாராலும் சீரமைத்துவிட முடியாது என்றே தோன்றுகிறது.

மழை வரும்போல் இருக்கிறது. நான் மருத்துவமனைக்குத்தான் சென்று கொண்டிருக்கிறேன். என்னென்ன மாற்றங்கள் நிகழப் போகின்றன? தெரியவில்லை.




# இளைய கல்கி



# புதிய வெளிச்சம்!

அறுவை சிகிச்சை முடிந்து விட்டது.

அட! நான் இன்னமும் இறக்க வில்லை. ஆம்... உயிரோடுதான் இருக்கிறேன். என்ன? எனது முகம் மாறிவிட்டதா? எனது வலது பக்க முகத்தை அசைக்க முடியாதா? நெற்றியிலுள்ள தழும்புகள் அப்படியே இருக்குமா? எனக்குக் கவலை யில்லை. ஏன் தெரியுமா? நான் இப்பொழுது உயிருடன் இருக்கிறேன்..."

(25 வயதான ஜான் கெல்லி தனக்குக் கிடைத்துள்ள புதிய வெளிச்சத்தைப் பற்றி தனது டைரியில் பதிவு செய்துள்ளார். அதிலிருந்துதான் இந்தப் பகுதி...)

**- மருதன்**

தரையில் தூங்கிக் கொண்டிருந்த தாம். அப்பொழுது அந்தப் பக்கமாய் வந்த ஒரு நரி, சுலபமாக முயலை கவ்விக் கொண்டு போனதாம்.

**நீதி** : வெறுமனே சும்மா உட்கார்ந்து பொழுதைக் கழிக்க ஆசைப்பட்டால், அதற்கு மேலிடத்தில் அமர நம்மைத் தகுதியாக்கிக் கொள்ள வேண்டும்.

• வாழ்க்கையில் யார் நம்மை விட்டு விலகுகிறார்களோ, அவர்கள் மீதுதான் அதிக அன்பு செலுத்துகிறோம். அதே போல் நம்மீது எவர் அளவுக்கதிகமான அன்பு வைத்திருக்கிறார்களோ, அவர்களைத்தான் முதலில் விலக்கி வைக்கிறோம்.

• உன் மனதில் வலி முள்ளாய் குத்துகிறது. அழுகிறாய். தெரியுமா, யாரால் உன் கண்ணீரைத் தடுத்து நிறுத்த முடியுமோ அவர்களே அக்கண்ணீருக்கு காரணமாயிருக்கிறார்கள் என்று!

**- கலை**

படம் : **ஸ்ரீஹரி**



**மேஷம்** : நினைத்தது கைகூடும். திருமண காரியம் கைகூடும். பொருளாதாரச் சிரமம் இருக்காது. கொடுக்கல் - வாங்கல் சிக்கல் தீரும். வராத நிலுவைகள் வந்து சேரும். வீடு / தொழில் மாற்றம் உறுதி. வாகனம் வாங்கலாம். குழந்தைகளால் மன நிம்மதி ஏற்படும். ஆரோக்கியம் நன்றாக இருக்கும். திடீர் பிரயாணம் ஏற்படும். உத்தியோகஸ்தர்களுக்கு நல்ல வேலை வாய்ப்புத் தேடி வரும். வியாபாரத்தில் அபிவிருத்தி ஏற்படும். நண்பர், உறவினர் மூலம் ஆதாயம் கிடைக்கும். ஆஞ்சநேயருக்கு துளசிமாலை சாற்றி வழிபட்டு வரவும்.

**ரிஷபம்** : எதிர்ப்பு, தொல்லை குறையும். உடல் ஆரோக்கியம் சீராகும். பொருளாதார கஷ்டம் படிப்படியாகக் குறையும். வேலையில் இருக்கும் நெருக்கடி நிலை சீராகும். கடன்பட வேண்டி இருக்கும். நெருங்கிய உறவினர், நண்பர்களுடன் மனக் கசப்பு ஏற்படலாம், பார்த்து நடந்து கொள்ளவும். வேலைப் பளு அதிகமாகும். அனாவசியமான செலவு பண்ணாமல் இருப்பது நல்லது. குடும்ப வாழ்வில் விட்டுக் கொடுத்து பொறுமையைக் கையாளவும். மனத்தில் தைரியமும் தன்னம்பிக்கையும் ஏற்படும். ராகு கேதுவை வழிபட்டு வரவும்.

**மிதுனம்** : இந்த வாரம் பதற்றம் மிகுந்ததாக இருக்கும். கோபம் தவிர்க்கவும். உடல்நிலையில் கவனம் தேவை. வீட்டில் சுபகாரியம் வரும். குழந்தைகளால் மன சந்தோஷம் ஏற்படும். சிலருக்கு அயல்நாடு செல்லும் வாய்ப்பு ஏற்படும். வேலையில் சிரமம் இருக்கும். அவசரப்பட்டு வேலையை விடக்கூடாது. கடன் தொல்லை இருக்கும். வியாபாரத்தில் முன்னேற்றம் ஏற்படும். ராகு/கேதுவை வழிபட்டு வரவும்.

**கடகம்** : தனம், குடும்பம் வாக்கு மேலோங்கும். வேலையில் ஊதிய உயர்வு,

29.1.2006 முதல் 4.2.2006 வரை



## தஞ்சை பரத்வாஜ்

# நடக்குமென்பார்; நடக்கும்!

# பரத்வாஜ் பதில்கள்

● கே.எஸ்.ராவ், பெங்களூர்

**எனது இரண்டாவது மகளின் திருமணம் எப்போது நடக்கும்?**

உங்கள் மகளுக்கு ராகுதசை நடைபெற்று வருகிறது. 2006-ல் திருமணம் நடக்கும். தனியார் நிறுவனத்தில் வேலை பார்க்கும் வரன் அமையும். பரிகாரம் வேண்டாம்.

● பெயர் வெளியிட விரும்பாத ஐதராபாத் வாசகி

**என் மகனுக்கு எப்பொழுது நிரந்தரப் பணி அமையும்? அவனுக்குத் திருமணம் எப்பொழுது நடக்கும்?**

உங்கள் மகனுக்கு 35 வயது வரை ராகு தசை நடக்கும். அதன்பிறகு நிரந்தரப் பணி அமையும். 2006-ல் திருமணம்

---

பணி மாற்றம் வரலாம். புதிய வேலை கிடைக்கும். குடும்பத்தில் சுபச் செலவு ஏற்படும். ஆரோக்கியம் பாதிக்காது. சிலருக்கு வீடு வாசல் மாற்றி அமைக்க நேரிடும். வீடு வாசல் கட்டத் தொடங்க நேரிடும். திருமணம் ஆகாதவர்களுக்குத் திருமணம் கைகூடும். திடீர் பணவரவு ஏற்படும். புதிய பட்டம், புகழ் தேடி வரும். வியாபாரத்தில் நல்ல வளர்ச்சி காணும். கொடுக்கல் - வாங்கல் சிக்கல் தீரும். சனீஸ்வரனுக்கு விளக்கு ஏற்றவும்.

**சிம்மம்** : நீண்டநாளைக்குப் பிறகு நல்ல கால துவக்கத்தின் அறிகுறி தெரிகிறது. முயற்சிக்கும் காரியத்தில் வெற்றி ஏற்பட்டு பண வரவைப் பெறுவீர்கள். உல்லாசப் பிரயாணம் ஏற்படும். உடல் ஆரோக்கியத்தில் கவனம் தேவை. கொடுக்கல் - வாங்கலில் சிக்கல் வரலாம். வண்டி வாகனத்தில் செல்லும்போது நிதானம் தேவை. சுபச் செலவு ரெடி. நண்பர் மூலம் ஆதாயம் ஏற்படும். நீண்ட தூரப் பிரயாணம் செல்ல நேரிடும். தொழிலில் நெருங்கிய கூட்டாளிகளுடன் மனக் கசப்பு வந்து விலகிச் செல்வார்கள். ராகு / கேது / சனி / குரு வழிபட்டு வரவும்.

**கன்னி** : மன உளைச்சல் மிகுந்த வாரம். எதிலும் பொறுமை நிதானத்துடன் செயல்பட்டால் சுபகாரியம் கைகூடும். வேலை அதிகம் இருக்கும். தன ப்ராப்து கிட்டும். இருக்கும் இடம், தொழில் ஸ்தானத்தில் அதிரடி மாற்றம் ஏற்படும். எதிரிகளால் தொல்லை இருக்காது. வாக்கு, நாணயம் காப்பாற்றப்படும். பணக் கஷ்டம் தீரும். திருமண காரியம் கை கூடும். நீண்ட நாள் பழகிய நண்பர் மூலம் சில நல்ல தகவல் கிடைக்கும். வியாபாரத்தில் நல்ல பலன் காணும். உடல் ஆரோக்கியம் பாதிக்காது. குழந்தைப் பேறு கிட்டும். குழந்தைகளால் சந்தோஷம் ஏற்படும். ராகு / கேதுவை வழிபட நன்மை கிட்டும்.

**துலாம்** : எதிலும் வெற்றி நிச்சயம். வழக்கு வெற்றி அளிக்கும். சிலருக்குத் தொழில் ரீதியில் ஆதாயம் கிட்டும். வீடு நிலபுலன்கள் வாங்க, விற்க ஏற்ற நேரம். பொருளாதார கஷ்டம் இருக்காது. முடியாத காரியம்கூட நல்ல விதத்தில் வெற்றியை அளிக்கும். குழந்தைப் பேறு ஏற்படும். சிலருக்கு வீடு வாசல் மாற்றி அமைக்க நேரும். வியாபாரத்தில் நல்ல லாபம் ஏற்படும். ஆரோக்கியம் பாதிக்காது. கொடுக்கல் - வாங்கல் சிக்கல் தீரும். எதிர்ப்பு தொல்லை விலகும். உத்தியோகஸ்தர்களுக்கு வேலையில் மாற்றம் ஏற்படும். நண்பர், உறவினர்களால் ஆதாயம் ஏற்படும். மனச் சலனம் தீரும். ஆஞ்சநேயர் காயத்ரி படித்து வரவும்.

**விருச்சிகம்** : புத்துணர்ச்சி பெறும் வாரம். தொட்டது எல்லாம் வெற்றிப் பாதையில் செல்லும். புதிய முயற்சி கைகூடும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். வீட்டில் சுபநிகழ்ச்சி நடக்கும். மனத்தில் தைரியமும், தன்னம்பிக்கையும் ஏற்படும்.

முடியும். நல்ல வேலையிலுள்ள பெண் அமையும்.



● **எம்.கோமளவல்லி, பெங்களூர்**

***எனது மகனின் திருமணம் எப்பொழுது நடக்கும்? எப்படி அமையும்?***

உங்கள் மகனுக்கு ராகுதசை குருபுத்தி நடக்கிறது. குலதர்மத்துக்கு மாறான திருமணம் நடக்க வாய்ப்பு இல்லை. 2006-ல் திருமணம் நடக்கும். கவலைப்பட வேண்டாம்.

● **சுமதி, பெங்களூர்**

***எனது மகனுக்கு கடந்த இரண்டு வருடங்களாக முயற்சித்தும் திருமணம் கைகூடவில்லை. எப்போது நடக்கும்?***

உங்கள் மகனுக்கு 2006-ல் திருமணம் முடியும். தோஷம் எதுவும் இல்லை. உறவில்லாத இடத்திலிருந்து பெண் அமைவாள்.

நண்பர், உறவினர் மூலம் ஆதாயம் கிடைக்கும். உடல் ஆரோக்கியம் பாதிக்காது. புதிய வீடு, வாகனம் வாங்க ஏற்ற காலம். நீண்ட தூரப் பிரயாணம் செல்ல நேரிடும். செலவுகள் சுபமானதாக இருக்கும். ராகு / கேதுவை வழிபட்டு வரவும்.

**தனுசு** : எதிர்பாராத தன ஆதாயம் கிட்டும். திருமண காரியம் கைகூடும். நண்பர், உறவினர் மூலம் நற்பெயர் பெறுவீர்கள். உத்தியோகஸ்தர்களுக்கு நல்ல மாற்றம் ஏற்படும். புதிய வேலை கிடைக்கும். குழந்தை பாக்கியம் ஏற்படும். உடல்நிலை நன்றாக இருக்கும். தூர தேசப் பிரயாணம் ஏற்படும். வாக்கு, நாணயம் காப்பாற்றப்படும். கடன் தொல்லை விலகும். வீடு வாங்க ஏற்ற காலம். செலவுகள் நியாயமானதாக இருக்கும். தொழில் துறையில் சிக்கல் வராது. பொருளாதார அபிவிருத்தி ஏற்படும். ஆஞ்சநேயர் காயத்ரி பாராயணம் செய்யவும்.

**மகரம்** : எண்ணங்கள் யாவும் ஈடேறும். புண்ணிய ஸ்தலங்கள் செல்ல நேரிடும். தனவிருத்தி ஏற்படும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். கொடுக்கல், வாங்கல் சிக்கல் தீரும். சிலருக்கு வீடு வாசல் வாங்கும் சூழ்நிலை உருவாகும். கணவன், மனைவி உறவு நற்பலனை அளிக்கும். மகப்பேறு பெறும் பாக்கியம் ஏற்படும். தெய்வ பலம் இருக்கிறது. நண்பர், உறவினர் மூலம் ஆதாயம் கிடைக்கும். செலவுகள் சுபமானதாக இருக்கும். வியாபாரத்தில் சுறுசுறுப்பு ஏற்பட்டு தன விருத்தி ஏற்படும். புதிய தொழில் தொடங்க நல்ல காலம். குரு, சனீஸ்வர வழிபாடு நன்மை அளிக்கும்.

**கும்பம்** : எதிலும் நிதானமும், பொறுமையும் இருந்தால் வெற்றி வாகை சூட முடியும். பணக் கஷ்டம் வராது. உத்தியோகத்தில் எதிர்ப்புகள் முறியடிக்கப்படும். நெருங்கியவர்களிடம் அதிக கவனமுடன் பேசுவது நன்மை தரும். உடல் ஆரோக்கியத்தில் கவனம் தேவை. வண்டி வாகனத்தில் செல்லும்போது உஷார். யாருக்கும் ஜாமீன் போட வேண்டாம். எதிலும் பட்டும் படாமலும் ஒதுங்கி இருப்பது நல்லது. உத்தியோகத்தில் சிலருக்கு இடமாற்றம், பதவி உயர்வு கிட்டும். ராகு / கேது வழிபட்டு வருதல் நன்மை அளிக்கும்.

**மீனம்** : நன்மையும் தீமையும் கலந்த வாரம். எதிலும் கவனம் தேவை. உத்தியோகத்தில் வேலைப் பளு கூடும். பணக் கஷ்டம் வராது. கணவன், மனைவிக்குள் அனுசரணை தேவை. குழந்தைகள் வழியில் சுபச் செலவு ஏற்படும். சிலருக்கு மனைவியைவிட்டு வெளிநாடு செல்லும் வாய்ப்பு வரும். சிலருக்கு பூமி வாங்கக் கூடிய சூழ்நிலை ஏற்படும். பூர்வீக சொத்து பாகப்பிரிவினை ஏற்படும். நண்பர்களால் ஆதாயம் ஏற்படும். ராகு / கேது / குரு வழிபாடு நற்பலனை அளிக்கும். ●



# குறையொன்றுமில்லை

**வே**தம் இன்னொரு இடத்திலே சொல்கிற போது மனிதனுக்கு எது பரம சத்ரு என்று கேட்டால் பசிதான் சத்ரு என்கிறது!

இந்த வேத வாக்கியத்தைத்தான் 'பசி வந்திட பத்தும் பறந்து போகும்' என்றது! உபநிஷத்தே இதைச் சொல்கிறது.

ஒரு ஆசார்யார் சிஷ்யனுக்கு வேதம் மொத்தம் சொல்லிக் கொடுத்தார். சொல்லிக் கொடுத்து, கிருஷ்ண பக்ஷத்திலே - தேய்பிறையிலே - கொஞ்சம் கொஞ்சமாகக் குறைத்துக் கொண்டே வந்தார் அவனுக்குச் சாதத்தை! அப்படியே குறைத்துக்கொண்டே வந்து அமாவாசை அன்று ஒன்றுமே போடவில்லை!

ஒன்றுமே போடாமல், "இப்போ வேதத்தைச் சொல்லு" என்றால் ஒன்றும் சொல்ல வரவில்லை. ஸ்ம்ருதிபலமே இல்லை. சொன்ன மந்திரங்கள் - கற்றுக் கொண்ட மந்திரங்கள் அத்தனையும் மறந்துபோய்விட்டது அவனுக்கு. அதற்கப்புறம் வளர்பிறையிலே சாதத்தைப் போட்டுக்கொண்டே வந்தார். பௌர்ணமி அன்றைக்கு பூரண குக்ஷியாகச் (நிரம்பிய வயிறினனாக) சாப்பிட்டான் அவன்.

"இப்போது சொல் வேதத்தை'' என்றால், நன்றாகச் சொல்கிறான்! ஆகவே, இந்த சரீரம் அன்னமயம். எப்படி மண்ணினால் ஆன வீட்டை மண் கொண்டு மெழுகினால் கெட்டியாக இருக்குமோ, அந்த மாதிரி பஞ்ச பூதங்களினால் தயாரிக்கப்பட்ட இந்த சரீரமானது, அந்த பஞ்ச பூதங்களின் சூக்ஷமங்கள் அடங்கியிருக்கக்கூடிய அன்னத்தைக் கொண்டு மெழுகினால் கெட்டியாக - பலமாக - இருக்கும். அன்னத்தை வைத்து இதை மெழுகி வளர்க்க வேண்டிய ஒரு நிர்ப்பந்தம் நமக்கு இருக்கிறதனாலே, "இந்த அன்னம்தான் பரபிரும்மம்" என்

றார் பிருகு!

வருணன் இதைக் கேட்டுத் திரும்பவும் தபஸுக்கு அவரை அனுப்பிவிட்டார் அல்லவா...? மீண்டும் தபஸுக்குப் போய், 'அன்னம் பரபிரும்மம் இல்லை' என்பதைத் தெரிந்துகொண்டு வந்துவிட்டார். ஏனென்றால் அன்னம் கொஞ்சம் நாள் வைத்திருந்தால் அழுகிப் போய்விடுகிறது. ஊசி வாசனை வருகிறது. அதுவே பரபிரும்மமாக இருந்தால், ஒரு தடவை சாப்பிட்டாலே பூரண திருப்தியாக இருக்க வேண்டுமே! ஆனால் மறுபடியும் மறுபடியும் 'கொண்டு வா' என்கிறது இந்த வயிறு! மறுபடியும் மறுபடியும் சாப்பிட வேண்டும் என்று தோன்றுகிறது. ஆகையினாலே, அன்னம் பரபிரும்மம் இல்லை.

பின்னே எது பரபிரும்மம் என்றால், 'பிராணன்தான் பரபிரும்மம்' என்றார் பிருகு. "சரீரத்திலே பிராணன் இல்லை என்றால் அன்னத்தை எடுத்துச் சாப்பிட முடியுமா? பிராணன்தான் பரபிரும்மம்" என்றார்.

"மறுபடியும் போய் தபஸ் பண்ணு" என்று சொல்லிவிட்டார் வருணன். இவரும் போய் தபஸ் பண்ணி, பிராணன் பரபிரும்மம் இல்லை என்பதைத் தெரிந்து கொண்டு வந்தார். ஏனென்றால், பிராணன் உடம்பில் இருப்பதற்கே அன்னம் தான் ஆதாரமாக இருக்கிறது. அது ஒரு வாயு விசேஷம். ஒருநாள் இருக்கிறது; ஒரு நாள் சரீரத்தை விட்டுப் போய்விடுகிறது. உபநிஷத்திலேயே இது சொல்லியிருக்கிறது:

ஒருமுறை உடலிலே எல்லா இந்த்ரியங்களுக்கும் சண்டை வந்தது. கண், காது, வாய் - எல்லாவற்றுக்கும் சண்டை! எல்லாமே பிராணனோடு சண்டை போட்டன. 'நான் பெரியவன்; நீ பெரியவன்' என்று ஒரே சண்டை. அப்போது பிரும்மா என்ன பண்ணினார்... "எல்லோரும் ஒரோரு வருஷம் சரீரத்தை விட்டு வெளியிலே போய்விடுங்கள்" என்றார்.

நேத்திரம் - கண் - இருக்கிறது பாருங்கள்... அது ஒரு வருட காலத்துக்கு அவரை விட்டுவிட்டுப் போய்விட்டது. சரீரத்துக்குரியவர் பார்த்தார்... இத்தனை நாளாக கண்ணில்பட்ட அனாவசிய விஷயங்களெல்லாம் இப்போது பார்க்கிறதில்லை. குருடானது நல்ல சௌக்கியமாகப் போய்விட்டது!

அங்கே திருதிராஷ்டிரனைப் பார்த்துப் பெரியோர்கள் சொன்னார்கள்:



"நீ பிறவிக் குருடனாகப் பிறந்தது நல்லதுதான். ஏனென்றால், அன்றைய தினம் திரௌபதியை மானபங்கம் - வஸ்திராபஹரணம் - பண்ணுகிறபோது பார்க்காதவன் நீ அல்லவா. ஆகையினால் குருடாக இருந்ததும் உனக்கு நல்லதுதான்" என்றார்கள்.

அந்த மாதிரி இவன் குருடன் ஆன தனாலே வெளியே எங்கும் போவ தில்லை. வேண்டாத விஷயங்களைப் பார்ப்பதில்லை. அதனால் அவர் கட் டுப்படுத்தப்பட்டார். புண்ணியம் நிறைய வந்துவிட்டது. அதனால் கண் பார்வை தான் முக்கியம் என்பது தவறாகிப் போய்விட்டது. பார்வையினால் பலன் இல்லையென்று தெரிந்து போயிற்று.

ஒருநாள் செவிப்புலன் இருக்கிறதே, அது வெளியிலே போயிற்று. எதுவும் காதிலே இவருக்கு விழுவதில்லை. வீணான அல்ப விஷயங்கள் காதிலே விழாததனாலே இதரர்கள் வைதாலும் காதிலே விழுவதில்லை. நல்லதாயிற்று! செவிப்புலன் இப்படி வெளியே போய்விட்டுத் திரும்பி வந்தது.

ஒருநாள் இந்தப் பிராணன் வெளி யிலே கிளம்பிப் போய்விட்டது! போனால், கண், காது எல்லாம் போய் விட்டது! அப்படியானால் இதற்கெல்லாம் ஆதாரமாக இருக்கக்கூடியது பிராணன். ஆனால், அந்தப் பிராணனும் ஒருநாள் போய் விடுகிறதல்லவா? ஆகவே பிராணன் பரபிரும்மம் இல்லை என்பதை உணர்ந்தார் பிருகு.

மீண்டும் கொஞ்சம் நாள் தபஸ் பண்ணி, எல்லாவற்றையும் நன்கு பகுத் தறிவது மனம்தான். ஆகவே, மனம்தான் பரபிரும்மம் என்று கண்டுபிடித்தார். ஆனால், மனம் பரபிரும்மம் இல்லை என்பதைக் கொஞ்சம் நாள் கழித்துத் தீர்மானம் பண்ணினார் - மறுபடியும் தபஸுக்குப் போய் தீர்மானம் பண்ணி னார். ஏனென்றால் மனஸ் ஆனது, சரீரம் இருக்கிற வரையில்தானே வேலை செய்கிறது. பிராணன் இருக்கிறபோது வேலை செய்கிறது. பிராணன் இல்லாத போது வேலை செய்கிறதா? தூக்கத்திலே வேலை செய்கிறதா? ஆகவே மனம் பரபிரும்மம் ஆகாது.

மீண்டும் தபஸ் பண்ணினார் பிருகு. விஞ்ஞானம்தான் பரபிரும்மம் என்று கண்டுபிடித்துக்கொண்டு வந்தார். அந்த விஞ்ஞானமும் பூரணமானது இல்லை. அதிலேயும் லோபங்கள் இருக்கின்றன என்பதைத் தெரிந்துகொண்டு, **ஆனந்தம் தான் பரபிரும்மம்** என்பதைக் கடைசி யிலே கண்டறிந்தார். அதுதான் நிலைத்து நின்றது.

பரமாத்மாவினிடத்திலே பரிபூரண மான ஆனந்தம். அவனை அனுபவிக்கக் கூடியவர்களுக்கு அவனிடத்திலே குறை வில்லாத ஆனந்தம் என்பது ஏற்படுகிறது. நாம் இந்த உலகத்திலே குறிப்பிடுகிற ஆனந்தம் இல்லை அது. அதை அனுபவிக் கிறபோதுதான் அது தெரியும். அது என்ன என்பது புரியும். நித்யம் ஓர் ஆனந்தத்தை நாம் உலக விஷயத்திலே சொல்லிக் கொண்டிருப்போம். இதெல்லாம் ஆனந் தமே ஆகாது என்று சொல்லிவிட்டார். உத்தமமான ஆனந்தம், அந்த எம்பெரு மானிடத்திலே நமக்குக் கிடைக்கிறதே... அதுதான்.

பார்கவி வாருணி பிரும்ம: - வித்யை



"ஆதிமனிதனுக்கும் நமக்கும் சின்ன வித்தியாசம்தானா... எப்படி?"

"அவன் காடுகள்லே வாழ்ந்தான். நாம ஏ.டி.எம் கார்டு, சிம்கார்டு, கிரெடிட் கார்டு, கிரீன் கார்டுனு கார்டுகள்லே வாழறோம்..."

- தஞ்சை தாமு

''நீங்கள் அனுப்பிய முதல் சிறுகதையை அச்சிலே பார்த்ததும் உங்கள் மனநிலை எப்படி இருந்தது?''

''அதன் ஒரிஜினல் படைப்பாளி கண்ணில் படாமல் இருக்க வேண்டுமே என்று மனசு கிடந்து 'பக்...பக்...'குனு அடிச்சுக்கிட்டு இருந்தது!''

- பெ. கலாசாமி



யிலே இவ்வளவையும் கடந்து, ஆனந்தமே பரபிரும்மம் என்று கண்டுபிடித்ததனாலே, யோகித்யேயம் - யோகிகளால் அறியப்பட வேண்டியவன் பரமாத்மா என்று ஆகிறது.

பரமானந்தம் சதானந்தம் கர்த்தா கர்த்ரு பதிஸ்வயம் - எல்லாவற்றுக்கும் கர்த்தாவாக - கர்த்தாவுக்குப் பதியாக விளங்கக்கூடியவன் -

- இப்படிப்பட்டவன் யார் என்று கேட்டால், 'மாலோலம் புண்டரீகாக்ஷம் ஸம்ச்ரயே வரதம் ஹரிம்' - லக்ஷ்மியோடு சேர்ந்திருக்கக்கூடிய லக்ஷ்மி நரசிம்ஹன் இருக்கிறானே, அவன்தான் வரதன் - நமக்கு வாரி வழங்கக்கூடியவன். யோகிகள் அவனை ஹ்ருதயத்திலே நித்யம் தியானம் பண்ணுகிறார்கள்.

**பி**ரும்ஹ வித்யா பிரகரணத்திலே சம்வர்க்க வித்யா என்று ஒரு வித்யை உண்டு. நரசிம்ஹ உபாஸனையை நமக்கு எடுத்துச் சொல்கிறது அந்த வித்யை. நரசிம்ஹனை உபாஸிக்கிற சுலோகமே யோக: என்றுதான் ஆரம்பிக்கிறது. ஆகையினாலே, அவனை உபாஸிக்கிறவர் களுக்கு உபாஸ்ய பலதாயி அவன். உபாஸிக்கக்கூடியவர்களுக்குப் பலனைக் கொடுக்கக் கூடியவன்.

சம்வர்க்க வித்யா, உபகோசர வித்யா, மது வித்யா, தகர வித்யா, பர்யங்க வித்யா என்று பல வித்யைகள் உண்டு. அதிலே சம்வர்க்க வித்யை என்பது நல்ல உயர்ந்த வித்யை. சாந்தோக்ய உபநிஷத்தில் சொல்லப்பட்டிருக்கும்படியான உயர்ந்த வித்யை.

இந்த வித்யையிலே எம்பெருமான் நரசிம்ஹன் உபாஸனையைத்தான் ரைக்வர் என்பவர் ஜானஸ்ருதி என்பவனுக்குச் சொல்லிக் கொடுத்தார்.

அந்த நரசிம்ஹ உபாஸனையினாலே உயர்ந்த கதியை அடைந்துவிட்டான் ஜானஸ்ருதி என்பவன். இதை உபநிஷத் நமக்கு 'ஜானஸ்ருதியவை' என்று ஆரம்பித்துச் சொல்கிறது.

பெரும் தலைவன் ஜானஸ்ருதி என்பவன் வாரி வாரிக் கொடுக்கும்படியான வள்ளன்மை மிக்கவன். நித்யம் தானம் பண்ணுவான் எல்லோருக்கும். மத்தியான வேளையிலே தியானம் பண்ணிவிட்டு, ராத்திரி வேளையிலே ஏழடுக்கு உப்பரிகையிலே போய்ப் படுத்துக் கொள்ளுவான்.

அப்படி அவன் படுத்துக் கொண்டிருக்கிறபோது, அவனுக்கு நல்ல ஞானத்தைப் புகட்ட வேண்டும் என்று இரண்டு மஹரிஷிகள் ஹம்ச பக்ஷி வேஷத்திலே, ஆகாச மார்க்கத்திலே பறந்து போகிறார்கள்.

ஒரு பக்ஷி மற்றொரு பக்ஷியைப் பார்த்து, ''பல்லாக்ஷா! பல்லாக்ஷா! மந்தமான பார்வையை உடையவனே... இங்கே படுத்துக் கொண்டிருக்கிறானே, இந்த ஜானஸ்ருதி எவ்வளவு உயர்ந்தவன் பார்த்தாயா? இவனைப் போன்று ஓர் உயர்ந்தவன் உண்டோ?'' என்றது.

அதற்கு இன்னொரு பக்ஷி சொன்னது: "இவன் என்ன உயர்ந்தவன்? ரைக்வரைக் காட்டிலும் இவன் உயர்ந்தவனா?'' என்ற உடனே அந்த முதல் பக்ஷி கேட்டது.

"ரைக்வரா அவர் யார்?''

'ரைக்வரை நீ பார்த்ததில்லையா? காட்டுகிறேன் வா!'' என்று அழைத்துக்கொண்டு போய்விட்டது.

இதைக் கேட்ட ஜானஸ்ருதி படுக்கையிலிருந்து எழுந்து உட்கார்ந்தான்.

*(வளரும்)*

இப்போது மிகவும் பிரபலமாக இருக்கும் மோட்டார் பைக் விளம்பரம் ஒன்றைப் பார்த்திருப்பீர்கள். ஓர் இளைஞர் பைக் ஓட்டிக்கொண்டே வருவார். சின்ன வயதில் அவரை அப்பா அடித்த சம்பவம் கறுப்பு வெள்ளையில் கலங்கலாய்த் தெரியும். "என் அப்பாவை மன்னித்துவிட்டேன்" என்பார். மீண்டும் கறுப்பு வெள்ளையில், கைவிட்ட காதலி. "பெண்களை மன்னித்துவிட்டேன்" என்பார். ஃபைலை முகத்தில் வீசிய தன் மேலதிகாரி, மீசையை சரியாக மழிக்காத தன் நாவிதர்... தன் கடந்த காலம் ஒவ்வொன்றையும் 'மன்னித்துவிட்டேன்' என்பார். இந்த விளம்பரத்தை சுவாரஸ்ய மாக்குகிற ஆதாரமான விஷயம் ஒன்று. இந்த மோட்டார் பைக்கின் பெயர் ரிவெஞ்ச் (பழி வாங்குதல்).

# பழிக்குப் பழி!

தேர்வுகளில் மாணவிகள் அதிக மதிப்பெண் வாங்குகிறார்கள் என்பதில் மாணவர்கள் சிலருக்கு மெல்லிய பொறாமை இருக்கலாம். அவர்கள் இன்னொரு விஷயத்தில் பெரு மைப்பட்டுக் கொள்ளலாம். பெண் குழந்தைகளைவிட ஆண் குழந்தைகளுக்குத்தான் அதிகம் கோபமும், பழிவாங்கு கிற குணமும் வருகிறதாம்.



பழிவாங்குகிற குணம், நம் ஒவ்வொருவருக்கும் கூடப் பிறந்தது. கீழே விழுந்த அதிர்ச்சியில் அழுகிற குழந் தையைச் சமாதானப்படுத்த அம்மா தரையை அடிப்பதில் தான் இது அநேகமாக ஆரம்பமாகியிருக்க வேண்டும். 'நறுக்'கென்று கடித்த கொசுவைப் 'பச்சக்' என்று நசுக்குவதில் ஆரம்பித்து பெரிய பெரிய விஷயங்கள் வரை இது வளரும்.

குறிப்பாக 'சுள்'ளென்று கோபம் வருவதும், சூடுபறக்கும் வார்த்தைகளைப் பொரிந்து தள்ளுவதும் வாலிபத்துக்கே உரிய விஷயம். உங்கள் குழந்தைப் பருவத்தின் கோபத்தை அம்மா, அப்பா ரசித்திருப் பார்கள். வாலிப வயசில் வருகிற கோபத்தைக் காதலி ரசிப்பார். "மெல்லிய ஆண்மகனைப் பெண் ணுக்குப் பிடிக்காது - முரடா உனை ரசித்தேன்" என்று ஷாலினி, அஜீத்தின் கோபத்தை 'அமர்க் களமாய்' ரசித்த மாதிரி.



மரபின்மைந்தன்
முத்தையா

"என்னமா கோபம் வருது உங்களுக்கு" என்று செல்லமாகச் சலித்துக் கொள்கிற சிநேகிதியை நம்பிக் கோபத்தை வளர்த்துக் கொள்ளாதீர்கள். திருமணத்துக்குப் பிறகு அவரே, "சரியான சிடுமூஞ்சிங்க எங்க வீட்டுக்காரர்" என்று உங்களைக் கவிழ்த்துவிடக் கூடும்.

நம்முடைய கோபத்தை நமக்கு நெருக்கமானவர்கள் கொஞ்ச காலத்துக்கு ரசித்துக் கொள்வார்கள். அப்புறம் சகித்துக் கொள்வார்கள். பிறகு சலித்துக் கொள்வார்கள். இந்தக் கோபம் நமக்கும் நல்லதல்ல, நம்மைச் சுற்றியிருப்பவர்களுக்கும் நல்லதல்ல.

இதுபற்றி சுவாரஸ்யமான ஒரு கதை உண்டு.

ஒரு சிறுவனுக்குத் தொட்டதற்கெல்லாம் கோபம் வந்தது. அது பரவாயில்லை. தொடாததற்குக் கூடக் கோபம் வந்தது. அம்மா, அப்பா, தாத்தா, பாட்டி, நண்பர்கள், பக்கத்து வீட்டு மாமா எல்லோரிடமும் வகை தொகை இல்லாமல் கோபப்பட்டுக் கொண்டிருப்பான். அவன் அப்பா பார்த்தார். ஒரு சின்னப்பை நிறைய ஆணிகளையும் ஒரு சுத்தியலையும் பிறந்த நாள் பரிசாகக் கொடுத்தார். "இனிமேல் கோபம் வந்தால் யாரையும் சத்தம் போடாதே ஒரு ஆணியை எடுத்து நம் வீட்டுக்குப் பின்னால் இருக்கிற சுவரில் அடித்துவிடு" என்றார். அவனும்



அடித்துக்கொண்டே வந்தான். 60 ஆணிகள் ஒரே மாதத்தில். நாளாக நாளாகக் கோபம் குறையத் தொடங்கியது. அப்பாவிடம் சொன்னான். அவர், "இனி, உனக்குக் கோபம் வராத ஒவ்வொரு நாளுக்கும் ஒவ்வோர் ஆணியாகப் பிடுங்கிவிடு" என்றார். 60 நாட்களில் எல்லா ஆணிகளும் பிடுங்கப்பட்டுவிட்டன.

அவன் அப்பா, அவனை இழுத்துக் கொண்டுபோய் அந்தச் சுவரின் முன்பு நிறுத்தினார். "உனக்குக் கோபம் வந்தது. ஆணியடித்தாய். கோபம் போனது. ஆணியைப் பிடுங்கினாய். ஆனால் இந்தச் சுவரில் எத்தனை தழும்புகள் இருக்கின்றன என்று பார். ஒவ்வொருமுறை நீ கோபப்பட்ட போதும் இப்படித்தான் யாராவது காயப்பட்டிருப்பார்கள்'' என்றார். அந்தச் சிறுவன் வருத்தத்தில் தலை குனிந்தான்.

**கோ**பம் என்கிற எதிர்மறை குணத்தை, நேர்மறை அம்சமாக மாற்றிக் கொள்வது உண்மையில் மிகவும் சுலபம். ஒருமுறை தென்கச்சி சுவாமிநாதன் அவர்களிடம் பேசிக் கொண்டிருந்தேன். "இவ்வளவு வருஷமா விடாம ரேடியோவிலும், டீ.வி.யிலும் இன்று ஒரு தகவல் சொல்றீங்களே? எப்படி சார்" என்று கேட்டேன்.

படுசீரியசாக பதில் சொன்னார். "எனக்கு ரொம்ப பயந்த சுபாவம். அதனாலதான்" என்று. பிறகு அவரே விளக்கம் கொடுத்தார். "நான் வானொலியில் வேலை பார்த்தபோது இயக்குனர் தினம் ஒரு தகவல் சொல்லச் சொன்னார். ஒழுங்கா செய்யாட்டி மெமோ குடுப்பார்னு பயம். ஒழுங்கா செய்தேன். பேரும் புகழும் வந்துடுச்சு" என்றார்.

அச்சம் என்கிற எதிர்மறை உணர்வை சரியாகப் பயன்படுத்தினால், அது ஒழுங்கான செயல்திறன் என்கிற நேர்மறை அம்சமாய் மாறிவிடுகிறது. அப்படியானால் கோபத்தை பாஸிடிவ்வாக மாற்றுவது எப்படி?

மறுபடியும் அந்த மோட்டார் பைக் விளம்பரத்தையே எடுத்துக் கொள்ளுங்கள். 'ரிவெஞ்ச்' வாகனத்தில் போகிற இளைஞர் தன் வாழ்க்கைப் பாதையில் ஏற்பட்ட வலிகளையெல்லாம் மன்னித்துக் கொண்டே போகிறார். அப்பா எதற்குக் கோபித்தாரோ அந்தக் குறை அவரிடமிருந்து நீங்கிவிட்டது. மேலதிகாரியால் இப்போது குறை காணமுடியாத அளவு மேலே வந்துவிட்டார்.

தன்மீது குறை சொன்னவர்களைப் பழிவாங்க ஓரே வழி, தன்னைப் பக்குவப் படுத்திக் கொள்வது என்பது அவருக்குப் புரிந்தது. பக்குவப்பட்ட உடனேயே, மன்னிக்கும் குணம் படிந்தது.

**ஒ**ரு காட்டில், வேகவேகமாக ஓடிய முயலின் பாதம், தூங்கிக் கொண்டிருந்த சிங்கத்தின்மீது பட்டுவிட்டது. சிங்கம் கண்விழித்துப் பார்த்துவிட்டு, மறுபடியும் தூங்கிவிட்டது. பதறியடித்துப் பத்து கிலோ மீட்டர் ஓடிய முயல், மற்றொரு முயலிடம் சொன்னது, "நான் வந்த பாதையில் சிங்கம் கால் நீட்டிப் படுத்திருந்தது. ஆனால் நான் அந்தச் சிங்கத்தை மன்னித்து விட்டேன்" என்று.

முயல்களால் சிங்கங்களை மன்னிக்க முடியாது. ஆனால் சிங்கங்களால் முயல்களை மன்னிக்க முடியும்.

உங்களைப் பழித்தவர்களைப் பழி வாங்குங்கள்... உங்கள் குறைகளைச் களைந்துவிடுவதன் மூலம்!

(தொடரும்)



''வைத்தியர்களாலே குணப் படுத்த முடியாத மன்னரோட குளிர் ஜுரம் நீ சொன்ன ஒரே வார்த்தையிலே குணமாயிருச்சா... அப்படி என்ன சொன்னே?''

'' 'வில்லங்கபுரி வேந்தன் நம்மீது நடத்த இருந்த போரைக் கைவிட்டுட்டான்'னேன்...''

- தஞ்சை தாமு

# செல்வி!

கனகராஜ்



“குடிகாரப்பய! உழைச்சு நாலு காசு சம்பாதிக்கணும்! அதை வுட்டுப் புட்டு ஊரான் சம்பாத்தியத்துல கல்யாணம் நடத்த ஆசைப் படுறான்!” முணுமுணுத்துக் கொண்டே சாப்பிட உட்கார்ந்தார் சந்தானம்.

“பணம் தர இஷ்டம் இல்லைன்னா விட்டுடுங்க! உங்க கஞ்சத்தனம்தான் எல்லோருக்கும் தெரியுமே! நமக்கு புள்ளையா குட்டியா? ஒரு கல்யாண காரியத்துக்கு பணம் கொடுத்தா குறைஞ்சா போயிடுவீங்க?” என்றாள் பார்வதி சாப்பாடு பரிமாறிபடி.

“தம்பியைப் பத்தி சொன்னா அக்காவுக்குக் கோபம் வருதோ? நான் பேங்க்ல பணம் போட்டு வச்சிருக்கிற விஷயம் நீ சொல்லித்தான் அவனுக்குத் தெரியும். ‘செல்விக்கு ஒரு சம்பந்தம் வந்திருக்கு! அஞ்சு பவுன் நகையும் பத்தாயிரம் ரூபாய் ரொக்கமும் கேட்கிறாங்க! பணத்துக்கு என்ன செய்றதுன்னு தெரியலே’ன்னு அவன் முழிச்சிக்கிட்டிருந்த சமயம் ‘அத்தான் பேங்க் பாஸ்புக்கில் அம்பதாயிரம் ரூபாய் பணம் இருக்கு! நீ கேட்டால் அவர் தருவார், அத்தானைப் பிடி’ன்னு சொல்லி அவனைத் தூண்டி விட்டவ நீதான்!” என்று பற்களை நறநறவென கடித்த வண்ணம் அவளை அடிக்கக் கையை ஓங்கினார்.

அப்போது வாசலில் “மாமா!” என்று குரல் கேட்க, இருவரும் திரும்பிப் பார்த்தனர்.

செல்வி நின்று கொண்டிருந்தாள்!

“வாம்மா செல்வி!” முகத்தில் போலிப் புன்னகையை வரவழைத்துக் கொண்டு சந்தானம் வரவேற்றார்.

“மாமா! நீங்க செய்த உதவிக்கு நன்றி சொல்லிட்டுப் போகலாம்னு வந்தேன்!”

சந்தானத்துக்குப் புரியவில்லை. “உனக்கு என்ன பைத்தியமா? ஒருவேளை கல்யாணச் செலவுக்கு உன் அப்பன் பணம் கேட்டதுக்கு நான் தர முடியாதுன்னு கையை விரிச்சதை நையாண்டி செய்யணும்னு வந்திருக்கியா?”

“அப்பா பார்த்த மாப்பிள்ளைய எனக்குப் பிடிக்கல. அவன் ஒரு ‘தண்ணி வண்டி’! இந்தக் கல்யாணத்தை எப்படி நிறுத்தறதுன்னு நான் யோசிச்ச சமயம் நீங்க ‘என் பணத்தை நம்பித்தான் செல்வி கல்யாணத்தை நடத்த நெனச்சிருக்கியா? நீ கல்யாணம் நடத்தினா என்ன, நடத்தலைனா என்ன? பணம் தர முடியாது’ன்னு அப்பாகிட்ட அடிச்சு பேசி ஒரே நிமிஷத்துல என் கல்யாணத்தை நிறுத்திட்டீங்களே! இது உதவிதானே!” என்று செல்வி சொல்லிச் சிரிக்க, சந்தானமும் பார்வதியும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டனர். ○

### வந்து விட்டது இ-?

எல்லோரும் தேடிவந்து அடித்துவிட்டுப் போகும் வடிவேலுவைப் போல், எல்லா வைரஸ்களும் அதிகமாகத் தேடி வந்து தாக்குவது இன்டர்நெட் எக்ஸ்ப்ளோரரைத்தான். AMUST சாப்ட்வேர் நிறுவனம் மைக்ரோசாஃப்டின் இன்டர்நெட் எக்ஸ்ப்ளோரரைப் பாதுகாக்க ஒரு கவசம் ஒன்றை உருவாக்கியுள்ளது. எக்ஸ்ப்ளோரர் வழியே இணையத்தில் உலாவும் போது அட்வேர், ஸ்பைவேர் இன்னபிற பாப் - அப் விண்டோஸ்களிடமிருந்து பாதுகாக்க உருவாக்கப்பட்டுள்ள இந்தக் கவசத்துக்கு இடப்பட்டுள்ள பெயர்தான் கொஞ்சம் விவகாரமானது. என்ன பெயர் தெரியுமா? இ-காண்டம். ஹெச்ஐவி வைரஸைத் தடுக்க அரசு என்னென்னமோ விளம்பரங்கள் செய்வது போல், இணைய வைரஸ் பரவாமல் தடுக்கும் இந்த பாதுகாப்புக் கவசம் ஆபத்தைக் குறைக்கிறது, பாதுகாப்பானது என்றெல்லாம் கூறுகிறார்கள். இந்தக் கவசம், விண்டோஸ் - எக்ஸ்பியில் மட்டுமே இயங்குமாம்.

### மொபைல் டி.வி

நமது மொபைல் போனிலிருந்தே டி.வி சேனல்களின் நிகழ்ச்சிகளைப் பார்க்கும் வசதி நேற்றுவரை தென்கொரியா நாட்டில் மட்டுமே இருந்தது. இப்போது முதன்முறையாக ரிலையன்ஸ் நிறுவனம் தன் மொபைல்களில் டி.வி. பார்க்கும் வசதியைக் கொண்டு வந்துள்ளது. ஆஜ் தக், என்டிடிவி ஆகிய இரு செய்தி சேனல்களையும் நேரடியாக ரிலையன்ஸ் அளிக்கிறது. மூன்றாம் தலைமுறை மொபைல் மாடல்களான நோக்கியா 6225 & 6235 ஆகியவற்றில் இவ்வசதியைப் பெற முடியும். ஒரு நாளைக்கு மூன்று ரூபாய் அல்லது மாதம் 25 ரூபாய் என்பதே கட்டண விகிதங்கள். சீக்கிரம் மியூசிக் சேனல்களையும் கொண்டு வந்தால், ரொம்ப வசதியாக அப்படியே பாட்டையும் டெடிகேட் பண்ண ஆரம்பிக்கலாம்.



* நாராயண மூர்த்தி

### சென்னைக்கு வருது டோய்!

உலகின் மிகப் பெரிய இ-காமர்ஸ்



# வந்தாச்சு வேலை!




## ஐ.டி.டேட்டா

தனமான அமேசான்.காம் இந்த ஆண்டு இறுதிக்குள் சென்னையில் தனது சாஃப்ட்வேர் டெவலப்மெண்ட் சென்டரை ஆரம்பிக்க உள்ளது. தனது உலகளாவிய வாடிக்கையாளர்களுக்காக மேலும் புதிய வசதிகளோடு, புதிய இ-காமர்ஸ் தளங்களை உருவாக்குவதே அமேசான்.காமின் திட்டம். ஏற்கெனவே தனது டெவலப்மெண்ட் சென்டர் ஒன்றை பெங்களூரில் கொண்டுள்ளது அமேசான்.காம். தற்போது சென்னையில் ஆரம்பிப்பதன் மூலம் சி++ அல்லது ஜாவாவில் மூன்று வருடங்கள் அனுபவமுள்ளவர்களுக்கு அமேசான்.காமில் வேலை கிடைக்க வாய்ப்புகள் இருக்கின்றன.

### ரிங்டோன் டைரக்டர்

அலாதீன் (Aladdin) என்ற நிறுவனம் Create Ringtones என்ற புதிய சி.டி. ஒன்றை வெளியிட்டுள்ளது. இந்த அப்ளிகேஷனை உங்கள் சிஸ்டத்தில் இன்ஸ்டால் செய்துவிட வேண்டும். இந்த அப்ளிகேஷன் மூலம் mp3, wav, ogg, vma முதலிய ஆடியோ பைல்களிலிருந்து தேவையான பகுதியை மட்டும் ரிங்டோன் பைலாக மாற்ற முடியும். இந்த சி.டி. 199 ரூபாய்க்கு முன்னணி கடைகளில் கிடைக்கிறதாம்.

### வாய்ஸ் ப்ளேயர் : இன்ஃபோசிஸ் நாராயணமூர்த்தி

“உலகம் வெகுவேகமாக இயங்கிக் கொண்டிருக்கிறது. நீங்கள் ஒரு விஷயத்தைச் செய்ய ‘முடியவே முடியாது’ எனச் சொல்லி முடிப்பதற்குள், வேறொருவன் அதைச் செய்து முடித்து, உங்கள் வாக்கைப் பொய்யாக்கி விடுகிறான். மற்றவர்கள் ‘முடியாது’ என்று நினைக்கிற ஒரு விஷயத்தை முடித்துக் காட்டுவது தான், நல்ல தலைமைப் பண்பின் அடையாளம்.”

- முகில்

# இரு வீடு ஒரு வாசல்!

“டெலிஃபிலிம் என்பது ஒரு நல்ல விஷயம். ஆனால் தமிழ் டீ.வி. சேனல்கள் அதனைக் கண்டுகொள்வதே இல்லை. மெகா சீரியல்களைக் கட்டிக் கொண்டு அழுகிறார்கள். குடும்பத்துடன் உட்கார்ந்து பார்க்கத் தகுதி இல்லாத காட்சிகள் கொண்ட படங்களை ‘இந்தியத் தொலைக்காட்சிகளிலேயே முதல் முறையாக’ என்று போட்டி போட்டு காட்டிக் கொண்டிருக்கிறார்கள். ஞாயிற்றுக்




கிழமைகளில் ஆழமான கதையும், கலகலப்பான காமெடியும் கொண்ட டெலிஃபிலிம்களை ஒளிபரப்பினால் நல்ல வரவேற்பு கிடைக்கும்” என்கிறார் நாடக ஆசிரியரும், நடிகருமான பாம்பே கண்ணன்.

‘இந்த விஷயத்தில் இவருக்கு சோவும், மௌலியும்தான் இன்ஸ்பிரேஷன். பாம்பே கண்ணன், அண்மையில் ‘இருவீடு, ஒரு வாசல்’ என்ற கதை+காமெடி டெலிஃபிலிமை நேரடியாக, வி.சி.டி., டி.வி.டியாக வெளியிட்டிருக்கிறார்.

“ரெஸ்பான்ஸ் எப்படி இருக்கிறது?”

“வெரிகுட்! தொடர்ந்து இதுபோன்ற டெலிஃபிலிம்களை வெளியிட இருக்கிறேன்” என்கிறார் பாம்பே கண்ணன்.

- சி.எம்.



# அருள்வாக்கு

ஆதிசங்கரரே, சௌந்தர்ய லஹரியில் 'திராவிட முனி' என்ற பெயரைக் குறிப்பிடுவதுடன், அம்பிகையிடம், 'தாயே, தமிழ்க் குழந்தையைப் பாலூட்டியவளே' என்று கூறுகிறார்.

ஆரிய, திராவிட வகுப்பு வாதத்துக்கு ஆதாரம் தேடலாகாது. வேதத்திலோ, சாஸ்திரங்களிலோ இந்தப் பிரிவினைக்கு எந்த ஆதாரமும் இல்லை. வெள்ளையர் நம்மைப் பிரித்து ஆளவந்த சதியில் தான் இந்த ஆர்ய-திராவிடப் பிரிவினையைப் புனைந்தனர். ஆரியர் என்ற பதம் : சாஸ்திரம் இதைப்பற்றி என்ன கூறுகிறது? ஆரியம் என்ற சொல்லை ஓர் இனத்தைக் குறிப்பதாக, எங்குமே அதில் காணோம். ஆரிய என்றால் 'மதிக்கத்தக்க' என்று பொருள் படுகிறது அவ்வளவே. இப்போது நிலவி வரும் ஆரிய இனவாதத்தில், பகவத் கீதையில் பகவான் கிருஷ்ணன், அர்ச்சுனனைப் பார்த்து, அனார்யனாக "ஏன் இப்படி ஆரிய குணத்துக்கு முரணாக மாறி Un-aryan! கோழை யாக இருக்கிறாய்?" என்று கேட்பதைச் சுட்டிக் காண்பித்தார்கள்.

ஆங்கிலத்தில் சந்தோஷமின்மையை 'Un-happy' என்று குறிப்பிடுவதுபோலவே, சம்ஸ்கிருதத்திலும் ஒரு சொல்லுக்கு எதிர்ச் சொல், 'அன்' என்ற முன்மொழியுடன் (Prefix) வரும். ஆகவே, பகவான் கிருஷ்ணன் 'அன் ஆர்யன்' என்று கூறுவதில், மரியாதை குறைந்த நிலை என்ற பொருளில் அல்லாமல், இனவாதத்தின் அடிப்படையில் புரிந்துகொள்வது சரியில்லை. பழைய கவிதை அல்லது புராணங்களில், ராணி தன் அரசனை 'ஆர்யபுத்ர' என்று விளிப்பதை கவனித்திருப்பீர்கள். 'ஆர்யா' என்ற பதத்துக்கு 'மதிப்பிற்குரியவர்' என்ற அர்த்தம்தான்.

சாஸ்திரங்கள் எதிலும் ஆர்யா என்ற பதம், ஓர் இனத்தைக் குறிக்கும் சொல் அல்ல; திராவிடம் என்ற பதம், ஓர் இன வார்த்தையும் அல்ல.

பாரதத்தில் உள்ள அனைவரும் ஓர் இன மக்கள். அவர்கள் இரண்டாகப் பிரிந்திருக்கிறார்கள் என்றால், விந்திய மலைக்கு வடக்கே உள்ளவர்கள் கௌடர்கள், தெற்கே உள்ளவர்கள் திராவிடர்கள். இந்த இரு பதங்களில் இனத்தைக் குறிப்பதற்கு ஒன்றுமில்லை. இனவாரியாக இந்திய மக்களைப் பிரிப்பதற்கில்லை. பூகோள ரீதியாகத்தான் நம் மக்களைப் பாகுபாடு செய்தனர்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்



# வேத சாஸ்திர ரக்ஷணைத்திற்கு ஓர் வேண்டுகோள்.

*அத்வைத வித்யாசார்ய மஹாராஜா ஸாஹேப்*

*ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்யஸ்மரண ஸமிதி* (Regd)

**"ஸ்ரீ கோவிந்த தீக்ஷித கடிகாஸ்தானம்"**

**29-30 கிழக்கு ஐயன் தெரு, கும்பகோணம் - 612 001.**

E-mail : vedagdps@sancharnet.in - Website : www.geocities.com/gdpskmu

☎ Off :
(0435) 5532239
Fax : 2425948
Patasala :
5532238, 2422886

"வேதாத்யயனம் செய்யும் பாக்யமில்லாதவர்கள், வேதாத்யயனம் செய்துவரும் குழந்தைகளை போஷித்து ரக்ஷிப்பதன் மூலம் ஓரளவாவது தனது கடமையை நிறைவேற்ற முடியும். ஒரு வேதக் குழந்தையின் படிப்பு பராமரிப்பு செலவை ஒரு குடும்பம் எடுத்துக்கொண்டால், பேருபகாரமாக இருக்கும்" என்று காஞ்சி ஸ்ரீ மஹாஸ்வாமிகள் உபதேசித்துள்ளார்கள். அவரின் முதாதயர்களான ஸ்ரீ நாகமாம்பா ஸமேத பகவான் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் அவர்களால் கி.பி. 1542-ல் ஸ்தாபிக்கப்பட்டு தொடர்ந்து 463 ஆண்டுகளாக நடந்துவரும் ராஜா வேத காவ்ய பாடசாலையை மேற்படி ஸமிதியானது தாம்போல் இயங்கி காப்பாற்றி வருகிறது. தற்பொழுது 200 மாணவர்களுக்கு 17 வேத, சாஸ்திர அத்யாபகர்கள் புராதனமான குருகுல முறைப்படி ரிக் வேதம், கிருஷ்ண, சுக்ல யஜுர் வேதம், ஸாம வேதத்தை போதித்து வருகிறார்கள். இப்புனித பாடசாலையை ரக்ஷிக்க கீழ்கண்ட திட்டங்களில் அனைவரும் பங்குகொண்டு ஸ்ரீ வேத மாதாவின் அனுக்ரஹத்தால் ஸகல ஸ்ரேயஸ்களையும் அடைய வேண்டுகிறோம். புதிய பாடசாலை கட்டடம் ஸ்ரீ கோவிந்த தீக்ஷித கடிகா ஸ்தானம் என பெயரிடப்பட்டு 21-6-2004 திங்கள்கிழமை ஸ்ரீ காஞ்சி காமகோடி ஜகத்குரு ஸ்ரீ ஜெயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் திறந்து வைத்து வேத அபிவிருத்திக்கு அர்ப்பணித்தார்.

| தங்கள் நன்கொடைக்கு U/S 80-G பிரிவின்படி வருமான வரி விலக்கு உண்டு<br>நன்கொடை திட்ட விபரங்கள் | நன்கொடை தொகை | நிரந்தர வைப்பு நிதி "Corpus Fund" |
|---|---|---|
| ஒரு வேளை ஸமாராதனைக்கு (பகுதி தொகை) | Rs. 500 | Rs. 8,000 |
| அமாவாஸ்யை (or) பௌர்ணமி (or) க்ருஷ்ண (or) சுக்ல பக்ஷ த்வாதசி ஒரு ஸமாராதனைக்கு [Please choose one specific day of a particular month in a year for Samaradhana] | Rs. 1,500 | Rs. 25,000 |
| வேதம் பயிலும் ஒரு மாணவனின் பராமரிப்பு ஒரு மாத செலவு ரூ.1000/- | Rs. 12,000 P.A | Rs. 2 Lakhs |

நன்கொடைக்கான தொகையை Cross செய்யப்பட்ட D.D/ Cheque-ஐ A.V.M.S.G.D.P.S. Samithi என்ற பெயரில் அனுப்பக் கோருகிறோம்.

# 24ct Goldplated பரிசுப்பொருட்கள் வாங்க






24 ct GOLD PLATED GIFTS

மூன்று வருட வாரண்டி

Show room:
Next to Jeeva Park, Old # 85, G.N. Chetty Road, T. Nagar, Chennai - 17.

Tel: 2815 6370 Mobile: 98400 21384.

**Timings: 9.30 am to 7.00 pm SUNDAY HOLIDAY**

for online purchse please visit:
www.chennaionline.com, www.indiavarta.com
www.sifymall.com

**உங்கள் உலோகப் பொருட்களுக்கும் 24ct Goldplating செய்து தருகிறோம்**

# ஸ்ரீகாந்த் வீட்டு சஞ்சய் ராமசாமி!

"நடிகர்களை ஆராதிப்பதை அடியோடு நிறுத்துங்கள். கிரிக்கெட் நட்சத்திரங்களைக் கொண்டாடுங்கள். நடிகர்கள் தங்களுடைய வளர்ச்சிக்காக நடிக்கிறார்கள். ஆனால் விளையாட்டு வீரர்கள் நாட்டுக்காக, நூறு கோடி மக்களுக்காக விளையாடுகிறார்கள்." - நெத்தியடியாகப் பேசும் இருபத்து இரண்டு வயது இளைஞர் ஆதித்யா, கஜினி படத்தில் சூர்யா ஏற்று நடித்த இளம் தொழிலதிபர் சஞ்சய் ராமசாமி பாத்திரம் போல படு கம்பீரமாக இருக்கிறார். நிஜத்திலும் துள்ளலான தொழிலதிபராக வலம் வரும் இவர், இந்திய அணியின் தலைசிறந்த பேட்ஸ்மேன்களில் ஒருவராய் விளங்கிய கிருஷ்ணமாச்சாரி ஸ்ரீகாந்தின் தலைமகன்.

"டீ.வி. முன் அமர்ந்து அப்பா ஆடுகிற ஒவ்வொரு மேட்சையும் ஆர்வத்தோடு பார்த்து ரசிப்பார் அம்மா. 'டேய் ஆதி! அப்பா ஆடறார் ஓடிவா' என்று கூப்பிடுவார். ஐந்து வயதில் அப்பா ஒரு கிரிக்கெட் வீரர் என்பது தெரிந்துவிட்டாலும் ஆரம்பத்தில் எனக்கு கிரிக்கெட் மீது ஆர்வம் ஏற்படவில்லை. வீட்டில் நிறைய கிரிக்கெட் மட்டைகளும், பந்துகளும் குவிந்து கிடக்கும்.



நானோ டென்னிஸ் மட்டையைத்தான் தேடி எடுப்பேன். சிறு வயதில் எனக்குப் பிடித்தமான விளையாட்டென்றால் அது டென்னிஸ்தான். அதன் பிறகு பன்னிரண்டு வயதில் கிரிக்கெட் மீது ஆர்வம் வந்தது. எனது பள்ளித் தோழர்களுக்கு கிரிக்கெட் என்றால் சாப்பாடு வேண்டாம். அவர்களது ஆர்வம் பார்த்து எனக்குள்ளும் கிரிக்கெட் நெருப்பு பற்றிக் கொண்டது.

நானே கூட எதிர்பார்க்கவில்லை... தமிழக அணிக்காக ஒரே இரவில் ஆட வந்துவிட்டேன். ரஞ்சி ட்ராபி மட்டும்

# தலைமுறைகள் — 3

தான் ஆடவில்லை. ஆனால் பத்தொன்பது வயதில் பிசினெஸ் மீது ஆர்வம் வந்துவிட்டது. இதற்கு கிரிக்கெட் பிடிக்காமல் போய்விட்டது என்று அர்த்தமல்ல. சச்சின், சேவாக் போன்ற வீரர்களெல்லாம், இன்றைய இந்திய இளைஞர்களுக்கு நல்ல இன்ஸ்பிரேஷனாக இருக்கிறார்கள். மேற்கு இந்தியத் தீவு அணியில் எனக்கு பிரைன் லாராவை ரொம்பவே பிடிக்கும். அப்பாவையும் அதிகம் ரசித்திருக்கிறேன். அவர் தன்னுடைய முழுத் திறமையைப் பயன்படுத்தவே இல்லை என்பது என் கருத்து. அவருக்கே உரிய ஸ்டைலில் ஆடியதோடு நிறுத்திக் கொண்டு விட்டார். அவர் வெளிப்படையான மனிதர். பாரம்பரியத்தில் ஊறியவர். தம்மை மாற்றிக்கொள்ள வேண்டாம் என்று இருந்துவிட்டார். அதே போல் எங்களை

**“பெற்றோரின் செல்வாக்கில் காரியம் சாதிப்பதும் ஒருவகையில் ஊழல் மாதிரிதான்!”**



**ஆதித்யா**

யும் அவர் வற்புறுத்தவில்லை. கிரிக்கெட்டை எங்கள் மீது திணிக்க நினைத்ததில்லை.

எனது பிஸினெஸ் ஆர்வத்தைப் பார்த்துவிட்டு ‘முதலில் முதலீடு செய்ய கற்றுக்கொள்’ என்று அப்பா கொஞ்சம் பணம் கொடுத்தார். அதை ஷேர் மார்க்கெட்டில் முதலீடு செய்யலாம் என்று உன்னிப்பாகக் கவனிக்க ஆரம்பித்தேன். கிரிக்கெட்டை விடவும் ஷேர் மார்க்கெட் விளையாட்டு சுவாரஸ்யமாக இருந்தது. நான் செய்த சின்னச் சின்ன முதலீடுகள், எனது கணிப்பைப் பொய்யாக்கவில்லை. என்றாலும் பிசினெஸ் உலகில் நாம் போக வேண்டிய தூரம் இதுவல்ல என்று உணர்ந்து கொண்டேன். அப்பாவுக்கு பக்தி அதிகம். நானோ கோயில் பக்கம் அதிகம் போகமாட்டேன். கடவுள்

என்கிற சக்தி மீது நம்பிக்கை உண்டு. ஆனால் கண்மூடித்தனமான பக்தி இல்லை. எனக்கென்று சில நம்பிக்கைகள் உண்டு. 'கடவுள் பார்த்துக் கொள்வார்', 'நமக்கு என்ன கொடுக்க வேண்டும் என்று அவருக்குத் தெரியும்.' இதையெல்லாம் விட 'விதிப்படிதான் எல்லாம் நடக்கும்' என்பது போன்ற டயலாக்குகளில் எல்லாம் எனக்கு உடன்பாடு இல்லை. நாம் எந்த முயற்சியுமே செய்யாமல் கடவுளிடம் கோரிக்கை வைப்பதும், விதியின்மேல் பழிபோட்டுத் தப்பித்துக் கொள்வதும் சோம்பேறிகளின் வேலை.

பெற்றோர் சம்பாதித்த புகழையும் செல்வாக்கையும் துருப்புச்சீட்டாக பயன்படுத்தி காரியத்தைச் சாதித்துக் கொள்வதைப் பரவலாகப் பார்க்கிறேன். இதுவும் ஒருவகை ஊழல்தான். ஸ்ரீகாந்தின் மகன் என்பதில் பெருமிதம்தான். அதையே சலுகைக்காக பயன்படுத்துவது அப்பாவின் கௌரவத்தைக் குலைத்துவிடும். அப்பாவின் முகவரி, முன்னேற்றம் எல்லாமே அவரது உழைப்பால் வந்தது. நான் எப்படி அதற்கு உரிமை கொண்டாட முடியும். சலுகை மட்டுமல்ல... ஸ்ரீகாந்தின் மகன் என்பதையே நட்பு வட்டத்தில் மறைத்து விடுவேன். எங்கேனும் தெரிந்துவிடும் அடுத்த கணம் முதல் எனக்குத் தரப்படும் கூடுதல் முக்கியத்துவம், என்னை முடக்குகிறதே தவிர, என்னைக் கௌரவப்படுத்துவதில்லை. நான் நானாக இருப்பதில்தான் எனக்கு விருப்பம்.

ஈ-பப்ளிஷிங், சாஃப்ட்வேர் உருவாக்கம் இரண்டுக்காகவும், சென்னையில் பி.பி.ஓ. தொழில் தொடங்கியிருக்கிறேன். முப்பது திறமையாளர்களை பொறுக்கி எடுத்து பணியில் அமர்த்தியிருக்கிறேன். இன்னொரு பக்கம் இங்கிலாந்தின் லிவர்பூல் பல்கலைக்கழகத்தில் எம்.பி.ஏ. படித்துக் கொண்டிருக்கிறேன். அங்கே தீவிரமாகச் செயல்படும் தொழிலதிபர்கள் கிளப்புக்கு ஆண்டுதோறும் ஐந்து இந்திய மாணவர்கள் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். அதில் தென்னிந்தியாவிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரே மாணவன் நான் என்பதில் எனக்குப் பெருமை. இந்த கிளப்புக்கு சர்வதேச பிசினஸ் ஐடியாக்களை, புதிய மார்க்கெட்டிங் உத்திகளை நாங்கள் கொடுக்கிறோம். அங்கே பாடப் புத்தகங்களே கிடையாது. அனுபவக் கல்வியும், கேஸ் ஸ்டடீஸும் நமக்கு புதிய எக்ஸ்போஷர் மாதிரி ஆகிவிடுகின்றன. இங்கே எம்.பி.ஏ. படித்துக்கொண்டே எனது தொழிலுக்கு வெளிநாட்டு வாடிக்கையாளர்களை சேர்த்துக் கொண்டிருக்கிறேன். படிப்பு முடிந்த பிறகு லண்டனில் எனது தலைமை அலுவலகத்தை அமைத்துவிட வேண்டும் என்பதுதான் திட்டம்.

தாய் நாட்டின் வரிப்பணத்தில் படித்துவிட்டு, அந்நிய நாட்டுக்குத் தங்களது உழைப்பை இந்தியர்கள் கொட்டுகிறார்கள் என்ற குற்றச்சாட்டு இருக்கிறது. இதில் உண்மை இருக்கிறது என்றாலும், உலகமயமாக்கலுக்குப் பிறகு, புதிய வர்த்தகக் கதவுகள் திறக்கப்பட்டிருக்கின்றன. நான் லண்டனில் அலுவலகத்தை நடத்தியபடியே தமிழகத்தில் இருக்கிற புத்திசாலி இளைஞர்களுக்கு வேலை தர முடியும். அவர்கள் அமெரிக்காவோ, கனடாவோ போய் சம்பாதிக்க நினைக்கிற பணத்தை தாய்நாட்டில் இருந்துகொண்டே சம்பாதிக்க முடியும். சொந்தக் காலில் நிற்க முடியும்" என்று சொல்லும் ஆதித்யா ஸ்ரீகாந்த், அப்துல் கலாமின் தீவிர விசிறி.

சந்திப்பு : **ஆர்.சி.ஜெயந்தன்**
படம் : **ஸ்ரீஹரி**



"இப்பல்லாம் என் மனைவியைப் பார்க்கறதுக்கு ரொம்பப் பயமாயிருக்கு."

"ஏன்?"

"கொஞ்ச நாளாவே என்னை நேர்ல பார்க்கறதைவிட போட்டோவுல பார்க்கறது நல்லாயிருக்குன்னு சொல்லிட்டிருக்கா."

- **எஸ்.ஓ. வீரன்**

# புக் சாட்

**"ஹா**ய் வஸந்த், என்ன நம்மள அடிக்கடி கல்கில கட்டம் கட்டிடறாங்க."

"பண்டிகைங்க வந்ததால பக்கம் நெருக்கடியாம். இனி அப்படி நேராதுன்னு எடிட்டரே என்கிட்ட சொன்னாங்க. சரி, புக் ஃபேர் போனியா?"

"போனேன். தெரிஞ்ச எழுத்தாளர்களை விட்டுட்டு வேற சில தொகுப்புகள் வாங்கினேன். ஸ்நேகிதன்னு ஒருத்தர் எழுதின 'லாந்தர் தின்றதுபோக மிச்சம்'னு ஒரு கவிதைத் தொகுப்பு"

"பேரே வித்தியாசமா இருக்கே!"

"கவிதைகளும் நல்லாத்தான் இருக்கு. இன்னும் கொஞ்சம் அடர்த்தி கூடினா பிரகாசப்படுவாரு ஸ்நேகிதன். வித்தியாசமா, நூலை கரையான்களுக்கு சமர்ப்பணம் பண்ணியிருக்காரு. அப்புறம் வழக்கறிஞர் கே.எஸ். இராதாகிருஷ்ணன் 'சேதுக் கால்வாய் ஒரு பார்வை'ன்னு ஒரு புக் எழுதியிருக்காரு. சேது திட்டம்னா என்ன, எவ்வளவு செலவாகும், செலவு பண்ணினா பின்னாடி லாபம் வருமா, இத்திட்டத்தோட சாதக, பாதக பலன்கள் என்ன, அறிஞர்களோட விமர்சனங்கள், மீனவர்களுக்குப் பிரச்னையாகுமா இப்படி எல்லாவிதமான அம்சங்களுக்கும் இந்தப் புத்தகத்துல விடை இருக்கு. மேப் எல்லாம் போட்டு விளக்கங்களும் கொடுத்திருக்காங்க. ரொம்பக் கடினமா உழைச்சிருக்காரு இராதாகிருஷ்ணன். ஆமா, நீ என்ன லேட்டஸ்ட்டா படிச்ச?"

"சூர்யராஜனோட மானக்சந்த் மேன்ஷனில் ஒரு ஞாயிற்றுக்கிழமை."

"என்ன கதை சொல்றியா?"

"இல்லல்ல, சிறுகதைத் தொகுப்போட பேரு. யதார்த்தமா இருக்கு கதைகள். வெவ்வேறு விதமான அனுபவங்களைத் தருது. அலுப்புத் தராதது பெரிய விஷயம். இவரை நம்பிக்கைக்குரியவரா முன்மொழியறாரு பிரபஞ்சன்."

"அது சரி, நீ எப்ப என் நம்பிக்கைக்குரியவனா மாறப் போற?"

"என்ன சொல்ற?"

"போன மாசம் ஃப்ரண்ட்ஸோட 'சிவகாசி' பார்க்க இருநூறு ரூபா கடன் வாங்கினியே, அடுத்த நாளே தர்றேன்னே... மறந்துட்டியா?"

"ஆமா நீ யாரு! உன் பேரு என்ன!"

"டேய், டேய், நில்லுடா... பணம் வேணாம் நில்லுடா!" ●



















● லாந்தர் தின்றது போக மிச்சம், எதிர் வெளியீடு, 305, காவல் நிலைய வீதி, பொள்ளாச்சி - 1

● சேதுக் கால்வாய் - ஒரு பார்வை, பொதிகை - பொருநை - கரிசல், 4/359, ஸ்ரீசைதன்ய அவென்யூ, சென்னை - 41

● மானக்சந்த் மேன்ஷனில் ஒரு ஞாயிற்றுக்கிழமை, அன்னை ராஜேஸ்வரி பதிப்பகம், 41, கல்யாண சுந்தரம் தெரு, சென்னை - 11

# ஆனந்தம்!

பி.மாரிமுத்து

சசிகுமார் பதைபதைப்புடன் காணப்பட்டான். தமிழகமெங்கும் பல கிளைகள் கொண்ட உணவகத்தின் மானேஜர் அவன். வருடத்துக்கு ஒரு முறை எப்போதாவது வரும் அவனுடைய முதலாளி இன்று வருகிறார். சர்வரிலிருந்து சூப்பர்வைசர் வரை எல்லோரும் யூனிஃபார்மில் இருக்கிறார்களா என்று செக் பண்ணிவிட்டான். எங்கும் சுத்தம், சுகாதாரமாக இருக்கும்படி பார்த்துக் கொண்டவன் வாசலுக்கு வர, அங்கே கோபமானான்.

காரணம் பிச்சை எடுத்துக் கொண்டிருந்த ஊனமுற்ற இளைஞன்.

அவனிடம் சென்ற சசிகுமார்,

"தம்பி! இங்க எல்லாம் நிக்கக் கூடாது போ... போ...!'' என்று விரட்டினான்.

"சார் புதுசாவா நிக்குறேன்! மூணுமாசமா இங்கதான் சார் நிக்குறேன்! ப்ளீஸ் சார்!" கெஞ்சினான்.

'மூணுமாசமா இங்கே நிற்கிறானா? நாம் பார்க்கவில்லையே' என்று நினைத்தபடி...

''சரி! இன்னிக்கு மட்டும் இங்க நிற்கக் கூடாது! முக்கியமான ஆளு வர்றாங்க! போயிடு!'' என்றான். சொல்லிவிட்டு சசிகுமார் மற்ற வேலைகளில் மூழ்கினான். சரியாக பத்தரை மணிக்கு முதலாளி வந்து விட்டார்.

காரிலிருந்து இறங்கியவரின் பார்வை நேராக ஒரு இடத்தில் நிலைகுத்தி நின்றது. சசி திரும்பிப் பார்த்தான். அதிர்ந்தான். அந்த ஊனமுற்ற சிறுவன் இடத்தை விட்டு நகராமல் பழையபடி கையேந்திக் கொண்டிருந்தான். சசிக்கு பயத்தில் மனசு அடித்துக் கொண்டது. முதலாளி அவனைக் கையசைத்துக் கூப்பிட்டார். அவன் பயத்துடன் வந்தான்.

"இந்தச் சின்ன வயசுல ஏன் பிச்சை எடுக்குற... வேலை குடுத்தா செய்வியா?''

''ம்'' என்று தலையாட்டினான்.

சசிகுமாரிடம் திரும்பி, "க்ளீனிங் செக்ஷன்ல ஆள் கம்மியா இருக்குன்னு சொன்னீங்கள்ல... இவனை சேத்துக்கோங்க'' என்றபடி ஹோட்டலுக்குள் போனார் முதலாளி.

சசிகுமாருக்கு தனக்கு ஏன் இது தோன்றவில்லை என்று ஆச்சர்யமாக இருந்தது. யோசித்ததில் ஒரு உண்மை புலப்பட்டது.

'நான் பிரச்னையை சமாளிக்கப் பார்த்தேன். ஆனால் அவர் பிரச்னையை தனக்குச் சாதகமாக்கிக் கொண்டார். இந்த வித்தியாசம்தான் அவரை முதலாளியாக்கியிருக்கிறது. நான் தொழிலாளியாக இருக்கிறேன்.'- வெற்றியின் வேர்கள் பிடிபட ஆரம்பித்ததில் ஆனந்தப்பட்டான் சசிகுமார்! ○



# ஆடி வந்த காவிரி!



• 'சுந்தர சோழருக்கு' நினைவுப் பரிசு...



• நிலைய இயக்குனருக்கு...

"இரண்டாயிரமாண்டு தமிழ் வரலாற்றை தமிழ் மக்களின் வீட்டுக் கூடத்தில் கொண்டு வந்து கொட்டியவர் அமரர் கல்கி. இதுதான் உன் மண், இதுதான் உன் வீரம், இதுதான் உன் தியாகம், இதுதான் உன் கலை; இதுதான் உன் பண்பாடு என்று எடுத்துச் சொல்லி பெருமிதப்படுத்தியவர்" - உணர்ச்சிகரமாகப் பேசினார் வைரமுத்து...

பதினான்கு வயதில் பொன்னியின் செல்வனைப் படித்து, பிரமித்தது தொடங்கி, அமரர் கல்கியின் எழுத்துக்களின் சிறப்பினை சிலாகித்துப் பேசினார். "சரித்திரக் கதையில்கூட தமது இயல்பான நகைச்சுவையைக் கொண்டு வருவதும் கலை, திரைப்பட விமர்சனங்களையும், இலக்கியத் தரத்துடன் செய்வதும் கல்கியால் மட்டுமே முடிந்தது" என்றார்.

"பலரும் விரும்பியும் பொன்னியின் செல்வனை திரைப்படமாக எடுக்க முடியவில்லை என்றார்கள். இன்றைக்கு பொன்னியின் செல்வனை படமாக எடுக்கப் பணம் ஒரு பிரச்னையில்லை. பன்னாட்டு நிறுவனங்கள் கோடி கோடியாகக் கொட்டத் தயாராக இருப்பார்கள். ஆனால், அதனைப் படமெடுக்க நிறைய தியாகங்கள் செய்ய வேண்டி இருக்கும். அதற்கு யாருமே தயாராக இருக்க மாட்டார்கள். கதையில் வருவனவற்றில் சில காட்சிகளை, சம்பவங்களை, கதாபாத்திரங்களைத் தியாகம் செய்ய வேண்டி இருக்கும். அதற்கு யாரும் தயாராக இருக்க மாட்டார்கள். அதனால் படமெடுக்க முடியாது போகும்" என்றார் வைரமுத்து.

கடந்த வருடம் ஏப்ரலில் தொடங்கிய

'பொன்னியின் செல்வன்' வானொலி நாடகம், அண்மையில் நிறைவடைந்ததையொட்டி கவிப்பேரரசு வைரமுத்து தலைமையில் ஒரு பாராட்டு விழாவினை நடத்தியது கல்கி கிருஷ்ணமூர்த்தி நினைவு அறக்கட்டளை. விழா, சென்னையிலுள்ள ஓட்டல் காஞ்சியில் சிறப்பாக நடைபெற்றது.

ஒலிநாடாவில் ஒலிப்பதிவு செய்யும் வானொலியின் பாரம்பரிய முறையில் இல்லாமல், கம்ப்யூட்டர் தொழில்நுட்பத்தைப் பயன்படுத்தி ஒலிப்பதிவு செய்யப்பட்ட முதல் நாடகம் 'பொன்னியின் செல்வன்'தான். இதற்காக சென்னை




• நினைவுப் பரிசாக வழங்கப்பட்ட படம்

வானொலி காலரைத் தூக்கிவிட்டுக் கொள்ளலாம்.

"2003-ம் ஆண்டு சென்னை புத்தகக் கண்காட்சியில் அந்த வருடம் மிக அதிக அளவில் விற்பனையானவை அமரர் கல்கியின் புத்தகங்கள் என்று பல்வேறு பதிப்பாளர்கள் மூலமும் தெரியவந்தது. அப்போதுதான் கல்கியின் படைப்புகளில் மிக முக்கியமானதான பொன்னியின் செல்வனை வானொலி நாடகமாக ஆக்கும் எண்ணம் ஏற்பட்டது" என்றார் வானொலி நாடகத் தயாரிப்பு மற்றும் ஒலிபரப்பு பொறுப்பினை பாராட்டத்தக்க அளவில் செய்து முடித்திருக்கும் சென்னை வானொலி நிலைய துணை இயக்குனரான ஆர்.பார்த்திபன்.

செங்காடு கிருஷ்ணமூர்த்தி என்ற நாடக ஆசிரியர், பொன்னியின் செல்வனை வானொலி நாடகமாக வடிவமைத்துக் கொடுத்தார். 'ஆர்.எஸ். மனோகர் (பெரிய பழுவேட்டரையர்), வி.எஸ். ராகவன் (சுந்தர சோழ சக்ரவர்த்தி), எம்.என்.ராஜம் (செம்பியன் மாதேவி) உட்பட சுமார் அறுபது பேர் பல்வேறு பாத்திரங்களை ஏற்று வானொலி நாடகத்துக்கு மெருகூட்டினார்கள்.

தமிழ்த்தாய் வாழ்த்தையடுத்து தனது கம்பீரக் குரலால் பெரிய பழுவேட்டரையர் பாத்திரத்தில் வாழ்ந்த ஆர்.எஸ். மனோகருக்கு மௌன அஞ்சலி செலுத்தப்பட்டது. தொடர்ந்து வரவேற்றுப் பேசினார் கல்கி ராஜேந்திரன்.

"யார் எந்த நல்ல காரியம் செய்தாலும் உடனே பாராட்டிவிட வேண்டும் என்பது அமரர் கல்கியின் பாலிசி. அந்த வகையில் பாரம்பரியம், பண்பாட்டைக் காக்கவும், மக்களிடையே விழிப்புணர்ச்சியூட்டவும், மிகுந்த சமுதாயப் பொறுப்புணர்வுடன் செயல்பட்டு வருகிறது அகில இந்திய வானொலி" என்றவர் பொன்னியின் செல்வன் வானொலி நாடகத்தில் பங்கேற்ற அனைவரையும் பாராட்டினார்.

"நாவலில், கல்கி எழுதிய உரையாடல்களையே பெரும்பாலும் வானொலி நாடகத்திலும் பயன்படுத்தி இருக்கிறார்கள். டைட்டில் பாடலில் சொல்லப்பட்டிருப்பதுபோல, நாடகத்தைக் கேட்கும்போது, ஆடிவரும் காவிரி போலவே இன்பம் அளித்தது. பலமுறை படித்து, வாசகர்கள் தங்கள் மனத்தில் உருவகப்படுத்தி வைத்திருக்கும் கதாபாத்திரங்கள் நேரில் வந்து பேசுவது போன்ற உணர்வை வானொலி நாடகம் ஏற்படுத்தியது" என்று அவர் குறிப்பிட்டபோது பல டமும் நெகிழ்ச்சி.

'பொன்னியின் செல்வன்

வானொலி நாடகத்தில் பணிபுரிந்த நடிக, நடிகையர், நாடக ஆசிரியர், பாடகர்கள், வானொலி தொழில்நுட்ப வல்லுனர்கள் அனைவருக்கும் கல்கி கிருஷ்ணமூர்த்தி நினைவு அறக்கட்டளை சார்பில் நினைவுப் பரிசுகளை வழங்கினார் வைர முத்து.

அகில இந்திய வானொலி நிலைய இயக்குனர் ஸ்ரீனிவாசராகவன், 'பொன்னியின் செல்வன் வானொலி நாடகத்துக்குக் கிடைக்கும் பாராட்டுகள், அதற்காக முழுமையான ஈடுபாட்டுடன் உழைத்த அனைவருக்கும் உரியது. அடுத்த தலைமுறைக்கு அகில இந்திய ரேடியோ வின் பொக்கிஷம் இது" என்று தமது ஏற்புரையில் குறிப்பிட்டார்.

"சமீபத்திய புயல், வெள்ளத்தின்போது ரேடியோவில் 'பொன்னியின் செல்வன்' நாடகம் ஒலிபரப்பாகிக் கொண்டிருந்த நேரம். தண்ணீர் பெருக்கெடுத்தோடும் பின்னணி ஓசை கொண்ட காட்சியின் போது, ஒரு வீட்டில், அவர்களது சிறு பையன், 'அம்மா! நம்ம வீட்டுக்குள்ள தண்ணி வந்திருக்கு' என்று பயந்து அலறிவிட்டானாம். கடிதம் மூலம் இந்த அனுபவத்தை ஒரு நேயர் எங்களுடன் பகிர்ந்துகொண்டார்'' என்றார்கள் ஸ்ரீனிவாசராகவனும், பார்த்திபனும்.

முடிவாக நேயர்களுக்கொரு நற் செய்தி... அமரர் கல்கியின் இன்னும் ஒரு படைப்பு வானொலி நாடகமாகப் போகிறது: பார்த்திபன் கனவு!

- எஸ்.சந்திரமௌலி
படங்கள் : ஸ்ரீஹரி

* நாடக ஆசிரியருக்கு...





# குரலைப் பிடுங்கு

பாசமான பக்கத்து வீட்டுக்காரர்களைப் போல அதிக பிணைப்போடு அருகருகே இருப்பவை காது, மூக்கு, தொண்டை ஆகிய மூன்று உறுப்புகள். இவற்றில் எதுவொன்றில் நோய்த்தொற்று நேர்ந்தாலும் அதற்கு காலத்தே சிகிச்சை மேற்கொள்ள வேண்டும். தவறினால் மற்ற இரண்டு உறுப்புகளுக்கும் அது பரவும். குறிப்பாக குளிர்காலத்தில் ஏற்படும் நோய்த்தொற்றை அது ஜலதோஷம் என்றாலும் அலட்சியப்படுத்தக் கூடாது என்கிறார் தி.நகர் கிருஷ்ணா மருத்துவமனையின் தலைவரும் காது-மூக்கு-தொண்டை அறுவை சிகிச்சை நிபுணருமான டாக்டர். ஜி.சுந்தர் கிருஷ்ணன்.

"தென்னை மரத்தில் தேள் கொட்டினால் பனை மரத்தில் நெறி கட்டும் என்ற பழமொழி மிகவும் பிரபலம். மனித வாழ்வுக்குப் பொருந்துவதைக் காட்டிலும், இப்பழமொழி மனித உடலில் இருக்கும் காது, மூக்கு, தொண்டை ஆகிய உறுப்புகளின் அமைப்புக்கு கச்சிதமாகப் பொருந்தும். அத்தனை நெருங்கிய தொடர்பு கொண்ட இவற்றை, குளிர்காலத்தில் கொஞ்சம் கூடுதலாகவே நாம் காத்துக் கொள்ள வேண்டும்.

குளிர்காலத்தில் பெய்யும் மழை, பனிப் பொழிவு, உணவுப் பொருட்கள், குடிநீர், தின் பண்டங்கள் போன்றவை மூலம் நோய்த்தொற்று ஏற்படலாம். குறிப்பாக ரைனோ, எச்-இன்ஃப்ளுயன்ஸா போன்ற வைரஸ்கள் ஸ்ட்ரெப்டோ காக்கஸ் உள் ளிட்ட பாக்டீரியாக்கள் போன்றவை காது - மூக்கு - தொண்டையில் நோய்த் தொற்றை உண்டாக்குகின்றன. நோய்த் தொற்று ஏற்பட்டதும் மூக்கடைப்பு ஜலதோஷம், இருமல், சளி, வீசிங் தொண்டை அலர்ஜி, காதுவலி போன்ற பல உபாதைகள் ஏற்படலாம். இவற்றில் தொண்டையில் ஏற்படும் அலர்ஜி காரணமாக தொண்டை வலி, எரிச்சல், வறட்டு இருமல், காய்ச்சல் ஏற்படலாம்.

முக்கியமாக குரல் கம்மி விடும். பேசும் போதும், விழுங்கும் போதும் வலி ஏற்படும். முதலுதவியாக வெதுவெதுப்பான நீரில் சிறிதளவு உப்பைப் போட்டு கொப்பளித்து விட்டு டாக்டரிடம் சென்று விரைவான சிகிச்சை எடுத்துக் கொள்வதே நல்லது. எப்போதும் வந்து போகிற ஜலதோஷம்தானே என்று அலட்சியமாக விட்டுவிடும் பட்சத்தில் அது டான்சில் இன்ஃபெக்ஷனாக அடுத்த கட்டத்தை எட்டி டான்சிலின் பின்புறம் சீழ் வைத்துவிடும். இதை குயின்ஸி (Quinsy) என் கிறோம். குயின்ஸி நிலையில் அவதிப்படும் ஒருவருக்கு கடுமை யான காய்ச்சல் இருக் கும். தொண்டையின் உள்ளே வீக்கம் ஏற்பட்டு, தண்ணீரை விழுங்கவே சிரமப்படுவார். தொண்டை அலர்ஜி காரண மாக வாய்ஸ்பாக்ஸ் பாதிக்

• டாக்டர் சுந்தர் கிருஷ்ணன்





ப்பட்டு, இயல்பான குரலில் மாற்றம் ற்பட்டு, பிறகு அதுவே நிரந்தரமாகி டும் நிலை உருவாகும். எனவே ரியான நேரத்தில் சரியான சிகிச்சை அவசியம்.

குயின்ஸி நிலையிலும் ஒருவர் சிகிச்சை எடுக்கத் தவறிவிட்டால், சீழ் வடித்து, நுரையீரல் வரையிலும் சீழ் பாய் விடலாம். அது தவிர கழுத்து, காது, மூக்கு நரம்புகளிலும் இது ரவும் அபாயம் உள்ளது. ஏற் கனவே சைனஸ் தொந்தரவு உள்ள ர்கள் மேலும் கவனமாக இருக்க வண்டும். குளிர்காலத்தில் பெரிய ர்களைக் காட்டிலும் காது-மூக்கு-தொண்டை பாதிப்புக்கு குழந்தை ளே அதிகம் ஆளாகிறார்கள்.

டான்ஸில் அலர்ஜி ஏற்பட்டு, சைனஸ் மற்றும் காதுக்கும் நோய்த் தொற்று ஏற்படும்போது குழந்தைகள் காதுகளைக் கையால் வருடியபடி

# குளிர்காலம்!

இருப்பார்கள். நடு இரவில் திடீரென்று எழுந்து அலறி அழுவார்கள். பல குழந்தைகளுக்கு காதில் சீழ் வரும். இதே போல பெரியவர்களுக்கும் சீழ் வரும். இந்தப் பிரச்னையை மருந்துகள் மூலம் இரண்டு வாரங்களில் குணப்படுத்தி விடலாம். மருந்து சிகிச்சைக்குப் பிறகும் சீழ் வடிவது நிற்கவில்லை என்றால் நோய்த் தொற்றுக்கு எளிதில் இலக்காகும் மூக்கின் அடினாய்டு சதை (காற்றிலிருந்து வரும் பாக்டீரியாக்களை ஃபில்டர் செய்து தரும் கிளாண்ட்), டான்சில் ஆகியவற்றை சோதனை செய்ய வேண்டும். அங்கு நோய்த்தொற்று காணப்படும் நிலையில், டான்சில் அல்லது அடினாய்டு அறுவை சிகிச்சை செய்ய வேண்டியது அவசியம். சைனஸ்களில் நிரந்தரத் தொற்று காணப்பட்டால் எண்டோஸ் கோபி மூலம் சைனஸ் அறுவை சிகிச்சை செய்து சீழ் வடிவதற்கு முற்றுப்புள்ளி வைக்கலாம். இத னால் காதின் செவிப்பறை பாதிப்பு தடுக்கப்பட்டு, இயற்கையான செவித்திறனைப் பாதுகாத்துக் கொள்ளலாம்.

பதினைந்து ஆண்டுகளுக்கு முன்பு காது அறுவை சிகிச்சை கடினமான ஒன்றாக இருந்தது. காதின் பின்புற வழியைத் திறந்து சீழ் பிரச்னைக்கு அறுவை சிகிச்சை செய்ய வேண்டி இருந்ததே இதற்குக் காரணம். ஆனால் இன்று காதைத் திறக்காமல் எண்டோஸ்கோபியை (oto Endoscopy) காதுக்குள் நுழைத்து சீழ் அறுவை சிகிச்சை செய்யலாம் என்பதோடு இதையே பயன்படுத்தி சைனஸ் அறுவை சிகிச்சையும் செய் யப்படுவது காது-மூக்கு-தொண்டை மருத்துவத்தில் ஒரு மாபெரும் முன்னேற்றம். இதைப் போன்ற நவீன சிகிச்சைகள் இருந்தாலும் காது-மூக்கு-தொண்டை தொற்றுகளுக்கு தொடக்கத்திலேயே சிகிச்சை மேற் கொள்வது சாலச்சிறந்தது."

- ஜெய்

• நவீன ஓட்டோ எண்டோஸ்கோபி சாதனம்...



# "ஜெயிச்சாத்தான் இங்கு மரியாதை!"

தரம், வெற்றி இரண்டுக்கும் உத்தரவாதம் தருகிற இளம் இயக்குனர் 'சொல்லாமலே' சசி. தற்போது சினிமா ஸ்டண்ட் கலைஞர்களின் நிச்சயமற்ற வாழ்க்கையை மையப்படுத்தி 'டிஷ்யூம்' படத்தை எடுத்து இருக்கிறார். ''தலைப்புதான் டிஷ்யூமே தவிர, படத்தில் ஒரு சண்டைக் காட்சிகூட கிடையாது'' என்று ஆச்சர்யமூட்டியவருடன் ஒரு சந்திப்பு...

**ரோஜாக் கூட்டம் படத்துக்குப் பிறகு நான்கு ஆண்டுகள் எங்கே போய் விட்டீர்கள்?**

"இந்த கேரக்டர் ரத்தமும் சதையுமா எவ்வளவு உயிரோட்டமா இருக்குன்னு விமர்சிக்கிறோம் இல்லையா! அதுமாதிரி வாழ்க்கையிலேர்ந்து ஒரு நல்ல கதை பண்ணணும்ங்கிறதுக்காக நாலு வருஷம் காத்திருக்க வேண்டி வந்துடுச்சி. கதை கிடைச்சதும் சூர்யாவை மனசுல வெச்சு டிராவல் பண்ணினேன். அப்போ கூடவே பழகின பல டெக்னீஷியன் நண்பர்கள் கதையிலே ரொம்ப ஆழமா போய் அதுலேயே மூழ்கிட்டாங்க. அவங்கதான் படத்துக்கு தொழில்நுட்பக் கலைஞர்கள்னு முடிவு பண்ணி வெச்சிருந்தேன். ஆனால் சூர்யா பெரிய டெக்னீஷியன்ஸ் வேணும்னு கேட்டார். அதில் எனக்கு உடன்பாடு இல்லை. அதனாலே கசப்புணர்ச்சி எதுவும் இல்லாமல் இரண்டு பேரும் நட்போட பிரிஞ்சுட்டோம். அதுக்கப்புறம் ஒரு புதுமுக ஹீரோவைத் தேர்வு செஞ்சு பதினொரு நாள் ஷூட் பண்ணினேன். ஆனால் எதிர் பார்த்த சினிமா வரலே. அதை அப் படியே தூக்கிப் போட்டுட்டு கதையை மறுபடியும் செதுக்க ஆரம்பிச்சுட்டேன்."

**இந்த நான்கு வருட போராட்டம் எப்படி?**

''சினிமாதான்னு இல்லை. எந் தத் துறையா இருந்தாலும் இங்கே



• 'டிஷ்யூம்' படத்தில்...

ஜெயிச்சுக்கிட்டே இருந்தாத்தான் மரியாதை. இல்லேன்னா நம்ம தன்மானத்தை, எறும்பு நசுக்கிற மாதிரி இரக்கமே இல்லாமல் நசுக்கிடுவாங்க. நான் போராடிக்கிட்டு இருந்த நேரத்துல, ஒரு படத்தோட ப்ரிவியூ காட்சிக்குப் போயிருந்தேன். மசாலா படம் கொடுத்து புதுசா ஜெயிச்ச இயக்குனருக்கு அங்கே முக்கியத்துவம் கொடுத்தவங்க என்னை ஒரு மூலையிலே உட்கார வெச் சாங்க. இது மாதிரி ஆயிரம் சொல்லலாம். ஆனால் இதுக்காகவெல்லாம் நான் வருத்தப்படலே. ஏன்னா என்னோட

யாரிப்பாளர் எந்தக் கட்டத்துலேயும் ன்னைக் கைவிடலே.'

**ஸ்டண்ட் கலைஞர்கள் வாழ்க்கை லிருந்து கதை பண்ண வேண்டும் என்று ன் தோன்றியது?**

"பத்து வருஷத்துக்கு மேலே சினிமா லே அவங்களை நெருக்கமா பார்க் றேன். அவங்க வாழ்க்கையை இன்னும் நருக்கமா தெரிஞ்சுக்கிறதுக்காக ஒரு வருஷம் இருபத்தஞ்சு ஸ்டண்ட் கலைஞர்கள் குடும்பத்துக்குப் போய் அவங்ககூட பழகி, அவங்க வீடுகள்லே என்ன நடக்குதுன்னு கூர்மையா கவனிச்சேன். ஸ்டண்ட் கலை ஞர்கள், அவங்க மனைவிகள், பிள்ளைகள், நண்பர்கள்னு பேசிப் பேசி அவங்க மனசை, அதுல இருக்கிற வலியைத் தெரிஞ் சுக்கிட்டேன். ஒரு ஸ்டண்ட் கலை ஞர் ஹீரோகிட்டே அடி வாங்கி கீழே விழும்போது அதை டீ.வி. யிலே பார்க்கிற மற்ற குழந்தைகள் எல்லாம் கைதட்டும். ஆனால் அடிவாங்கிறவரோட குழந்தைகள் கைதட்ட முடியாது. அடிவாங்குற அப்பாவைப் பார்த்துக் கண் கலங் கிடும். இப்படி ஆயிரம் விஷயம் இருக்கு.

இவங்க பணத்துக்காக மட்டும் இப்படி சாகஸத்துலே இறங்குற தில்லே. அடிவாங்கினாலும் நாமளும் கவனிக்கப்படணும்ங் கிற தாகம்தான் இவங்களோட அடையாளம். உயரத்து லேர்ந்து ஜம்ப் பண்ணி கீழே விழற ஒரு ஸ்டண்ட் மேன், அடிபட்டாக்கூட அதைக் காட்டிக்கமாட் டார். கீழே குதிச்சதுமே வலியைப் பொறுத்துக்கிட்டு 'ஷாட் ஓ.கே.வா'ன்னுதான் கேட்பார். தன்னோட வலியை மறைச்சுக்கிட்டு தன்னை வெளிப்படுத்த நினைக்கிற இந்த ஃபீல்தான் என்னைப் பாதிச்சது."



• சசி

**நாயகன் ஜீவா, நாயகி சந்தியா இரண்டு பேரையும் பத்திச் சொல் லுங்க...**

"இயக்குனர் அமீருக்குத்தான் நன்றி சொல்லணும். 'ராம்' படத்துலே ஜீவாவைத் தலைகீழா மாற்றிக் காண்பிச்சார். அதே மாதிரி சந்தியாவை அறிமுகப்படுத்தின பாலாஜி சக்திவேலுக்கும் நன்றி சொல்றேன்.

கதைப்படி ஜீவா 'ரிஸ்க் பாஸ்கர்'ங்கிற இளம் ஸ்டண்ட்மேன். சந்தியா ஒரு சிற்பம் படிக்கிற மாணவி. இவன் உருவாக்குபவள், இவன் உடைக்கிறவன். இவங்களுக்கு இடையிலே ஏற்படுகிற காதல், உடைந்து உடைந்து உருப்பெறுது..." - என்று சொல் லும் சசி, விஜய் ஆன்டனி எனும் புதுமுகக் கலைஞருக்கு இசை வாய்ப்பை வழங்கி யிருக்கிறார். ஆனால் 'சுக்ரன்' படம் முந்திக் கொண்டது. ஆன்டனியின் 'டிஷ்யும்' இசைதான் கோடம்பாக்கத்தின் லேட் டஸ்ட் டாக்.

- ஸ்ரீசக்கரம்



• ஆழ்மனமும் ஆதாரவும்

• வாணி மகாலட்சுமி,
திருவாரூர். ❑

? சிகரெட் விளம்பரப் படத்தில் நடித்ததற்காக பாலிவுட் சூப்பர் ஸ்டார் அமிதாப் மன்னிப்புக் கேட்டுள்ளது குறித்து...?

! நடிக்க மறுத்திருந்தால் அது இவ்வளவு பெரிய செய்தியாகியிருக்காது. நடித்து விட்டு, பிறகு மன்னிப்புக் கேட்டதால் புகையிலை எதிர்ப்பு பிரசாரத்துக்குக் கூடுதல் வலிமை சேர்த்திருக்கிறார்!

• எம். லக்ஷ்மி, மும்பை.

? சவுதி அரேபியாவில் ஒரு ஷரியத் நீதிமன்றம் 'கண்ணுக்குக் கண்' தண்டனை வழங்கியுள்ளது பற்றி...?

! மேல் முறையீட்டில் தண்டனை குறைக்கப்பட்டு விட்டாலும் கூட, கால மாறுபாடுகளுக்கு ஏற்ப இஸ்லாமிய நாடுகள் சிவில்-கிரிமினல் சட்டங்களை அமைத்துக்கொள்ள வேண்டியதன் அவசியத்தை இச்சம்பவம் வலியுறுத்துகிறது.

• ஆர். நாகராஜன், சென்னை - 117.

? சுமங்கலி கேபிள் நிறுவனத்துக்காக இருபத்திரண்டு மணி நேரத்துக்குள் கவர்னரிடம் மனு கொடுத்த தி.மு.க. தலைவரின் செயல் பற்றி உங்கள் கருத்து என்ன...?

! தாம் அப்படி மனு கொடுக்கவில்லை என்றும், கவர்னரைச் சந்தித்துத் திரும்பிய பிறகே சுமங்கலி அரசுடைமை பற்றி கேள்விப் பட்டதாகவும், உரிமை மீறல் என்ற பேச்சுக்கே இடமில்லை எனவும் கூறிவிட் டார் கருணாநிதி. பர்னாலாதான் இந்தச் சிக்கலை விடுவிக்க வேண்டும்.

• ஆர். கே. லிங்கேசன்,
மேலகிருஷ்ணன்புதூர்

? காங்கிரஸுக்குத் துணை முதலமைச்சர் பதவி தர வேண்டும் என்கிறாரே திண்டிவனம் ராமமூர்த்தி?

! தனித்து நின்று போட்டியிட்டு, கணிசமான இடங்களைப் பெற்றால் இப்படி வீராவேசமாகப் பேசலாம்; அர்த்தமுண்டு. கூட்டணி அமைத்த பிறகு, அதிலும் ஐம்பது சதவிகிதத்துக்கு மேல் தொகுதிகளில் திமுகதான் போட்டியிடும் என்ற நிலையில் எத்தனை தொகுதிகள் காங்கிரஸுக்குக் கிடைக்கும் என்று அதில் பேரம் பேசுவது மட்டுமே சாத்தியம்.

• பி. ராஜேஸ்வரி,
மதுரை - 16.

? அடுத்த முதல்வரும் ஜெயலலிதாதான் என்று சோ கூறுகிறாரே?

! அது அவருடைய



• பதவிய
பேராசைய



• மனுவும் மீறலும்

# கவர்னரிடம் மனு கொடுக்கலாமா கலைஞர்?

அரசியல் கணிப்பு என்பதைக் காட்டிலும் ஆழ்மன அவா என்று கூறுவது பொருந்தும். அதற்காகக் களத்தில் இறங்கி அவர் பாடுபடவும் கூடும்.



• மறுப்பும் மரியாதையும்

● கே.வி. ராமன், சென்னை - 73.

*? நடிகர் மாதவன் தம் கையால் தயாரித்த ஒரு தோசையின் விலை ரூ. 25,000மாமே?*

! அந்தப் பணம் 'பான்யன்' அமைப்புக்குப் போய்ச் சேர்ந்து நிராதரவான மனநலம் குன்றிய நபர்களுக்கு உதவுவதால், அவர் இன்னும் நிறைய தோசைகள் சுட்டுத் தள்ளட்டும்!

● கே.என். பாலகிருஷ்ணன்,
கும்பகோணம்.

*? திருவையாறில் நடந்து வரும் சத்குரு தியாகராஜர் ஆராதனை விழாவில் உங்களைக் கவர்ந்த அம்சங்கள்?*

! நேரில் போகவில்லை. டி.வி.யில் பார்த்தபோது, பஞ்சரத்ன கீர்த்தனைகள் பாடப்பட்ட சமயம், அவற்றின் அர்த்தத்தைக் கூடவே படித்துக் கொண்டு வந்ததில், அந்த மகத்தான படைப்புகளின் கவிநயமும் பொருள்நயமும் மனத்தைக் கொள்ளை கொண்டன. தியாகய்யரின் உள்ளத் தூய்மை புலனானது.

● கே. கே. பாலசுப்ரமணியன்,
குனியமுத்தூர்.

*? விஜயகாந்தின் தே.மு.தி.க. இப்போதுள்ள கட்சிகளுக்கு மாற்றுக் கட்சியாக இருக்கும் என 33.2 சதவிகித மக்கள் கருதுவதாக லயோலா கல்லூரியின் கருத்துக் கணிப்பு கூறுகிறதே?*

! மாற்றுக் கட்சியாக இருக்கும் என்பது



• தொண்டும் தோசையும்!



• படுத்தலும் பதுக்கலும்



• நடிப்பும் மன்னிப்பும்

சரிதான். வோட்டு வாங்கும் கட்சியாக இருக்குமா என்பதற்கு இன்னொரு கணிப்பு தேவை!

● க. வேடியப்பன்,
கும்மிடிப்பூண்டி.

*? பாகிஸ்தான் அதிக ரன் அடித்தாலும் இந்தியா பதிலடியாக அதிக ரன்கள் சேர்த்து தன் பலத்தை நிரூபித்து விட்டதே?*

! 'பிட்ச்' தயாரிப்பில் காணப்படும் பலவீனத்தையும் நிரூபித்திருக்கிறது!

● முகவை முத்துசாமி, தொண்டி.

*? சமீபத்திய நெருடல் சம்பவம்?*

! குடியரசுத் தலைவர் வந்து திறந்து வைத்த தமிழக சித்த மருத்துவமனை - ஆராய்ச்சி மையத்தில் மருந்துகள் பற்றாக் குறை; மருத்துவர்கள் பற்றாக்குறை. இத்தனைக்கும் இந்த மருத்துவமனையானது குடியரசுத் தலைவர் தொடங்கி வைப்பதற்கு முன்பிலிருந்தே இயங்கிக் கொண்டுதான் இருந்திருக்கிறது. அப்படியும் இப்போது மக்கள் காக்க வைக்கப்படுகிறார்கள்!

● ஏ.எஸ். யோகானந்தம்,
கலிங்கியம். •

*? 'இந்திய அரசின் கொள்கைகள் உடன்பாடாக இல்லாததால் சாகித்ய அகாடமி விருதை ஏற்க மறுக்கிறேன்' என்று எழுத்தாளர் அருந்ததிராய் கூறியிருப்பது சரியா?*

! எழுத்திலும் வாழ்விலும் அருந்ததிராய் அரசின் கொள்கைகளை எதிர்க்கிறார் என அறிந்தும் சாகித்ய அகாடமி அவரது எழுத்துக்குக் கௌரவம் செய்ய விரும்புகிறது. இந்திய அரசின் அமைப்பானபோதிலும் சாகித்ய அகாடமியின் சுயேட்சை அதிகாரத்துக்கும் கலை நோக்குக்கும் இது சான்று. எனவே பரிசை ஏற்பதே அருந்ததிராய்க்கு கௌரவம்.

● விமலா வரதராஜன்,
ஹைதராபாத் - 47.

*? 'ஹோமியோபதி மருத்துவம் என்பது வெறும் ஹம்பக். அது எந்த நோயையும் குணப்படுத்துவதில்லை' என்று பிரிட்டன் நாட்டு மருத்துவ இதழான 'லான்செட்' கூறியுள்ளதே?*

! லண்டனில் ஹோமியோ மருத்துவம் பிரபலமடைந்து வருகிற வேகத்தைக் கண்டு அஞ்சி எழுதப்பட்டுப் பிரசுரமான ஆதார மற்ற கட்டுரை அது என்று ஹோமியோ ஆதரவாளர்கள் தரப்பில் விளக்கம் வெளியாகியுள்ளது.

● எம். அசோக்ராஜா,
அரவக்குறிச்சிப்பட்டி.

*? அரசு ஊழியர்களை நான்காண்டு காலம் 'படுத்தி'யதை வெறும் அகவிலைப் படி உயர்வால் சரிக்கட்டிவிட இயலாது என்கிறாரே கலைஞர்?*

! பாவம், அவர் மக்களின் பகுத்தறிவிலும் சுயசிந்தனையிலும் உள்ள நம்பிக்கையில் கூறுகிறார். டி.ஏ.வைச் சம்பளத்துடன் இணைக்கும்போது, வருவாய் 1500 ரூபாய் வரை கூடுகிறது என்கிறபோது, பகுத்தறிவு ஜெயிக்குமா? பணம் ஜெயிக்குமா? 'பகுத்தறிவும் சுயசிந்தனையும் ஜெயிக்க வேண்டும்' என்கிற கலைஞரின் நல்லெண்ணத்தை வரவேற்போம்! ○

**□ ரூ. 100/- பரிசு பெறுபவர் :**

வாணி மகாலட்சுமி,
38E, டாக்டர் ஜெயராமன் காலனி,
வடக்கு வீதி,
திருவாரூர் - 610 002.

**• ரூ.50/- பரிசு பெறுபவர் :**

ஏ.எஸ். யோகானந்தம்,
ஒளவையார்பாளையம்,
கலிங்கியம் அஞ்சல்,
கோபி தாலுகா,
பெரியார் மாவட்டம் - 638 463.

# ஆறும் ஜில்லு!

✉ ஒரு நாட்டின் அபரிமிதமான வளர்ச்சிக்குத் திறமையான அரசும் வங்கிகளும் இரு கண்களைப் போன்றவை. நூறாண்டு கால சேவையில், மக்களின் ஆதரவில் முனைப்புடன் இயங்கும் 'பாங்க் ஆஃப் இந்தியா' பற்றிய சிறப்பு வெளியீடு, அதன் வளர்ச்சியையும் செயல்பாடுகளையும் புரிந்திட வழி வகுத்தது.

**ஈரோடு, சாந்தி கல்யாண்குமார்**

✉ 'பாங்க் ஆஃப் இந்தியா' நூற்றாண்டு விழா மலர் சிறப்பாக இருந்தது. கட்டுரைகள் அருமை.

**சென்னை - 92, கே.துரைசாமி**




✉ 'பாங்க் ஆஃப் இந்தியா' பற்றி சிறப்பாக செய்தி வெளியிட்டு, பொதுவாகவே எல்லா வங்கிகளையும் பற்றி தெரிந்துகொள்ள வைத்துவிட்டார்கள்!

**அவிநாசி, ச.இல.சுந்தரி**

✉ எல்.கணேசனின் பேட்டி, கலைஞர் இம்முறை இதயத்தில் இடமளித்து ஏமாற்ற முடியாது என்பதைத் தெளிவுபடுத்தியது!

**பொன்மலை, ஆர்.பிரகாஷ்**

✉ தீபா ஜெயகாந்தனின் எண்ணங்கள் அப்படியே ஜெயகாந்தனை நினைவுபடுத்துகின்றன. புலிக்குப் பிறந்தது பூனையல்ல!

**பெரம்பூர், எம்.தூசிமுத்து**

✉ நாகரிகமான, முகம் சுளிக்க வைக்காத, இளமைத் துள்ளலுடன் வரும் கல்கி, சிறியோர் முதல் பெரியோர் வரை அனைத்துத் தரப்பினரையும் கவர்கிறது. தொடரட்டும் இப்படியே!

**கோயமுத்தூர், டி.ஜெய்சிங்**

✉ 'என்ன புக் வாங்கலாம்?' டிப்ஸ் படிச்சு குபீர் சிரிப்புதான் போங்க!

**கோவை, ராமு அர்விந்த்**

✉ ஆறு, தவமாய் தவமிருந்து, பரமசிவன் என்று சினிமா தலைப்புகளில் வந்த கதைகள் அனைத்தும் இனித்தன.

**காமநாயக்கன்பாளையம், மா. மோகனராசன்**

✉ இந்த வாரம் எங்கே என் கண்ணனில் கண்ணனின் பிரவேசம் பரவசம்!

**கரூர், ஆர்.ராஜலட்சுமி**

✉ உடல்நலம் சீரடைய சாப்பிடுவதுதான் மருந்து. ஆனால் அந்த மருந்தைச் சாப்பிடுவதே உடல்நலம் கெடுவதற்குக் காரணமாக இருப்பது மகா கொடுமை (தலையங்கம்). அதிலும் இந்தப் பிரச்னையில் அரசியல் புகுவது கொடுமையிலும் கொடுமை.

**மதுரை, என்.பாலகிருஷ்ணன்**

✉ இளமை கல்கியில் ஐஸ்வர்யா ராயின் ஆறு நியூஸும் ஜில்லோ ஜில்லு!

**ஈரோடு-1, ரேவதிப்ரியன்**

# எங்கே என் கண்ணன்?

'என் வாயில் தேவகி
உலகைக் கண்டாள்
என் வாசலில் குசேலன்
உய்வைக் கண்டான்!'

- ஸ்ரீ கிருஷ்ணன்

**வா**சலுக்கு அப்பால் தெரிந்த கண்ணனும் அவன் அப்பாவும் கணேஷை திக்குமுக்காட வைக்க, கண்ணன் "அப்படியா?" என்று தான் கேட்ட கேள்வியோடு அவரையும் கையைப் பற்றி அழைத்துக் கொண்டு உள்ளே நுழைந்தான்.

அவரிடம் புத்தி ஸ்வாதீனம் இல்லை என்பது அவர் பார்க்கும் பார்வையிலும், சில சேஷ்டைகளிலும் தெளிவாகவே தெரிந்தது.

"அப்பா..." என்றான் பலமாக. அந்த அப்பாவுக்குள் சந்தோஷம், ஆச்சரியம், ஒருவித சந்தேகம் என்று எல்லாமே ஒன்று கலந்து முண்டியடித்தன.

"உன் அப்பாவேதான் கணேஷா... மும்பைக்குப் பறந்து போய் இவரைத் தேடிப் பிடிச்சு திரும்ப இழுத்துண்டு வர்றதுக்குள்ள போறும் போறும்னு ஆயிடுத்து.. எப்படியோ என்னோட இரண்டாவது அசைன்மென்ட்டும் முடிஞ்சது. அடுத்து என்ன உன் அக்காவோட சிக்கலா... அதையும் ஒரு கை பார்த்துக்கறேன்..."

கண்ணனின் பதிலும் அப்படியே அதில் அவன் கணேஷின் அக்கா சரண்யா விஷயத்தைத் தொட்டதும் கணேஷை உயிர்க்கூச்சத்துக்கே ஆளாக்கிற்று. அனுராதாவும் கிட்டத்தட்ட மிரண்டு போய் விட்டிருந்தாள்.

"மிஸ்டர் கண்ணன்... இவரை... இவரை எப்படிக் கண்டுபிடிச்சீங்க? நீங்க சும்மா வாய்ச்சவடால் அடிக்கற மாதிரிதான் நினைச்சேன். இப்ப என்னடான்னா நிஜமாலுமே அப்பாவோட வந்து நிக்கறீங்களே... என்னால நம்ப முடியலை..."

கண்ணன் பதிலுக்கு வழக்கம்போல சிரித்துவிட்டு "யார் ஒருத்தர் நம்ப முடியலை... நம்ப முடியலைங்கற வார்த்தையை அதிகம் பயன்படுத்தறாங்களோ, அவங்க இந்த உலகத்தைக் கூர்ந்து பார்க்கவே இல்லைங்கறதுதான் பொருள். உலகத்தைவிட தங்களைத் தங்களுக்குள்ள கொஞ்சம்கூட பார்த்துக்கலைங்கறதும் முக்கியமான விஷயம்" என்றான்.

"அப்படின்னா...?" - இது அனுராதா.

"என்ன அப்படின்னா... மும்பைல திரிஞ்சிண்டிருந்த இவரை மும்பை போய் கண்டுபிடிச்சு கூட்டிக்கிட்டு வந்தது ஒரு பெரிய விஷயமா! இதையே நம்ப முடியலைன்னா, வெட்டவெளியில ஒரு பக்கம் சாஞ்சபடி மிதந்துக்கிட்டிருக்கற இந்தப் பூமியையும் அது ஒரு மாறாத வேகத்தோட சுத்தறதையும் எப்படி நம்ப முடியும்? இந்த பூமிக்கு சூரியனைக் கொண்டு வெளிச்சத்தையும், அந்த வெளிச்சத்துலயும் காலை, மதியம், மாலைங்கற மூன்று விதங்களையும் கொடுத்துருக்கற ஒரு சக்தியை எப்படி நம்ப முடியும்? அப்புறம் இராத்திரிப் பொழுது... இருண்ட வானத்தை அண்ணாந்து பார்த்தா எத்தனை எத்தனை நட்சத்திரங்கள். இதுக்கு நடுவுல நிலா வேற! இராத்திரி வேளைல இருட்டுல எந்த உயிரும் தடுமாறிடக்கூடாதுங்கறதுக்காக சூரியன்கிட்ட இருந்து வெளிச்சத்தைக் கடன் வாங்கி விநியோகிக்கற ஒரு கருணைமிகுந்த கிரகம் இந்த நிலா. பாவம் இது...! தேய்ஞ்சும் வளர்ந்தும் இரவுப் பொழுதுகளுக்கு ஒரு அடையாளத்தையும் இதுதான் தருது. இதோட நிகரில்லாத

**27**

**இந்திரா சௌந்தர்ராஜன்**

செயல்பாட்டையும் இதுக்குப் பின்னால இருந்து ஆட்டி வைக்கற சக்தியையும் எப்படி நம்ப முடியும்?''

கண்ணனின் பேச்சு அனுராதாவையும் கணேஷையும் ஒரு உலுக்கு உலுக்கிவிட்டது.

தொடர்ந்து கண்ணனே, ''அப்பா கணேசா... உன் அப்பாவைக் கண்டுபிடிச்சு கூட்டிண்டு வந்துட்டேன். இவ்வளவு தூரம்

"ஓய் ஸ்வாமி... திருவாளர் சுவாமிநாதன் கிளம்புங்கோ... திவ்யமா கங்கா ஸ்நானம் பண்ணிட்டு வருவோம்" என்று அவரையும் துரிதப்படுத்தினான்.

''இல்லே... வேண்டாம். அப்பா இங்கேயே இருக்கட்டும். இப்பத்தான் அவர் வந்துருக்காரு... அவர்கூட நான் நிறைய பேசணும். அப்புறம் எங்கம்மாக்கும் தகவல் தரணும். அம்மா துடிச்சிக்கிட்டு இருப்



வந்துட்ட இவரை கங்கை கரைக்குக் கூட்டிகிட்டுப் போய் ஒரு முழுக்கு போட்டுட்டு அப்படியே விஸ்வநாத தரிசனமும் பண்ண வெச்சு, சாப்பாடும் வாங்கிக் கொடுத்து கூட்டிக்கிட்டு வரேன். அப்புறமா உன் சகோதரி பத்தி சிந்திப்போம்...'' என்று படபடவென்று ஒரு கர்மவீரனைப் போல பேசி முடித்தவன்,

பாங்க...''

''எல்லாம் நான் கொடுத்துட்டேன். எனக்கு இதுகூடத் தெரியாதாக்கும்?''

''அப்படியா... அம்மா... அம்மா... என்ன சொன்னாங்க?''

''அவரை ஜாக்ரதையா பார்த்துக் கோங்கோ... ஜாக்ரதை... ஜாக்ரதைன்னு ஒரு நூறு தடவை சொன்னாங்க. அப்புறம்

அவரோட எப்ப வருவீங்கன்னு கேட்டாங்க. கணேசன் கண்ணுல காட்டிட்டு உடனேயே கூட்டிக்கிட்டு வந்துடறேன்னேன். உனக்குக் கோடி புண்ணியம்னாங்க."

"என்னது... என் அப்பாவோட நீங்க போகப் போறீங்களா?"

"ஆமா, இந்த நொண்டிக்காலோட உன்னால எப்படி முடியும்?"

"கண்ணன் சார்... என்ன இது? என் ஆடிட்டர் கணக்கு வழக்கு பார்க்க உதவி யாத்தானே உங்களை அனுப்பி வெச்சார். உங்களுக்கு எதுக்கு என் குடும்பம் மேல இவ்வளவு அக்கறை..?"

"அது சரி... யாரோ ஒரு பிராமண னுக்காக உன் கொள்கை, நம்பிக்கைன்னு எல்லாத்தையும் மூட்டை கட்டி வெச்சுட்டு நீ அந்த பிராமணர் நலனுக்காக பூஜை செய்யலாம் - பதிலுக்கு நான் உனக்கு, உன் குடும்ப சிக்கல்கள் தீர உதவக் கூடாதா?"

கண்ணனின் பதில் கணேஷை வாய டைக்கச் செய்துவிட்டது.

"கண்ணன் சார்... மிஸ்டர் கணேஷோட குடும்பச் சிக்கல்கள் ஒண்ணும் சாதார ணமானதில்ல. அதெல்லாம் தீரணும்னா அதுக்குப் பலகாலம் ஆகும். அப்பா பைத் தியம்... அக்காவுக்கு கணவர் சரியா அமை யல தங்கைக்கு காக்கா வலிப்பு... இதெல் லாம் எப்படிச் சரியாகும்?"

அனுராதா அவன் சார்பில் கேட்ட திலும் நியாயம் இருக்கத்தான் செய்தது.

"இதோ பாரும்மா... ஒரு பொருள் தொலைஞ்சுபோனா தொலைச்ச இடத்துல தேடணும். அப்பத்தான் கிடைக்கும். அந்த இடத்தைத் தவிர உலகம் பூரா தேடினாலும் அது கிடைக்காது. நான் தொலைஞ்ச இடம் தெரிஞ்சு, சரியா தேடத் தெரிஞ்சவன். அதனால நீ சொல்ற அந்தப் பலகாலம்... எனக்குச் சொற்ப காலம். நான் ஒண்ணும் இந்தக் கணேஷ் மாதிரி 'எப்படி நம்பறது ன்னே தெரியலை'ன்னு சந்தேகத்துக்குள்ள நம்பிக்கையை வளர்க்கறவன் இல்ல... நம்பிக்கைக்குள்ள நம்பிக்கையை வளர்க் கறவன்..."

கண்ணனின் பதிலுக்குள் ஒரு ஆழமான உட்பொருள்.

"மிஸ்டர் கண்ணன், இது என்ன உட னடியா நடக்கற விஷயமா?"

"ஏன் நடக்காது? கங்கைல இவர் மூழ்கி னார்னா பாவக் கணக்கு நேராகும். பாவக் கணக்கு நேரானா இந்தப் பாதகமும் ஒரு முடிவுக்கு வந்துதானே தீரணும்?"

"அப்படியா... அப்ப ஊர்ல இருக்கற அவ்வளவு பைத்தியங்களும் இந்தக் கங்கையில மூழ்கினா பாவம் ஒழிஞ்சு போய் அவங்க குணமாயிடுவாங்களா? என்ன சொல்றீங்க நீங்க...?"

"உம்... நிச்சயமா! அதுக்குத்தானே கங்கை இருக்கு. பைத்தியமோ இல்லை வைத்தி யனோ... அவனுக்குள்ள நான் இருக்க, ஐ மீன் அவனோட நான் இருக்க, என்கூட கண்ணன் இருக்கான். இனி எந்தப் பாவமும் என்னை எதுவும் செய்யாது... 'கங்காமாதா என் பாவங்களை வாங்கிக்கோ'ன்னு சொல்லி முழுக்கு போட்டா அவளும் வந்து வாங்கிப்பா. அந்தப் பாவமும் போயே தீரும்... குணப்பாடும் ஏற்பட்டே தீரும். இங்க பாவத்தைவிட மனோபாவம் ரொம்ப முக்கியம்'' என்று சொன்ன கண் ணன்,

"சுவாமிநாதன் சார்... வாங்கோ நாம போவோம்'' என்று எழுந்து அவரைத் தொட்டுத் தூக்க, அவரும் மறுபேச்சு பேசாமல் மந்திரித்த கோழிபோல அவனோடு வெளியேறத் தொடங்கினார்.

கணேஷும் அனுராதாவும் அப்படியே விக்கித்துப் போய் நின்றனர்.

கணேஷிடம் இனம்புரியாத ஒருவித



"இட்லி ஏன் இத்தனை ஜில் லுன்னு இருக்கு!"

"நீங்க நேத்து வந்திருந்தா சூடா சாப்பிட்டிருக்கலாம் சார்!"

- பம்மல் நாகராஜன்



"கபாலியை அரஸ்ட் பண்ண வேண்டிய நேரம் வந்துடுச்சு சார்."
"என்னய்யா சொல்ற?"
"திருந்தப் போறானாம்."
- வீ.விஷ்ணுகுமார்

அவஸ்தை கொந்தளித்தது.

சீனு சாய்வாக படுத்தபடியே சுந்தர காண்டம் படித்துக் கொண்டிருந்தார். அவருக்குப் பக்கத்தில் ராஜம் ஆப்பிளை துண்டாக நறுக்கி தோல் சீவிக் கொண்டிருக்க "அம்மா... அப்பா..." என்கிற பாசம் மிகுந்த குரலோடு வந்து நின்ற சம்பத்தையும் சாருவையும் பார்த்து "சம்ப்பா..." என்று ஒரு புத்துயிரைத் தொட்டாள் ராஜம். சாரு முதல் காரியமாக மாமியாரின் காலில் விழுந்து எழுந்தாள். அப்படியே நீண்டு கிடந்த சீனுவின் கால்களையும் தொட்டு கண்ணில் ஒற்றிக் கொண்டாள். பத்து நொடிகளுக்கும் குறைவான காலகதியில் அவள் வெளிக்காட்டிய அந்தப் பணிவும் பக்தியும் அவளது மாற்றத்தை ஒரு தடிமனான புத்தகம் அளவுக்குச் சொல்லி முடித்தே விட்டன.

"அப்பா எப்படிப்பா இருக்கேள்?"

"இருக்கேன்ப்பா... ஆமா பிரயாணமெல்லாம் நன்னா அமைஞ்சதா?"

"அதெல்லாம் ஒரு பிரச்னையுமில்லைப்பா. வழியெல்லாம் உங்க கவலைதான்..."

"எனக்கு ஒண்ணுமில்லை. உனக்காகத்தான் காத்துண்டுருக்கேன்."

"ஆமாம்பா... நீ எப்ப வருவே உன்னை எப்ப காசிக்கு அனுப்பி அந்தப் பெட்டியை எடுத்துண்டு வரச் சொல்லலாம்னு துடிச்சிண்டே இருந்தார். நல்லவேளை நீ வந்துட்டே..."

"என்னால இப்ப கூட நம்ப முடியலை... இப்படி கூடவாம்மா நடக்கும்?"

"நடந்துடுச்சு... என் கண்ணன் என்னைவிட்டுக் குதிச்சு ஓடிப்போயிட்டான். நர்மதை ஆத்தங்கரைல ஒரு சித்த சன்யாசிகூட எச்சரிக்கை செய்தார். ஆனா பிரயோஜனமில்ல. அவனை யாரால கட்டிப்போட முடியும்?

வழியெல்லாம் அவனால அற்புதங்கள் நடந்தது. ஒரு கர்ப்பவதி வயித்து மேல போய் கொஞ்ச நாழி உக்காந்தான். நர்மதை, கங்கைன்னு எல்லா புண்ணிய நதிகள்லயும் குளிச்சான். இப்ப ஒரு நாத்திகனை மணியாட்ட விட்டுண்டு இருக்கான். தூர இருந்த உங்களையும் ஒண்ணா இங்க கூட்டிண்டு வந்து விட்டுட்டானே..."

"அப்பா நீங்க பதட்டப்படாதீங்க... நான் இப்ப உங்களுக்கு இரண்டு விஷயத்துல உறுதி தரேன். இப்பவே காசிக்குக் கிளம்பிப்போய் அந்தக் கண்ணனோடதான் திரும்ப வருவேன். அதுமட்டுமில்ல... இனி ஒரு நாள்கூட அவனுக்கான பூஜையை விடமாட்டேன். உங்க சார்பா நான் தான் செய்வேன். நீங்க ஓய்வெடுத்துண்டா போறும்பா எனக்கு..."

சம்பத் மிகுந்த உணர்ச்சி வயப்பட்டான்.

"ஆமாம் மாமா... அவசியப்பட்டா வேலையை விட்டுட்டு குணசிலத்துக்கே கூட நாங்க வந்துடறோம்..."

சாரு, சீனுவுக்கு உச்சகட்ட இன்ப அதிர்ச்சி அளித்தாள். அப்படியே சற்று குமட்டுவதுபோல முகம் கோணினாள்.

"என்னம்மா... என்ன ஆச்சு?"

"தெரியலம்மா... ஃப்ளைட்ல வந்தது எனக்கு ஒத்துக்கலை. ஒரே தலை சுத்தல்... வாந்தி..."

"ஐய்யய்யோ... சம்பா இப்பவே டாக்டர் கிட்டகாட்டு. அவர் ஏதாவது மருந்து தரட்டும்" என்றாள் ராஜம். அப்போது சீனுவைப் பரிசோதிக்க டாக்டரும் அவரோடு வியாதியஸ்தர்களுக்காக பிரார்த்தனை செய்யும் சில சாதுக்களும் அங்கே வந்தபடி இருந்தனர். அவர்களில் நர்மதைக் கரையில் எச்சரிக்கை செய்த அந்த சித்த சன்யாசியும் சிரித்தபடியே வந்ததுதான் ஆச்சரியம்!

(தொடரும்)



# ஓசை

**கலாப்ரியா**

**பு**து உண்டியல் தான்
என்றாலும் குலுக்கிப் பார்க்கிறோம்
காசின் ஓசை கேட்கிறதா

**க**ழனியோரம் ரயில்ப் பாதை
கடகடத்து மாலை வண்டி போனதும்
கரையேறுவர் களையெடுக்கும்
பெண்கள்
மறு நாள் வரச்சொல்லி
மௌனமாய்க் காற்றில் வரியெழுதும்
நெல் பயிர்.

**ஹா**வ் ஹாவ் என
தொண்டை வரளத் தேடி
கத்திப் போகிறாள் கருக்கலில்
கீழத்தெருக் கிழவி
கூடடையவில்லை போலும் கோழி.

**வி**தானத்தில் விரிசல்
காண்டாமணியின் நாக்கைக்
கட்டி வைத்திருக்கிறார்கள் கோயிலில்.

**அ**மைதியாய்ச் செல்லும்
வண்ணத்துப் பூச்சிகள்
போல அழகாயில்லை
தேனுண்டு நன்றி கூறும்
வண்டுகள்.

**அ**டங்கிவிட்டது
சிறுசுகளின் ஆர்ப்பாட்டம் சண்டை
அம்மாவின் ஆற்றமாட்டாத
அதட்டல்
வெளிச்சென்று திரும்பிய அப்பா
ஊஞ்சலாடும் ஓசை மட்டும்
இப்போது.

